உ

சிவமயம்.

நாற்கவிராசநம்பி

இயற்றிய

# அகப்பொருள்விளக்கம்.

MADRAS 41
TIRUVANMIYUR

இது

சுன்னாகம்

அ. குமாரசுவாமிப்பிள்ளை

திருக்கோணமலை

த. கனகசுந்தரம்பிள்ளை

என்பவர்களாலே

திருத்தியும் விளக்கியும் புதுக்கப்பட்ட உரையுடன்



சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

பரிதாபி ௵ கார்த்திகைமீ.

இதன்விலை ரூபா ·

# அநுக்கிரமணிகை.

# அகப்பொருட்பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| ௧௬ | ௫௧ | காதலற் | காதலர்க் |
| ௧௬ | ௫௪ | மகனுக்கே | மக்களுக்கே |
| ௨௫ | ௮௧ | விருந்திற் | விருந்தியற் |
| ௫0 | ௧௫ | ௬0—ம. | ௬௧-ம |
| ௮௯ | ௨௧ | கிளத்தல் | கிளத்தல் |
| ௧00 | ௭ | ௪௫ | ௪௨ |
| ௧௬0 | ௧௯ | காதற | காவற |

௧௭௬-ம் பக்கத்தின்பின் பக்கவிலக்கம் தவறிவிட்டது ௪௯௫. ௧௯௬ என்றிருப்பவற்றை முறையே ௧௭௭. ௧௭௮ என்று திருத்திக் கொள்க.

# சிறப்புப்பாயிரம்.



பூமலி நாவன் மாமலைச் சென்னி
ஈண்டிய விமையோர் வேண்டலிற் போந்து
குடங்கையின் விந்த நெடுங்கிரி மிகைதீர்த்
தலைகட லடக்கி மலயத் திருந்த
இருந்தவன் றன்பா லியற்றமி ழுணர்ந்த
புலவர்பன் னிருவருட் டலைவ னாகிய
தொல்காப் பியனரு ளொல்காப் பெரும்பொருள்
அகப்பொரு ளிலக்கண மகப்படத் தழீஇ
இகப்பருஞ் சான்றோ ரிலக்கிய நோக்கித்
தொகுத்த முறைநிறீஇச் சூத்திரம் வகுத்தாங்
கப்பொருள் விளக்கமென் றதற்கொரு நாமம்
புலப்படுத் திருளறப் பொருளவிரித் தெழுதினன்
மாந்தருந் தேவரும் வாழ்த்தமுக் குடைக்கீழ்
ஏந்தெழி லரிமா னேந்துபொன் னணைமிசை
மதிமூன் றுகவிப்ப வுதய மால்வரைக்
கதிரோன் றிருந்தெனக் காண்டக விருந்து
தத்துவம் பகர்ந்தோன் சரணம் பொருந்திய
உத்தமன் புளிங்குடி யுய்யவந் தானெனும்
முத்தமி ழாசான் மைந்த னித்தலத்
திருபெருங் கலைக்கு மொருபெருங் குரிசில்
பாற்கடற் பல்புகழ் பரப்பிய
நாற்கவி ராச நம்பியென் பவனே.

இக்கனைப் பிரகாசத்தார் செய்தது என்பர்

# சிறப்புப்பாயிரம்.

பூமிசை நடந்த,
வாமனை வாழ்த்தி வடமலைச் சென்னி
ஈண்டிய கடவுளர் வேண்டலிற் போந்து
குடங்கையி னலைகட லடக்கி யீண்டிய
தென்மலை யிருந்த விருந்தவ னியற்றமிழ்
கெழீஇய வகப்பொரு டழீஇ நோக்கி
வழிகொடுத் நிரீஇ வகுத்துப் புலப்படுத்தாங்
கிகபபி லகப்பொருள் விளக்கம் பகர்ந்தனனெழுதிச்
செந்தமிழ் நாட்டு மைந்தன் குரிசில்
பாறகடற் பல்புகழ் பரப்பிய
நாறகவி ராச நம்பியென் பவனே.



உ

கணபதி துணை.

# அகப்பொருள் விளக்கம்

## அகத்திணையியல்.

இன்பமாகிய ஒழுக்கத்தின் இலக்கணம் உணர்த்துதலால் இவ்வியல் அகத்திணையியல் எனனும் பெயருடையதாயிற்று. அகம்-இன்பம். திணை-ஒழுக்கம். இயல்-இலக்கணம்.

[அகப்பொருள்வகை.]

க. மலர்தலை யுலகத்துப் புலவோ ராய்ந்த
அருந்தமி ழகப்பொருள் கைக்கிளை யைந்திணை
பெருந்திணை யெனவெழு பெற்றித் தாகும்.

இதன்பொருள். உலகத்துப புலவோரால் ஆராயந்து பேசப் பட்ட அருமையான தமிழநூலிலே வழங்கப்படும் அகப்பொருளானது கைக்கிளை எனவும், ஐந்திணை எனவும், பெருந்திணை எனவும எழுவகையான பெறறியையுடையதாகும். என்றவாறு.

மலர்தலை-விரிநத இடம். புலவர்-அறிஞர். அகப்பொருள்—இன்பமாகிய பொருள், ஒதத அன்பினராகிய ஒருதலைவனும தலைவியும் கூடுங்கால அவ்விருவர் அகத்தும் நிகழநது அவராலே அநுபவிக்கபபடும இனபம் அகம் எனப்பட்டது. அகம்-உள. பெறறி-இயலபு. (க)

[சொல்லப்படுந்திறம்.]

௨. அதுவே;—
புனைந்துரை யுலகிய லெனுந்திற மிரண்டினுந்
தொல்லியல் வழாமற் சொல்லப் படுமே.

இ – ள். அதுவே - அவ்வகப்பொருள்;—தொல் இயல் வழாமல் - பழைய நெறிதவறாமல்,—புனைநதுரை உலகியல் எனும்

திறம் இரண்டினும் சொல்லப்படும் – புனைந்துரை, உலகியல் என
'னும் வகையிரண்டினுலும் சொல்லப்படும். எ - று.

புனைந்துரை - இல்லதனையும் வருணித்துக் கூறுவது. உலகியல் - உலகிலே என்றும் வழங்கும் நெறி; அஃது உள்ளது. திறம்-வகை. (உ)

[கைக்கிளை]

௩. அவற்றுட்;—
**கைக்கிளை யுடைய தொருதலைக் காமம்.**

இ - ள். அவ்வெழுவகையுள்ளே கைக்கிளை என்பது ஒருதலைக்காமமுடையதாகும். எ - று.

கைக்கிளை-ஒருமருங்கு நிகழும் கேண்மை. கை-பக்கம், மருங்கு. கிளை-கேண்மை, உறவு. ஆண்பால், பெண்பால் என்னும் இரண்டனுள் யாதேனும் ஒன்றன்பால் நிகழும் கேண்மை என்க. கைக்கிளை என்பதற்குச் சிற்றுறவு எனபாருமுளர். ஒருதலைக்காமம்-ஓரிடத்துள்ள காமம். அது ஆண்பாற்கைக்கிளை, பெண்பாற் கைக்கிளை என இருவகைப்படும். ஆண்பாற் கைக்கிளை தலைவியைக் கண்டுழித் தோன்றுவது. பெண்பாற் கைக்கிளை தலைவனைக் கண்டுழித் தோன்றுவது. இங்கே கொள்ளப்படுவது ஆண்பாற் கைக்கிளை. (௩)

[ஐந்திணை.]

**௪. ஐந்திணை யுடைய தன்புடைக் காமம்.**

இ - ள். ஐந்திணை என்பது அன்புடைக்காமமுடையதாகும். எ - று.

ஐந்திணை—ஐந்து கூறுபாடாகிய ஒழுக்கம் அ[illegible] தலைவன் தலைவி என்னும் இருவர்மாட்டும் சமமாக நிகழும் மனப்பற்று. காமம்—இன்பம். திணை என்பதற்கு நிலம் எனவும் கூறுவர். (௪)

[பெருந்திணை]

**௫. பெருந்திணை யென்பது பொருந்தாக் காமம்.**

இ - ள். பெருந்திணை என்று சொல்லப்படுவது பொருந்தாக காமமுடையதாகும். எ - று.

பெருந்திணை-பெருமையாகிய ஒழுக்கம். கைக்கிளையும், குறிஞ்சிமுதலிய ஐந்திணையும் எட்டுவகை மணத்துள் நான்கும் பெறத்

கான் ஒன்றுமே தனி நின்று நான்குமணமும் பெறுதலால் இது பெருந்திணை எனப்பட்டது. எட்டுவகை மணமும் பின்னர்க் கூறப்படும். தலைவன், தலைவி என்னும் இருவருக்கும் ஒத்த அன்பின்மைபற்றிப் பொருந்தாக் காமம் என்றார். பொருந்தாக்காமம் - ஒவ்வாதகாமம். (௫)

[ஐந்திணைக்குரியபெயர்.]

௬. குறிஞ்சி பாலை முல்லை மருதம்
நெய்தலைந் திணைக் கெய்திய பெயரே.

இ - ள். குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐந்தும் முற்கூறப்பட்ட ஐந்து திணைக்கும் காரணம்பற்றி வந்தெய்திய பெயராகும். எ - று.

குறிஞ்சி என்னும் மரம் சிறந்து நிற்கும் நிலத்திற்குக் குறிஞ்சி எனவும், பாலை என்னும் மரஞ் சிறந்து நிற்கும் நிலத்திற்குப் பாலை எனவும், முல்லை என்னும் மரஞ்சிறந்து நிற்கும் நிலத்திற்கு முல்லை எனவும், மருதம் என்னும் மரஞ்சிறந்து நிற்கும் நிலத்திற்கு மருதம் எனவும், நெய்தல் என்னும் மரஞ்சிறந்து நிற்கும் நிலத்திற்கு நெய்தல் எனவும் பெயர் கூறப்பட்டதென்று முன்னுரைகாரர் கூறுவர். இப்பெயர்களுக்கு வேறு காரணம் கூறுவாருமுளர். (௬)

[ஐந்திணைப்பொருள்.]

௭. அவைதாம்,—
முதற்பொருள் கருப்பொருளுரிப்பொருளென மு
நுதற்பொருள் மூன்றினு நுவலப் படுமே. [றை

இ — ள். குறிஞ்சி முதலிய அவையைந்தும், முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என முறையே கருதப்படுதலையுடைய பொருள்கள் மூன்றினும் இவையிவை என்று சொல்லப்படும். எ - று.

கருப்பொருள் தோன்றற்கும், உரிப்பொருள் நிகழ்தற்கும் காரணமாய் முன்னிற்கும் பொருளை முதற்பொருள் என்றும், அம்முதற்பொருளாகிய கருவினின்றுந் தோன்றும் பொருளைக் கருப்பொருள் என்றும், இவையிரண்டினுஞ் சிறந்து திணைக்கு உரியதாய நிற்கும் பொருளை உரிப்பொருள் என்றுங் கூறினார் என்க. நுதல் - நுதலல். (௭)

[முதற்பொருளின்வகை.]

௮. நிலமும் பொழுதுமென முதலிரு வகைத்தே.

இ - ள். நிலமும் பொழுதும் என முதற்பொருள் இரண்டுவ
கையுடையதாகும். எ - று. (அ)

[நிலத்தின்வகை.]

கூ. வரையே சுரமே புறவே பழனம்
திரையே யவையவை சேர்தரு மிடனே
எனவீ ரைவகைத் தணையிய னிலமே.

இ - ள். வரையும், சுரமும், புறவும், பழனமும், திரையும், ஆகியவை அவை சேர்தரும் இடங்களாகிய வரைசார்ந்தவிடம், சுரஞ்சார்ந்தவிடம், புறவுசார்ந்தவிடம், பழனஞ்சார்ந்தவிடம், திரைசார்ந்தவிடம் என்பவையும் எனப் பத்துவகையினையுடையது [illegible] வியல்புடையநிலம். எ - று.

அணையியனிலம் என்பது எழுவாய். ஈரைவகைத்து என்பது பயனிலை. வரை - மலை. சுரம் - வேனிலாலே தெறப்படும் நிலம். புறவு-காடு. பழனம்-வயல். திரை-கடல். மலையும், மலைசார்ந்த நிலமும் குறிஞ்சி. சுரமும், சுரஞ்சார்ந்த நிலமும் பாலை. காடும், காடுசார்ந்தநிலமும் முல்லை. வயலும், வயல்சார்ந்தநிலமும் மருதம். கடலும், கடல்சார்ந்தநிலமும் நெய்தல். (கூ)

[பொழுதின்வகை.]

க0. பெரும்பொழு தென்று சிறுபொழு தென்று
இரண்டு கூற்ற தியம்பிய பொழுதே.

இ - ள். முற்கூறப்பட்ட பொழுது பெரும்பொழுது என்றும், சிறுபொழுது என்றும் இரண்டு வகையுடையது. எ - று. ()

[பெரும்பொழுதின்வகை.]

கக. காரே கூதிர் முன்பனி பின்பனி
சீரிள வேனில் வேனி லென்றாங்
கிருமூன் றிறத்தது தெரிபெரும் பொழுதே.

இ - ள். புலவராலே தெரியப்பட்ட பெரும்பொழுது கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், வேனில் என ஆறு பாகுபாடுடையது. எ - று.

ஆவணியும் புரட்டாதியும் கார். ஐப்பசியும் கார்த்திகையும் கூதிர். மார்கழியும் தையும் முன்பனி. மாசியும் பங்குனியும் பின்பனி. சித்திரையும் வைகாசியும் இளவேனில். ஆனியும் ஆடியும் வேனில். வேனிலை முதுவேனில் என்பாருமுளர். இந்தப் பெரும்

பொழுது ஆறினையும் ஆறுபருவம் என்றும், ஆறு இருது என்றும் கூறுவர். மாலை, யாமம் முதலியவற்றை நோக்க இவை பெரியனவாதல் பற்றிப் பெரும்பொழுது எனப்பட்டன. (௧௧)

[சிறுபொழுது.]

௧௨. மாலை யாமம் வைகறை யெற்படு
காலை வெங்கதிர் காயுநண் பகலெனக்
கைவகைச் சிறுபொழு தைவகைத் தாகும்.

இ - ள். மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல் எனச் சிறுபொழுது ஐந்துவகையினையுடைத்தாகும். எ - று.

மாலை-சூரியன் அஸ்தமிக்கும் சாயங்காலம். யாமம்-மாலைக்கும் வைகறைக்கும் இடையிலுள்ள இராக்காலம். வைகறை - சூரியோதயத்துக்கு முன்னுள்ள விடியற்காலம். காலை - சூரியனுதிக்கும் காலம். நண்பகல் — உச்சிக்காலம். கைவகை-ஒழுக்கவகை. இவ்வாறே கந்தபுராணகாரரும் "காலை வெம்பகல் சதிரவன் குடதிசை கரக்கும்—மாலை யாமம் வைகறை யெலாம்" என ஐவகைச் சிறுபொழுதும் கூறினர். உரைகாரர் மாலை என்பதற்கு "உச்சிக்குப் பின்னும் ஆதித்தன் படுவதற்கு முன்னும் உண்டாகிய காலம்" எனவும், எற்படுகாலை என்பதற்கு "ஆதித்தன் படுகின்ற பொழுது" எனவும் உரைகூறினர். அவ்வுரை பொருந்தாமை தொல்காப்பியச் சூத்திரவிருத்தியால் இனிது புலப்படும். எற்படு என்பது காலை என்பதனை நன்கு புலப்படுத்த வந்த அடைமொழி. எற்படுகாலை—சூரியன் தோன்றும் காலை. எல்—சூரியன். படுதல்-தோன்றுதல் ()

[குறிஞ்சிக்குரியபொழுது.]

௧௩. அவற்றுள்;—
கூதிர் யாம முன்பனி யென்றிவை
ஓதிய குறிஞ்சிக் குரிய வாகும்.

இ - ள். பெரும்பொழுது, சிறுபொழுது என இருவகையாயுள்ள பதினொருபொழுதுகளுள்ளே கூதிர் என்னும் பெரும்பொழுதும், யாமம் என்னும் சிறுபொழுதும், முன்பனி என்னும் பெரும்பொழுதும் என்று சொல்லப்பட்ட இவைமூன்றும் குறிஞ்சிநிலத்துக்குரிய பொழுதுகளாகும். எ - று.

கூதிர்போலக் குறிஞ்சிக்கு முன்பனி சிறப்புடையதாகாமை தோன்றுமாறு நடுவே யாமம் என்னும் சிறுபொழுதினைப் பிரித்துக் கூறினர். (௧௩)

[பாலைக்குரியபொழுது.]

**௧௪. வேனி னண்பகல் பின்பனி யென்றிவை**
**பான்மையி னுரிய பாலை தனக்கே.**

இ - ள். வேனில் என்னும் பெரும்பொழுதும், நண்பகல் என்னும் சிறுபொழுதும், பின்பனி என்னும் பெரும்பொழுதும் என்னும் இவைமூன்றும் பாலைநிலத்துக்குரிய பொழுதுகளாகும். எ - று.

பான்மை-தகுதி, முறை. பின்பனி வேனில் போலப் பாலைக்குச் சிறப்பாகாமை, நண்பகற்குப் பின்வைத்ததனாற் பெறப்படும்.

[முல்லைக்குரியபொழுது.]

**௧௫. மல்குகார் மாலை முல்லைக் குரிய.**

இ - ள். கார் என்னும் பெரும்பொழுதும், மாலை என்னும் சிறுபொழுதுமாகிய இரண்டும் முல்லைநிலத்துக்குரிய பொழுதுகளாம். எ - று. (௧௫)

[மருதத்துக்குரிய சிறுபொழுது.]

**௧௬. இருள்புலர் காலை மருதத்திற் குரித்தே.**

இ - ள். விடியல் என்னும் சிறுபொழுது மருதத்துக்கு உரியதாகும். எ - று.

இருள் புலர் காலை - இருள் நீங்குகின்ற காலம்; விடியல் என்றவாறு. (௧௬)

[நெய்தற்குரிய சிறுபொழுது.]

**௧௭. வெய்யோன் பாடு நெய்தற் குரித்தே.**

இ - ள். சூரியன் தோன்றும் காலமாகிய காலை என்னும் சிறுபொழுது நெய்தலுக்கு உரியதாகும். எ - று.

வெய்யோன்பாடு - சூரியன் தோன்றுதலையுடைய காலம்; காலை என்றவாறு. வெய்யோன்-சூரியன். பாடு-படுதலுடையது. வெய்யோன் பாடெனினும் எற்பாடெனினும் ஒக்கும். வெய்யோன்பாடு என்பது அடிப்பாடு, கடப்பாடு என்பன போலப் பின்மொழியாகிய படு என்பது நீண்டுநின்ற பெயராகி இரண்டுஞ் சேர்ந்து ஒருசொன்னீர்மையாயிற்று. (௧௭)

[மருதநெய்தல்களின் பெரும்பொழுது.]

௧௮. மருத நெய்த லென்றிவை யிரண்டிற்கும்
உரிய பெரும்பொழு திருமூன் றும்மே.

இ - ள். காலைமுதலிய பெரும்பொழுதுகள் ஆறும் மருதம் நெய்தல் என்று சொல்லப்பட்ட இவையிரண்டிற்கும் உரியனவாகும். எ - று. (௧௮)

[கருப்பொருளின்வகை.]

௧௯. ஆரணங் குயர்ந்தோ ரல்லோர் புள்விலங்
கூர்நீர் பூமர முணாப்பறை யாழ்பண்
டொழிலெனக் கருவீ ரெழுவகைத் தாகும்.

இ - ள். தெய்வமும், உயர்ந்தோரும், அவரல்லோராகிய தாழ்ந்தோரும், பறவையும், விலங்கும், ஊரும், பூவும், மரமும், உணவும், பறையும், யாழும், பண்ணும், தொழிலும் எனக் கருப்பொருள் பதினான்குவகையுடைத்தாகும். எ - று.

ஆரணங்கு—தெய்வம். (௧௯)

[குறிஞ்சிக்கருப்பொருள்.]

௨௦. விறற்சேய் பொருப்பன் வெற்பன் சிலம்பன்
குறத்தி கொடிச்சி குறவர் கானவர்
குறத்தியர் கிளிமயின் மறப்புலி குடாவடி
கறையடி சீயஞ் சிறுகுடி யருவி
நறுஞ்சுனை வேங்கை குறிஞ்சி காந்தள்
ஆரந் தேக்ககி லசோக நாகம்
வேர லைவனந் தோரை யேனல்
கறங்கிசைத் தொண்டகங்குறிஞ்சியாழ்குறிஞ்சி
வெறிகோ ளைவனம் வித்தல் செறிகுரற்
பைந்தினை காத்தல் செந்தே னழித்தல்
செழுங்கிழங் ககழ்தன் முழங்கிவீ ழருவியொடு
கொழுஞ்சுனையாடல்குறிஞ்சிக்கருப்பொருளே.

இ - ள். சேய் என்பது முதலாகச் சுனையாடல் என்பதீறாக இங்கே சொல்லப்பட்டன எல்லாம், குறிஞ்சிக்குரிய கருப்பொருள்களாகும். எ - று.

இங்கே கூறப்பட்ட தெய்வம் உயர்ந்தோர் முதலிய பதினான்கு வகைகளையும் தனித்தனி பிரித்துக் காட்டுதும்.

| | | |
|---|---|---|
| க. | தெய்வம் | சேய் (= முருகக்கடவுள்.) |
| உ. | உயர்ந்தோர் | பொருப்பன், வெற்பன் சிலம்பன் குறத்தி, கொடிச்சி. |
| ரு. | தாழ்ந்தோர் | குறவர், கானவர், குறத்தியர். |
| ச. | புள் | கிளி, மயில் |
| ரு. | விலங்கு | புலி, கரடி, யானை, சிங்கம். |
| சு. | ஊர் | சிறுகுடி |
| எ. | நீர் | அருவிநீர், சுனைநீர். |
| அ. | பூ | வேங்கைப்பூ, குறிஞ்சிப்பூ, காந்தட்பூ. |
| கூ. | மரம் | சந்தனம், தேக்கு, அகில், அசோகு, நாகம், மூங்கில். |
| க0. | உணவு | மலைநெல், மூங்கிலரிசி, தினை. |
| கக. | பறை | தொண்டகப்பறை. |
| கஉ. | யாழ் | குறிஞ்சியாழ். |
| கரு. | பண் | குறிஞ்சிப்பண். |
| கச. | தொழில் | வெறியாடல், மலைநெல் விதைத்தல், தினைகாத்தல், தேனழித்தெடுத்தல், கிழங்ககழ்ந்தெடுத்தல், அருவிநீராடல், சுனைநீராடல். |

விறல்-வலி. குடாவடி-கரடி, வளைந்தபாதமுடையது எனப் பொருள்படும். குடா-வளைவு. கறையடி-யானை; உரல்போலுமடியுடையது எனப்பொருள்படும். கறை-உரல். அரம்-சாந்தமரம். நாகம் - ஒருவகைமரம். வேரல் - மூங்கில். ஐவனம் - மலைநெல். வெறிகோள்-வெறியாடல். (உ0)

[பாலைக்கருப்பொருள்.]

உக. கன்னி விடலை காளை மீளி
இன்னகை யெயிற்றி யெயினர் எயிற்றியர்
மறவர் மறத்தியர் புறவுபருந் தெருவை
கழுகு செந்நாய் கல்கெழு குறும்பு
குழிவறுங் கூவல் குராஅ மராஅ
உழிஞை பாலை யோமை யிருப்பை
வழங்குகதிக்கொண்டன செழும்பதிக்கவர்ந்தன
பகைத்துடி பாலையாழ் பஞ்சுரம் வெஞ்சமம்
பகற்சூறை யாடல் பாலைக் கருப்பொருளே.

இ - ள். கன்னி என்பது முதலாகப பகற்குறைபாடல் என்பது ஈறாக இங்கே சொல்லப்பட்டவைகளெல்லாம் பாலைக்குரிய கருப்பொருள்களாகும். எ - று.

| | | |
|---|---|---|
| க. | தெய்வம் | கன்னி (= துர்க்கை.) |
| உ. | உயர்ந்தோர் | விடலை, காளை, மீளி, எயிற்றி. |
| ௩. | தாழ்ந்தோர் | எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர். |
| ௪. | புள் | புறா, பருந்து, எருவை, கழுகு. |
| ரு. | விலங்கு | செந்நாய். |
| கூ. | ஊர் | குறும்பு. |
| எ. | நீர் | நீரில்லாக்குழி, நீரில்லாக்கிணறு. |
| அ. | பூ | குராஅம்பூ, மராஅம்பூ. |
| கூ. | மரம் | உழிஞை, பாலை, ஓமை, இருப்பை. |
| க0. | உணவு | வழியிற்பறித்தபொருள், பதியிற்கவர்ந்தபொருள். |
| கக. | பறை | துடி. |
| கஉ. | யாழ் | பாலையாழ். |
| க௩. | பண் | பஞ்சுரம். |
| க௪. | தொழில் | போர்செய்தல், பகற்குறையாடுதல். |

நகை-சிரிப்பு. எருவை-ஒருவகைக் கழுகு. கல்-பாறைக்கல்லு. வழங்குகதி-செல்லும்வழி. பதி-ஊர். வெஞ்சமம்-யுத்தம். குறையாடல்-கொள்ளை பாடல். (உக)

[முல்லைக்கருப்பொருள்.]

உஉ. நெடுமால் குறும்பொறை நாடன் றோன்றல்
வடுவில் கற்பின் மனைவி கிழத்தி
இடைய ரிடைச்சிய ராய ராய்ச்சியர்
கான வாரண மான்முயல் பாடி
குறுஞ்சுனை கான்யாறு குல்லை முல்லை
நிறங்கிளர் தோன்றி பிறங்கலர்ப் பிடவங்
கொன்றை காயா மன்றலங் குருந்தந்
தாற்றுக்கதிர் வரகொடு சாமை முதிரை
ஏற்றுப்பறை முல்லை யாழ்சா தாரி
சாமை வரகு தாமுடன் வித்தல்
அவைகளை கட்ட லரிதல் கடாவிடல்
செவிகவர் கொன்றைத் தீங்குழ லூதன்
மூவின மேய்த்தல் சேவினந் தழுவல்

**கழுமிய குரவையொடு கான்யா றென்றிவை**
**முழுதுட னுடன் முல்லைக் கருப்பொருளே.**

இ — ள். நெடுமால் என்பது முதலாக கான்யாற்றுடல் என்பது வரையும் இங்கே சொல்லப்பட்டவைகளெல்லாம் முல்லைக் குரிய கருப்பொருள்களாம். எ — று.

| | | |
|---|---|---|
| ௧. | தெய்வம் | நெடுமால் (= விட்டுணு) |
| ௨. | உயர்ந்தோர் | குறும்பொறை நாடன், தோன்றல், மனைவி, கிழத்தி. |
| ௩. | தாழ்ந்தோர் | இடையர், இடைச்சியர், ஆயர், ஆயச |
| ௪. | புள் | காட்டுகோழி. |
| ௫. | விலங்கு | மான், முயல் |
| ௬. | ஊர் | பாடி. |
| ௭. | நீர் | குறுஞ்சுனைநீர், கான்யாற்றுநீர். |
| ௮. | பூ | குல்லைபபூ, முல்லைப்பூ, தோனறிப்பூ, பிடவமபூ. |
| ௯. | மரம | கொனறை, காயா, குருநதம். |
| ௧0. | உணவு | வரகு, சாமை, முதிரை. |
| ௧௧. | பறை | ஏறங்கோட்பறை. |
| ௧௨. | யாழ | முல்லையாழ். |
| ௧௩. | பண் | சாதாரி. |
| ௧௪. | தொழில | சாமை விளைத்தல், வரகுவிதைதசதல. அவறறின களைகட்டல், அவறறைய ரிதல், கடாவிடுதல், கொன்றைக்கு ழலூதல், மூவினமேயத்தல், கொல லேறுதழுவுதல், குரவைக்கூததா டல், கானயாறறுடல். |

வடு-குற்றம். மன்றல்-பரிமளம்.தாறு-குலை. முதிரை-கடலை, துவரை முதலிய சிறுதானியம். கடாவிடல் - சூடுமிதிப்பித்தல, கொன்றைக்குழல் - கொன்றைக்காயைத் துளைத்தாக்கிய குழல். மூவினம்-மாடு, ஆடு, எருமை என்பன. சேவினந்தழுவல் - கொல் லுந்தொழிலுடைய வலிய எருதுகளைத் தழுவிப் பிடித்து அடக்கு தல். குரவை-பெண்கள் கைகோத்தாடும் கூத்து. (௨௨)

## [மருதக்கருப்பொருள்.]

**௨௩. இந்திர னூரன் பைந்தார் மகிழ்நன்**
**கெழுதகு கற்பிற் கிழத்தி மனைவி**

## அகத்திணையியல்.

உழவ ருழத்தியர் கடையர் கடைச்சியர்
மழலைவண் டான மகன்றி னாரை
அன்னம் போதா நன்னிறக் கம்புள்
குருகு தாரா வெருமை நீர்நாய்
பெருகிய சிறப்பிற் பேரூர் மூதூர்
யாறு மனைக்கிண றிலஞ்சி தாமரை
நாறிதழ்க் கழுநீர் நறுமலர்க் குவளை
காஞ்சி வஞ்சி பூஞ்சினை மருதம்
செந்நெல் வெண்ணெ லநநெ லரிகிணை
மன்றன் முழவ மருதயாழ் மருதம்
மன்றணி விழாக்கோள வயற்களை கட்டல்
அரிதல் கடாவிட லகன்குளங் குடைதல்
வருபுன லாடன் மருதக்கருப் பொருளே.

இ - ள். இந்திரன் என்பது முதலாக வருபுனலாடல் என்பது வரையும் இங்கே கூறப்பட்டவைகளெல்லாம் மருதத்துக்குரிய கருப்பொருள்களாகும். எ - று.

| | | |
|---|---|---|
| | தெய்வம் | இந்திரன். |
| | உயர்ந்தோர் | ஊரன், மகிழ்நன், கிழத்தி, மனைவி |
| | தாழ்ந்தோர் | உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர். |
| | | வண்டானம், மகன்றில், நாரை, அன்னம், பெருநாரை, கம்புள், குருகு, தாரா. |
| ௫ | விலங்கு | எருமை, நீர்நாய் |
| ௬. | ஊர் | பேரூர், மூதூர். |
| ௭. | நீர் | யாற்றுநீர், கிணற்றுநீர், குளத்துநீர். |
| ௮ | பூ | தாமரைப்பூ, கழுநீர்ப்பூ, குவளைப்பூ. |
| ௯. | மரம் | காஞ்சி, வஞ்சி, மருதம். |
| ௧௦. | உணவு | செந்நெலரிசி, வெண்ணெலரிசி. |
| ௧௧. | பறை | நெல்லரிகிணை, மணமுழவு. |
| ௧௨. | யாழ் | மருதயாழ். |
| ௧௩. | பண் | மருதப்பண். |
| ௧௪. | தொழில் | விழாச்செய்தல், வயற் களைகட்டல், நெல்லரிதல், கடாவிடுதல், குளங்குடைதல், புதுநீராடல். |

தார்-மாலை. மகன்றில்-ஒருபுள். வண்டானம் - கொய்யடிநாரை. கம்புள்-சம்பங்கோழி. குருகு-நாரை. இலஞ்சி-குளம். மன்றல்-விவாகம். வருபுனல்-புதுநீர். (உரு)

[நெய்தற்கருப்பொருள்.]

உச. வருணன் சேர்ப்பன் விரிதிரைப் புலம்பன்
பருமவ லகுற் பரத்தி நுளைச்சி
நுளையர் நுளைச்சியர் பரதர் பரத்தியர்
அளவ ரளத்திய ரலைகடற் காக்கை
சுறவம் பாக்கம் பெறலரும் பட்டினம்
உவர்நீர்க் கேணி கவர்நீர் நெய்தல்
கண்டகக் கைதை முண்டக மடம்பு
கண்டல் புன்னை வண்டிமிர் ஞாழல்
புலவுமீ னுப்பு விலைகளிற் பெற்றன
நளிமீன் கோட்பறை நாவாய்ப பம்பை
விளரியாழ் செவ்வழி மீனுப்புப் படுத்தல்
உணங்கலை விற்றன் மீனுணக்கல்புள்ளோப்பல்
நெடுங்கட லாட னெய்தற்கருப் பொருளே.

இ - ள். வருணன் என்பது முதலாகக் கடலாடல் என்பது வரையும் இங்கே கூறப்பட்டனவெல்லாம் நெய்தற்குரிய கருப்பொருள்களாகும். எ - று.

| | | |
|---|---|---|
| க. | தெய்வம் | வருணன். |
| உ. | உயர்ந்தோர் | சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி |
| ங. | தாழ்ந்தோர் | நுளையர், நுளைச்சியர், பரதர், பரத்தியர், அளவர், அளத்தியர். |
| ச. | புள் | கடற்காகம். |
| ரு. | விலங்கு | சுறுமீன். |
| சு. | ஊர் | பாக்கம், பட்டினம். |
| எ. | நீர் | உவர்நீர்க்கேணி, கவர்நீர். |
| அ. | பூ | நெய்தற்பூ, தாழம்பூ, முண்டகப்பூ, அடம்பம்பூ. |
| கூ. | மரம் | கண்டல், புன்னை, ஞாழல். |
| க0. | உணவு | மீனும் உப்பும் விற்றுப் பெற்ற பொருள். |
| கக. | பறை | மீன்கோட்பறை, நாவாய்ப்பம்பை. |

கஉ. யாழ் — விளரியாழ்.
கங. பண் — செவ்வழிப்பண்.
கச. தொழில் — மீன்பிடித்தல், உப்புண்டாக்கல், அவை விற்றல், மீனுணக்கல், அவற்றையுண்ணவரும் பறவைகளை யோட்டுதல், கடலாடல்.

கண்டகம் - முள்ளுரு முண்டகம் - கடன்முள்ளி. கண்டல் - ஒருமரம். நளி-பெருமை. நாவாய்-தோணி. படுத்தல் - உண்டாக்கல், வலையகப்படுத்தல். உணக்கல்-உலர்த்தல். (உச)

## [உரிப்பொருள்.]

உரு. புணர்தலும் பிரிதலு மிருத்தலு மூடலும்
இரங்கலு மிவற்றி னிமித்தமு மெனவாங்
கெய்திய வுரிப்பொரு ளாயிரு வகைத்தே.

இ - ள். புணர்தலும், பிரிதலும், இருத்தலும், ஊடலும், இரங்கலுமாகிய ஐந்தும், இவைகளின் நிமித்தங்களாகிய புணர்தனிமித்தம், பிரிதனிமித்தம், இருத்தனிமித்தம், ஊடனிமித்தம், இரங்கனிமித்தம் என்னும் ஐந்துமாகத் திணைகளைந்திற்கும் முறையே எய்திய உரிப்பொருள்கள் பத்துவகையுடையன. எ - று.

புணர்தலும், புணர்தனிமித்தமும் குறிஞ்சிக்குரிய பொருள் எனவும், பிரிதலும், பிரிதனிமித்தமும் பாலைக்குரிய பொருள் எனவும், இருத்தலும், இருத்தனிமித்தமும் முல்லைக்குரிய பொருள் எனவும், ஊடலும், ஊடனிமித்தமும் மருதத்துக்குரிய பொருள் எனவும், இரங்கலும், இரங்கனிமித்தமும் நெய்தற்குரிய பொருள் எனவும் அறிக.

புணர்தன் முதலியனவும் பொருளாகுமா என்றும் சிலர் ஐயுறுவர். உலகிலுள்ள பொருள்களெல்லாம் உள்ளது எனப் பட்டு உருவங்காணப்படுவனவும், உருவங்காணப்படாமல் உள்ளது எனப்படுவனமாத்திரமாகக் கொள்ளப்படுவனவும் என இருவகையாகும். இங்கே ஐந்திணைக்கும் கூறப்பட்ட பொருள்களுள்ளே சில உருவம் காணப்படுவனவும், சில உருவமின்றி உள்ளதெனப் படுவனவுமாய் நிற்கும் பொருள்கள் என அறிக.

முதற்பொருள் முதலிய மூவகைப் பொருள்களும் பற்றிக் குறிஞ்சித்திணை முதலியன வருதற்கு உதாரணம் காட்டுதும்.

[குறிஞ்சி.]

இன்னிசை யுருமொடு கனைதுளி தலைஇ
மன்னுயிர் மடிந்த பானாட் கங்குற்
காடுதேர் வேட்டத்து விளிவிடம் பெறாஅது
வரியதள் படுத்த சேக்கைத் தெரியிழை
தேனாறு கதுப்பிற் கொடிச்சியர் தந்தை
கூதிரிற் செறியுங் குன்ற நாட
வனைந்து வரலிளமுலை ஞெமுங்கப் பல்லூழ்
விளங்கு தொடி முன்கை வளைந்து புறஞ்சுற்ற
நின்மார் படைதலி னினிதா கின்றே
நும்மில் புலம்பினு முள்ளுதொறு நலியும்
தண்வர லசைஇய பண்பில் வாடை
பதம்பெறு கல்லா திடம்பார்த்து நீடிய
மனைமர மொசிய வொற்றிப்
பலர்மடி கங்குனின் னெடும்புறநிலையே. [அகம்]

இங்கே பானாட்கங்குல் என்பதனால் யாமம் என்னும் சிறுபொழுதும், கூதிர் என்னும் பெரும்பொழுதும், குன்றநாடன் கொடிச்சியர் என்னும் கருப்பொருள்களும், இளமுலை ஞெமுங்க நின்மார்படைதலின் என்பதனாற் புணர்தல் என்னும் உரிப்பொருளும் பிறவும் வந்து குறிஞ்சித்திணையைப் புலப்படுத்தியவாறறிக. எல்லாப்பொருள்களும் வரவேண்டும் என்னும் நியமமில்லை.

[பாலை.]

அறியாய் வாழி தோழி யிருளற
விசும்புடன் விளக்கும் விரைசெலற் றிகிரிக்
கடுங்கதி ரெறித்த விடுவாய் நிறைய
நெடுங்கான் முருங்கை வெண்பூத் தாஅய
நீரற வறந்த நிரம்பா நீளிடை
வள்ளெயிற்றுச் செந்நாய் வருந்துபசிப் பிணவொடு
கள்ளியங் காட்ட கடத்திடை யுழிஞ்சில்
உள்ளூன் வாடிய சுரிமூக்கு நொள்ளை
பொரியரை புதைத்த புலம்புகொ ளியவின்
விழுத்தொடை மறவர் வில்லிட வீழ்ந்தோர்
எழுத்துடை நடுக லின்னிழல் வதியும்

அருஞ்சுரக் கவலை நீந்தி யென்றும்
இல்லோர்க் கில்லென் றியைவது கரத்தல்
வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்
பொருளே காதலர் காதல்
அருளே காதல ரென்றி நீயே. அகம்.

இங்கே கள்ளி, உழிஞ்சில், செந்நாய், மறவர் முதலியனவாக வந்தவை பாலைக்குரிய பொருள்கள்.

[முல்லை.]

முல்லை வைந்நுனை தோன்ற வில்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ
இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய விரலை தெறிப்ப
மலர்ந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்பக்
கருவி வானங் கதழுறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானங்
குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுற லஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேரின்
உதுக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தட்
போதவி ழலரி நாறும்
ஆய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே. அகம்.

இங்கே வந்த முல்லை, கொன்றை, மான், கார்காலம், குறும்பொறைநாடன், தோன்றி முதலியன முல்லைக்குரிய பொருள்கள்.

[மருதம்.]

நெடுங்கொடி நுடங்கு நறவுமலி பாக்கத்து
நாட்டுறைப் பட்ட மோட்டிரு வராஅற்
றுடிக்கட் கொழுங்குறை நொடுத்துண் டாடி
வேட்ட மறந்து துஞ்சுங் கொழுநர்க்குப்

பாட்டி யாமபலிலை யமலை வெஞ்சோறு
தீம்புளிப் பிரம்பின் றிரள்கனி பெய்து
விடியல் வைகறை யிடூஉமூர
தொடுகலங் குறுக வார றனைந
கண்கவி னழிந்த கனப்பற் றெறுவர
வொனறுமொழிக் கோசர்க் கொன்றுமுரண் போகிய
கடுந்தேர்த் திதியன் முந்தைக் கொடுங்குழை
யனன மிஞிலியி னியலுமம
நின்னலத் தகுவிளை முயங்கிய மாறே. அகம்.

இங்கே வந்த மூதூர், அரம்பை, வைகறை, வரால் முதலியன மருதத்திற்குரிய பொருள்கள்.

[நெய்தல்]

கானல் மாலைக் கழிப்பூக் கூம்ப
நீனிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப
மீன்னாரு குருகின் மென்பறைத் தொழுதி
குவையிரும் புன்னைக் குடம்பை சேர
அசைவண் டார்க்கு மல்குறு காலைத்
தாழை தளரத் தூக்கி மாலை
அழிதக வந்த கொண்டலொடு கழிபடர்க்
காமர் நெஞ்சங் கையறுபு வினைய
அயாஅஞ் செய்தநம் மருளா ராயினும்
மறாஅ லியரோ வவருடைக் கேண்மை
அளியின் மையி னவணுறை முனைஇ
வாரா கதில்ல தோழி கழனி
வெண்ணெல் லரிநர் பின்றைத் ததும்பும்
தண்ணுமை வெரீஇய தடந்தா ளாரை
செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண்ணை
அகமடற் சேக்குந் துறைவன்
இன்றுயின் மார்பிற் சென்றவென் னெஞ்சே. அகம்.

இங்கே வந்த கடல், புன்னை, தாழை முதலியன நெய்தற்குரிய பொருள்கள். (உ௫)

[கைகோள்வகை]

உசு. அளவி லின்பத் தைந்திணை மருங்கிற்
களவுகற் பெனவிரு கைகோள் வழங்கும்.

இ - ள். அளவில்லாத இன்பத்தினையுடைய ஐந்திணையிடத்தே களவு என்றும், கற்பு என்றும் இரண்டு வகையான கைகோள் நடக்கும். எ - று.

கைகோள்-ஒழுக்கங்கோடல். கை - ஒழுக்கம். கோள் - கொள்ளல். (உசு)

[களவொழுக்கின்கணிகழும் புணர்ச்சிவகை.]

உஎ. இயற்கைப் புணர்ச்சி யிடந்தலைப் பாடு
பாங்கற் கூட்டம் பாங்கியிற் கூட்டமென்
றுணர்த்திய களவிற் புணர்ச்சி நால்வகைத்தே.

இ - ள். முற்சூத்திரத்திலே அறிவிக்கப்பட்ட களவிற் புணர்ச்சியானது இயற்கைப்புணர்ச்சி என்றும், இடந்தலைப்பாடு என்றும், பாங்கற்கூட்டம் என்றும், பாங்கியிற்கூட்டம் என்றும் சொல்லப்படும் வகை நான்குடையது. எ - று.

உணர்த்தல் - அறிவித்தல். (உஎ)

[கைக்கிளைநிகழ்தற்குரியகாலம்.]

உஅ. மெய்க்கிளை யாழோர் வேண்டும் புணர்ச்சிமுன்
கைக்கிளை நிகழ்தல் கடனென மொழிப.

இ - ள். களவுப்புணர்ச்சிமுன் கைக்கிளைநிகழ்தல் கடன் என்று சொல்லுவர் புலவர். எ - று.

யாழோர்வேண்டும்புணர்ச்சி-களவுப்புணர்ச்சி. யாழோர்-கந்தருவர். மெய்க்கிளையாழ்-மெய்பொருந்திய கிளை என்னும் நரம்பினையுடைய யாழ். மெய்-பொருள். (உஅ)

[கைக்கிளை.]

உகூ. அதுவே,
காமஞ் சான்ற விளமை யோள்வயிற்
குறிப்பறி காறுங் குறுகாது நின்று
குறிப்படு நெஞ்சொடு கூற லாகும்.

இ - ள். அக்கைக்கிளை நிகழ்தல் இன்பம் நுகர்தல் நன்கமைந்த இளமையையுடைய தலைமகளிடத்துண்டாய குறிப்பினைத் தலை

மகன் தான் அறியும் வரையும்அவளை அணுகாது நின்று தன்வழிப்படும் மனத்தோடு கூறுதலாகும். எ - று. (உக)

[கைக்கிளையடைதற்குரியதலைமக்கள்.]

**ருO. மறையோர் மன்னர் வணிகர் சூத்திரரெனும்**
**இறையோர் தத்தமக் கெய்து மற்றதுவே**
**மொழிந்தோர் நால்வரு மொழிந்தைந்நிலத்துறை**
**இழிந்தோர் தம்மு ளுயர்ந்தோரு மெய்துப.**

இ - ள். அக்கைக்கிளை நிகழ்ச்சி மறையோர், அரசர், வணிகர், சூத்திரர் என்னும் தலைமையுடைய மக்கள் நால்வருக்கும் வைசுடும், சொல்லப்பட்டவராகிய இந்நால்வரும் அன்றி ஐவகைநிலத்திலும் இருக்கின்ற இழிந்தோர்களுள்ளே உயர்ந்தோரும் எய்துதற்குரியர். எ - று. (ருO)

[இயற்கைப்புணர்ச்சி நிகழும்வகை.]

**ருக. தெய்வந் தன்னி னெய்தவுங் கிழத்தியின்**
**எய்தவும் படூஉ மியற்கைப் புணர்ச்சி.**

இ - ள். களவுப்புணர்ச்சி நால்வகையுள்ளே இயற்கைப்புணர்ச்சி, தெய்வத்தினாலே எய்தவும்படும், தலைமகளாலே எய்தவும்படும். எ - று.

எய்துதல்-அடைதல். படூஉம் என்பது முன்னுங் கூட்டி உரைக்கப்பட்டது. (ருக)

**ருஉ. இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தி னெய்துழி**
**முயற்சி யின்றி முடிவ தாகும்.**

இ - ள். இயற்கைப்புணர்ச்சி தெய்வத்தினாலே எய்தும்போது யாதொரு முயற்சியுமின்றித் தானே முடிவுபெறும் இயல்புடையதாகும். எ - று.

எனவே அப்புணர்ச்சி தலைமகளாற் பெறுங்காலத்து முயற்சியினாலே முடியுமியல்புடையது என்பதாயிற்று. (ருஉ)

[களவொழுக்கின்கண் நிகழ்தற்குரியபுணர்ச்சி.]

**ருரு. உள்ளப் புணர்ச்சியு மெய்யுறு புணர்ச்சியுங்**
**கள்ளப் புணர்ச்சியுட் காதலற் குரிய.**

இ - ள். உள்ளத்தாற் புணரும் புணர்ச்சியும், மெய்யுற்றுப் புணரும் புணர்ச்சியுமாகிய இரண்டும் களவுப்புணர்ச்சிக்கண் தலைமகனுக்கே உரியனவாகும். எ - று. (ருரு)

[உள்ளப்புணர்ச்சிநிகழுங்காலம்.]

௩௪. பொருவிறந் தோற்குப் பெருமையு முரனும்
நன்னுதற் கச்சமு நாணமு மடனும்
மன்னிய குணங்க ளாதலின் முன்னர்
உள்ளப் புணர்ச்சி யுரிய தாகும்.

இ - ள். தலைமகனுக்குப் பெருமையும், உரனும், தலைமகளுக்கு அச்சமும், நாணமும், மடனும் நிலைபெற்ற குணங்களாகும்; ஆதலின் இருகூற்றுப் புணர்ச்சியுள்ளே உள்ளப்புணர்ச்சி முன்னரே நிகழ்தற்கு உரியதாகும். எ - று.

பொருவிறந்தோன்-ஒப்பில்லாதவன்; தலைமகன். பெருமையாவது அறிவு, புகழ்ச்சி, ஆராய்வு, பண்பு, நண்பு, பழிபாவங்களுக்கஞ்சுதல் முதலியனவாய மேற்படும் மேம்பாடு. உரனாவது உறுதியாகப்பற்றுதலும், நிறையும், துணிவும் முதலியனவாய வரும் திண்மை. நன்னுதல்-தலைமகள்; அன்மொழித்தொகை. அச்சம்-அன்புகாரணமாகத்தோன்றும் மனக்குலைவு. நாணம்-காமக்குறிப்பு நிகழ்ந்தவழிப்படுவதொரு மனவொடுக்கம். மடன்-கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடாப் பேதைமை. (௩௪)

[மெய்யுறுபுணர்ச்சிநிகழுங்காலம்.]

௩௫. காட்சி முதலாச் சாக்கா டீறாக்
காட்டிய பத்துங் கைவரு மெனினே
மெய்யுறு புணர்ச்சி யெய்துதற் குரித்தே.

இ - ள். காட்சி என்பது முதலாகச் சாக்காடு என்பது ஈறாகக் காட்டப்பட்ட பத்தவத்தைகளும் நிகழுமாயின் மெய்யுறுபுணர்ச்சி பெறுதற்குரியதாகும். எ - று.

காட்சிமுதலிய பத்தவத்தைகளாவன காட்சி, வேட்கை, உள்ளுதல், மெலிதல், ஆக்கஞ்செப்பல், நாணுவரையிறத்தல், நோக்குவவெல்லாமவையே போறல், மறத்தல், மயக்கம், சாக்காடு எனப்பன.

காட்சி-தலைமகன் தலைமகளைக்காணுதல். வேட்கை-இவளைப் பெறவேண்டும் எனனும் விருப்பம். உள்ளுதல்-இடைவிடாது நினைத்தல். மெலிதல்-அவ்வாறு நினைத்தல் காரணமாக உடம்பு வாடுதல். ஆக்கஞ்செப்பல்-மனத்தின்கண்ணே ஆகின்ற துயரைப் பிறர்க்குக் கூறுதல். நாணுவரையிறத்தல் - நாணத்தினெல்லைகடத்தல். நோக்குவவெல்லாமவையே போறல்-காண்பனவெல்லாம் அவளுறுப்புக்கள்போலத் தோன்றுதல். மறத்தல் - விளையாட்டு

முதலியவற்றை மறத்தல். மயக்கம்-செய்திறனறியாது மயங்குதல். சாக்காடு-மடலேறுதலும், வரைபாய்தலும் போல்வன கூறுதல். ()

[களவுப்புணர்ச்சிநிகழுமிடம்.]

**கசு. பகற்குறி யிரவுக் குறியெனும் பான்மைய**
**புகற்சியி னமைந்தோர் புணர்ச்சிநிக ழிடனே.**

இ - ள். அன்பானமைந்தோராகிய தலைமகன், தலைமகள் என்னும் இருவர்க்கும் புணர்ச்சி நிகழுமிடங்கள் பகற்குறி இரவுக் குறி என்னும் பகுதியையுடையனவாகும். எ - று.

குறி என்று சொல்லப்படுவது பகலினும் இரவினும் இன்ன தென்று எய்துதற்குரியதாய்க் குறிக்கப்படும் இடம். புகற்சி - அன்பு. (கசு)

[இரவுக்குறியும் பகற்குறியும்.]

**கஎ. இல்வரை யிகந்தது பகற்குறி யிரவுக்குறி**
**இல்வரை யிகவா வியல்பிற் றாகும்.**

இ - ள். வீட்டினெல்லையைக் கடந்திருப்பதாயுள்ளது பகற் குறியாகும். வீட்டினெல்லையைக் கடவாமல் அதற்குள்ளேயுள் ளது இரவுக்குறியாகும். எ - று. (கஎ)

[களவொழுக்கின்கண் நிகழும் பிரிவின்வகை.]

**கஅ. ஒருவழித் தணத்தல் வரைவிடை வைத்துப்**
**பொருள்வயிற் பிரிதலென் றிருவகைத் தாகும்**
**நிறைதரு காதன் மறைவினிற் பிரிவே.**

இ - ள். களவின்கட் பிரியும் பிரிவு ஒருவழித்தணத்தலும், வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதலும் என இருவகை யுடையதாகும். எ - று.

நிறைதரு காதல்-நிறைந்த அன்பு. ஒருவழித்தணத்தல்-பொ ருள் காரணமாகத் தூரம்போதற்குப் பிரியாது ஏர்பட்டதிலே உறை பவனுகிய பிரிதல். ஒரு வழி-ஓரிடம். தணத்தல்-பிரிதல் வரைவி டைவைத்துப் பொருள்வயிற் பிரிதலாவது வரைவு செய்தற்பால தாகவும் அதனை இடையீடாக நீக்கிவைத்துப் பொருள்காரண மாகக் காடிடையிட்டும் நாடிடையிட்டும் பிரிதல். (கஅ)

[ஒருவழித்தணத்தற்குக் காலவரையறையின்மை.]

**கக. அவற்றுள்,**
**ஒருவழித் தணத்தற்குப் பருவங் கூறார்.**

இ - ள். அவ்விருவகைப் பிரிவுகளுள் காலிடையிட்டும், நாடிடையிட்டும் பிரியாமையின் ஒருவழிப் பிரிதற்கு இவ்வளவென்று பருவவரையறை சொல்லார் சான்றோர். எ - று. (கூக)

[பொருள்வயிற்பிரிதலின் காலவரையறை.]

சo. வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல்
இருதுவின் கண்ணுடைத் தென்மனார் புலவர்.

இ - ள். வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிதல் ஓர் இருதுவினைக் கண்ணமைந்து நிற்றலையுடையது என்று சொல்லுவர் புலவர். எ - று.

எனவே இரண்டு மாசத்தினின்றும் மேற்படாதென்றவாறு. ஓர் இருது-இரண்டுமாசம். இருது-பருவம். வரைவு-விவாகம். (சo)

[வரைவுநிகழுங்காலம்.]

சக. களவு வெளிப்படா முன்னும் பின்னும்
விளையு நெறித்தென விளம்பினர் வரைவே.

இ - ள். வரைவு களவு வெளிப்படாமுன்னும், வெளிப்பட்ட பின்னும் உளதாகும் நெறியுடையதென்று புலவர் சொல்லுவர். எ - று. (சக)

[களவுவெளிப்படுமுன்வரைதல்.]

சஉ. நான்குவகைப் புணர்ப்பினுந் தான்றெருண்டு வரைதலும்
பாங்கனிற் பாங்கியிற் றெருளுற்று வரைதலும்
களவு வெளிப்படா முன்வரைத லாகும்.

இ - ள். இயற்கைப் புணர்ச்சி முதலிய நால்வகைப் புணர்ச்சிக்கண்ணும் தலைமகன் தானே தெருண்டுவரைதலும் பாங்கனாலாவது பாங்கியினாலாவது தெருளுற்று வரைதலுமாகிய இரண்டும் களவுவெளிப்படாமுன் வரைதலாகும். எ - று. (சஉ)

[களவுவெளிப்பட்டபின்வரைதல்.]

சங. உடன்போய் வரைதலு மீண்டு வரைதலும்
உடன்போக் கிடையீ டுற்று வரைதலுங்
களவுவெளிப் பட்டபின் வரைத லாகும்.

இ - ள். உடன்போய் வரைதலும், மீண்டுவரைதலும், உடன்போக்கிடையீடுற்று வரைதலுமாகிய மூன்றும் களவுவெளிப் பட்டபின் வரைதலாகும். எ - று.

உடன்போய வரைதல் — தலைமகன் தலைமகளைப புணாந்து உடன்கொண்டுபோயத் தனனூரினகண்வரைதல். மீண்டுவரைதல்—மீண்டுவநதுவரைதல். உடன்போககு-உடன் போதல். இடையீடு - தவிாதல், இடைவிடுதல். (௪௩)

[உடன்போய்வரைதல்.]

௪௪. அவற்றுள்,
உடன்போய் வரைத லொருவகைத் தாகும்.

[உடன்போய் மீண்டுவந்து வரைதலின்வகை.]

௪௫. அவண்மனை வரைதலுந் தன்மனை வரைதலும்
எனமீண்டு வரைத லிருவகைத் தாகும்.

இ - ள். தலைமகளுடைய மனையின்கட் சென்றுவரைதலும், தன்மனையின்கண்ணே வரைதலும் என மீண்டுவரைதல் இருவகையுடையதாகும். எ - று. (௪௫)

[அறத்தொடுநிற்றற்காரணம்.]

௪௬. ஆற்றா றஞ்சினு மவன்வரைவு மறுப்பினும்,
வேற்றுவரைவு நேரினுங் காபபுக்கைம் மிகினும்
ஆற்றுறத் தோன்று மறத்தொடு நிலையே.

இ - ள். தலைமகன இரவுக்குறிககண வரும் வழியிலுள்ள தீங்குசெயபவைகளுக்கு அஞ்சிய இடத்தும், அத்தலைமகன வரைதலைத தமராயினாா மறுததுரைததவிடததும. வேற்றுவரைவு நோநதவிடத்தும, காவல மிகுநதவிடத்தும அறததொடுநிற்றல் முறையாகத் தோன்றும். எ - று.

ஆறறாறு-வழியின் நிகழும் தீங்கு. ஆறு-வழி. ஊறு-தீங்கு வரும்வழியிலே தீங்குசெயபவை கரடி, புலி, யானை, பாமபு முதலியன. வேறறுவரைவு-பிறர்வரைதல். காபபுககைம்மிகல்-தாயதுஞ்சாமை, நாயதுஞ்சாமை, காவலாககுகுதல முதலியகாவல மிகுதல் அறத்தொடுநிலை-அறததோடு மாறுபடாது நிறறல் கற்பழியாத வண்ணம் தலைவி தனக்குத் தலைவனொடு நிகழ்நத களவொழுக்கத்தை வெளிப்படுத்துதல் எனறவாறு. (௪௬)

[அறத்தொடுநிற்கும்நெறி.]

௪௭. தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்கும்
பாங்கி செவிலிக் கறத்தொடு நிற்குஞ்

செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்கும்
நற்றாய் தந்தை தன்னையர்க் கறத்தொடு
நிற்கு மென்ப நெறியுணர்ந் தோரே.

இ - ள். அறத்தொடுநிற்றல் - கற்பழியாதவாறு களவினை வெளிப்படுத்தல். செவிலி - நற்றாயின்தோழி. தன்னையர் - தமையன்மார். நெறியுணர்ந்தோர் - இலக்கணநெறியறிந்தவர். மற்றைய வெளி. (சஎ)

[தலைமகளறத்தொடுநிற்குமிடம்.]

சஅ. ஒருபுணர் வொழிந்தவற் றொருவழித் தணப்பவும்
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரியவும்
இறைவனைச் செவிலி குறிவயிற் காணவும்
மனைவயிற் செறிப்பவும் வருத்தங் கூரின்
வினவியக் கண்ணும் வினவாக் கண்ணும்
அனநடைக் கிழத்தி யறத்தொடு நிற்கும்.

இ - ள். பாங்கியிற்கூட்டம் எனனும் ஒன்றொழிந்த இயற்கைப்புணர்ச்சி முதலிய மூனறு புணர்ச்சிக்கண்ணும் தலைமகன் ஒருவழித் தணத்தலானும், வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிதலானும், செவிலி தலைமகனைக் குறியிடத்துக் காண்டலானும், (தனனை) மனையிடத்துச்செறித்தலானும், (தனக்கு) வருத்தம் மிகுமாயின் (பாங்கி தனனை) வினவியவிடத்தும, அஃதன்றி வினவாதவிடத்தும தலைமகள அவளுக்குக் களவினை அறிவுறுத்துவள. எ - று.

புணர்வு - புணர்ச்சி. செறித்தல் - வெளியிற்செல்லாதடக்குதல். கூர்தல் - மிகுதல். அனநடைக்கிழத்தி - அன்னநடைபோன்ற நடையுடைய தலைமகள். (சஅ)

[பாங்கியறத்தொடுநிற்குந் திறம்.]

சகூ. முன்னிலைப் புறமொழி முன்னிலை மொழிகளிற்
சென்மொழிப் பாங்கி செவிலிக் குணர்த்தும்.

இ - ள். முன்னிலைப்புறமொழியினாலும், முன்னிலைமொழியினாலும் பாங்கி செவிலிக்கு அறிவுறுத்துவாள் எ - று.

முன்னிலைப்புறமொழி - முன்னிலையாய நிற்கின்றவரை நோக்கி பிறரைக் கூறுமாறுபோலப் புறமாகக்கூறுதல். (சகூ)

[செவிலியறத்தொடுநிற்குந்திறம்.]

**௫௰. செவிலிநற் றாய்க்குக் கவலையின் றுணர்த்தும்.**

இ-ள். செவிலி நற்றாய்க்குக் கவலையின்றி உணர்த்துவாள் எ-று.

கவலையின்றி உணர்த்துவள்-குறிப்பானுணர்த்தாது முன்னிலை மொழியால் விளங்க அறிவுறுத்துவள். (௫௰)

[நற்றாயறத்தொடுநிற்குந்திறம்.]

**௫௧. நற்றா யறத்தொடு நிற்குங் காலைக்
குரவனுந் தன்னையுங் குறிப்பி னுணர்ப.**

இ-ள். குரவன் - தந்தை. தன்னை - தமையன். உணர்ப - அறிவர். மறையை வெளி. (௫௧)

[அறத்தோடு நிற்றற்கு வினநிகழ்த்துவோர்.]

**௫௨. பாங்கி தலைவியை வினவுஞ் செவிலி
பாங்கியை வினவும் பாங்கி தன்னையும்
நற்றாய் தானும் வினவுஞ் செவிலியிற்
பொற்றொடிக் கிழத்தியை யுற்று நோக்கின.**

இ-ள். வினவும் - வினவுவாள். செவிலியின் - செவிலி போலக் கிழத்தியை உற்றுநோக்கின - தலைமகளை உற்றுப்பார்த்து வேறுபாடு கண்டபோது மறையை வெளி. எ-று (௫௨)

[உடன்போக்குநிகழ்ந்தகாலத்தறத்தொடுநிற்பார்.]

**௫௩. ஆங்குடன் போயுழி யறத்தொடு நிற்ப
பாங்கியுஞ் செவிலியும் பயந்த தாயும்.**

இ-ள். தலைமகள் தலைமகனோடு புணர்ந்துடன் போயகாலத்துப் பாங்கியும், செவிலியும், நற்றாயும் அறத்தொடு நிற்பர். எ-று.

தலைமகளின்மையின் ஏனையோர் அறத்தொடுநிற்பாராயினர்

[கற்பின்வகை.]

**௫௪. களவின் வழிவந்த கற்பும் பொற்பமை
களவின் வழிவராக் கற்புமென் றாங்கு
முற்படக் கிளந்த கற்பிரு வகைத்தே.**

இ - ள். முற்சொல்லப்பட்ட கற்பு, களவின்வழிவந்த கற்பும், களவின்வழிவாராத கற்பும் என இருவகையுடையது எ - று.

[கற்பிற்புணர்ச்சிவகை.]

௫௫. குரவரிற் புணர்ச்சி வாயிலிற் கூட்டமென்
றிருவகைத் தாகுங் கற்பிற் புணர்ச்சி.

இ - ள். குரவரால் புணரும் புணர்ச்சியும், வாயில்களால் புணரும் புணர்ச்சியும் எனக் கற்பிற்புணர்ச்சி இருவகையுடைய தாகும் எ - று.

குரவரார்ப்புணரும் புணர்ச்சி-வதுவைபெற்றுப்புணரும் புணர்ச்சி. வாயில்களாற்புணரும் புணர்ச்சி - புலவிதீர்த்துப்புணரும் புணர்ச்சி. (௫௫)

[குரவரிற்புணர்ச்சிஒருதலையன்றென்பது.]

௫௬. அவற்றுட்,
களவின் வழிவந்த கற்பிற் புணர்ச்சி
கிளைஞரி னெய்தாக் கேண்மையு முடைத்தே
உடன்போய் வரைதலு முண்மை யான.

இ - ள். அவ்விருவகைக் கற்பினுள்ளே களவின்வழிவந்த கற்பினுட் புணரும் புணர்ச்சி, தலைமகன் உடன்போய் வரைதலும் உண்டு ஆதலால், தலைமகளின் சுற்றத்தாரால் பெறப்படாத கேண்மையுமுடைய தாகும் எ - று.

கேண்மை - உரிமை. (௫௬)

[கற்பொழுக்கினுள்தலைவனுக்குப்பிறமாதரோடு
புணர்ச்சிநிகழுமென்பது.]

௫௭. மறைவிற் புணர்ச்சியு மன்றற் புணர்ச்சியும்
இறைவற் கெய்தலுண் டிருவகைக் கற்பினும்.

இ - ள். களவிற்புணர்ச்சியும் வதுவைப்புணர்ச்சியும் இருவகைக் கற்பின்கண்ணும் தலைமகனுக்கு எய்துதல் உண்டு எ - று. ()

[கற்பொழுக்கிலேதலைமகன்புணர்தற்குரியபிறமாதர்.]

௫௮. காதற் பரத்தையர் காமக் கிழத்தியர்
பின்முறைவதுவைப்பெருங்குலக்கிழத்தியென்
றன்னவ ருரிய ரவையிரண் டற்கும்.

இ - ள். காதற்பரத்தையரும், காமக்கிழத்தியரும், பின்னர் முறையாற் செயயப்பட்ட வதுவையையுடைய பெருங்குலக்கிழத்தியும் எனப்பட்ட அம்மூவரும் மறைவிறபுணர்ச்சி வதுவைபபுணர்ச்சி என்னும் இருவகைப்புணர்ச்சிக்கும் உரியராவர் எ - று.

காதறபரத்தையர் - சேரிபபரத்தையர் மசளிராயக் காதலிற் புணர்வோர். காமக்கிழத்தியர் - ஒருவனுக்கு உரிமைபூண்டவராய காமத்தினபொருட்டு வரையப்பட்டவா. பின்முறைவதுவைக்கிழத்தி - இரண்டாம்மனைவி. மறைவிற்புணர்ச்சி - களவிற்புணர்ச்சி.

[களவுப்புணர்ச்சிக்குரியமாதர்.]

**ருகூ. அவருட்,**
**காதற் பரத்தையர் களவிற் குரியர்.**

இ - ள். அம்மூவருள்ளே காதற்பரத்தையர் களவிற்புணர்ச்சிக்கு உரியராவர் எ - று. (ருகூ)

[வதுவைப்புணர்ச்சிக்குரியமாதர்.]

**சூ0. ஒழிந்தோர் மன்றற் புணர்ச்சிக் குரியர்.**

இ - ள். மற்றையோராகிய காமக்கிழத்தியரும், பின்முறை வதுவைப்பெருங்குலக் கிழத்தியும் வதுவைப்புணாச்சிக்கு உரிய ராவர் எ - று. (சூ0)

[கற்புக்காலத்துநிகழும்பிரிவின்வகை.]

**சூக. பரத்தையிற் பிரித லோதற்குப் படர்தல்**
**அருட்டரு காவலொடு தூதிற் ககறல்**
**உதவிக் கேக னிதியிற் கிகத்தலென்**
**றுரைபெறு கற்பிற் பிரிவறு வகைத்தே.**

இ - ள். பரத்தையிறபிரிதலும், ஓதறகுப்பிரிதலும், காவறகுப்பிரிதலும், தூதிறபிரிதலும், துணைவயிறபிரிதலும், பொருள்வயிற் பிரிதலும் எனக் கறபிறபிரிவு ஆறுவகை யுடையதாகும் எ - று. (சூக)

[பரத்தையிற்பிரிவின்வகை.]

**சூஉ. அயன்மனைப் பிரிவயற் சேரியி னகற்சி**
**புறநகர்ப் போக்கிவை புரவலற் குரிய**
**பரத்தையிற் பிரியும் பருவத் தான.**

இ - ள். பரத்தையிற்பிரியுங் காலத்து அயன்மனையிற் பிரிந்து போதலும், அயற்சேரியிற பிரிந்துபோதலும், புறநகரிற் பிரிந்து

போதலும என்னும் இவைமூன்றும் தலைமகனுக்கு உரியனவாகும் எ - று. (சூ௨)

[அயன்மனையிற்பிரிதற்காரணம்.]

சூ௩. கெழீஇய காமக் கிழத்தியர் பொருட்டாத்
தழீஇய வயன்மனைத் தலைவன் பிரியும்.

இ - ள். தன்னொடு பொருந்திய காமக்கிழத்தியர் பொருட்டாகத் தழுவிக்கொண்ட அயலிலுள்ள மனையின்கண் தலைவன் பிரிந்து செல்லுவன் எ - று. (சூ௩)

[அயற்சேரியிற்பிரிதற்காரணம்.]

சூ௪. பின்னர் வரைந்த பெதும்பையும் பரத்தையும்
இன்னியல் விழவு மேது வாக
அவனயற் சேரியி னகலு மென்ப.

இ - ள். பின் வரைந்த பெதும்பைப் பருவமுடைய பெண் காரணமாகவும், பரத்தை காரணமாகவும், விழவு காரணமாகவும் தலைமகன் அயலூரிற் பிரிந்து செல்லுவன் எ - று. (சூ௪)

[புறநகரிற்பிரிதற்காரணம்.]

சூ௫. விருந்திற் பரத்தையைப் பெருந்தேர் மிசைக்கொண்
டிளமரக் காவின் விளையா டற்கும்
புனலா டற்கும் புறநகர்ப் போகும்.

இ - ள். புதிய இயல்பையுடையளாகிய பரத்தையைத் தேரில் ஏற்றிக்கொண்டு இளமரக்காவிலே விளையாடல் காரணமாகவும், புனலாடல் காரணமாகவும் தலைமகன் பிரிந்து புறநகர்க்குச் செல்லுவன் எ - று. (சூ௫)

[ஊடல்.]

சூ௬. ஊடல் அவ்வழிக் கூடுங் கிழத்திக்கு.

இ - ள். அவ்வழி - அம்மூன்று பிரிவின்கண்ணும். கிழத்திக்கு ஊடல் கூடும் - தலைமகளுக்கு ஊடல் உண்டாகும் எ - று. (சூ௬)

[ஊடல்தணிக்கும்வாயில்கள்.]

சூ௭. கொளைவல் பாணன் பாடினி கூத்தர்
இளையர் கண்டோ ரிருவகைப் பாங்கர்
பாகன் பாங்கி செவிலி யறிஞர்
காமக் கிழத்தி காதற் புதல்வன்

விருந்தாற் றுமை யென்றிவை யூடன்
மருந்தாய்த் தீர்க்கும் வாயில்க டாமே.

இ-ள். பாணன், பாடினி, கூத்தர், இளையோர், கண்டோர், இருவகைப்பாங்கர், பாகன், பாங்கி, செவிலி, அறிஞர், காமக்கிழத்தி, புதல்வன், விருந்தினர், ஆற்றுமை என்று சொல்லப்பட்ட இவைகள் ஊடலை மருந்துபோல நின்று நீக்கும் வாயில்களாகும் எ-று.

கொளை - இசைப்பாட்டு. பாணன் - இசைபாடுவோன். பாடினி - இசைபாடுவோள் பாடினியெனினும் விறலியெனினும் ஒக்கும். இருவகைப்பாங்கராவார் சூத்திரப்பாங்கர், பார்ப்பனப்பாங்கர் எனபோர். வாயில் - வழி. (௬௭)

## ஓதற்பிரிவின் வகை.

[வேதமோதப்பிரிதல்.]

௬௮. ஓதற் றொழி லுரித்த துயர்ந்தோர் மூவர்க்கும்.

இ-ள். உயர்ந்தோராகிய அந்தணர், அரசர், வணிகர் என்னும் மூவர்க்கும் வேதமோதுதலாகிய தொழில் உரியதாகும் எ-று.

[மற்றைக்கல்விபயிலப்பிரிதல்]

௬௯. அல்லாக் கல்வி யெல்லார்க்கு முரித்தே.

இ-ள். வேதமல்லாத மற்றை நூல்களைக் கற்குந்தொழில் அந்தணர் முதலிய நால்வர்க்கும் உரியதாகும் எ-று. (௬௯)

[படைத்தொழில்பயிலப்பிரிதல்.]

௭0. படைக்கலம் பயிறலும் பகடுபிற வூர்தலும்
உடைத்தொழி லவர்க்கென வுரைத்திசினோரே.

இ-ள். படைக்கலங்களைப் பயிலுதலும், யானை, குதிரை முதலியவற்றை ஊர்தலும் அந்தணர் முதலிய அம்மூவர்க்கும் உடைமையாய தொழில் என்று சொல்லுவர் புலவர் எ-று.

பகடு - யானை. பிற என்றது குதிரைமுதலியனவற்றை. (௭0)

[காவற்பிரிவின்வகை.]

௭௧. அறப்புறங் காவ னாடு காவலெனச்
சிறப்புறு காவற் றிறமிரு வகைத்தே.

இ-ள். அறப்புறங்காவலும், நாடுகாவலும் எனக் காவற்றொழிலின் பாகுபாடு இருவகையுடையது எ-று.

அறப்புறம் - இறையிலிநிலம். இறையிலி - வரியில்லாதது. ( )

[அறப்புறங்காவற்பிரிவு.]

எ௨. அவற்றுள்,
அறப்புறங் காவ லனைவர்க்கு முரித்தே.

இ - ள். அறப்புறங்காவல் என்னுந்தொழில் அந்தணர் முதலிய எல்லார்க்கும் உரியதாகும் எ - று. (எ௨)

[நாடுகாவற்பிரிவு]

எ௩. மற்றைக் காவல் கொற்றவற் குரித்தே.

இ - ள். மற்றைக்காவலாகிய நாடுகாவல் என்னுந்தொழில் அரசர்க்கே உரியதாகும். எ - று. (எ௩)

[தூதிற்பிரிவு]

எச. வேத மாந்தர் வேந்தரென் றிருவர்க்குந
தூது போதற் றொழிலுரித் தாகும்.

இ - ள். அந்தணர், அரசர் என்றுசொல்லப்பட்ட இருபாலார்க்குந் தூதுபோதலாகிய தொழிலுரியதாகும். எ - று.

உதாரணம்.

[அந்தணன்றூதுபோதல்]

வயலைக் கொடியின் வாடிய மருங்குல்
உயவ லூர்திப பயலைப பார்ப்பான்
எலலி வநது நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லோ சிலவே யதற்கே
ஏணியுஞ் சீப்பு மாற்றி
மாண்வினை யானையு மணிகளைந் தனவே.

புறநானூறு

இங்கே அந்தணன் தூதுபோதல் புலப்படுகின்றது. பார்ப்பான் - அந்தணன். வந்து - தூதாகவந்து.

[அரசன்றூதுபோதல்.]

மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சங்
கடந்தானை நூற்றுவர்பா னாற்றிசையும்போற்றத்
தொடர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத்தூது
நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே
நாரா யணாவென்னா நாவென்ன நாவே.

சிலப்பதிகாரம்

இங்கே கண்ணபிரான் அரசனையப் பஞ்சவர் பொருட்டுத் தூதுபோனசெயல் கூறப்பட்டது. (எச)

[நாடுகாவலும் தூதுபோதலும்.]

**எரு. சிறப்புப் பெயர்பெறிற் செப்பிய விரண்டும்
உறற்குரி மரபின வொழிந்தோ ரிருவர்க்கும்.**

இ - ள். முன் கூறப்பட்ட நாடுகாவலும் தூதுபோதலுமாகிய இரண்டும், சிறப்புப்பெயர் பெறுவாராயின் மற்றை வணிகர், சூத்திரர் என்னும் இருவருக்கும் உறுதற்குரிய மரபினையுடையன வாகும் எ - று. (எரு)

[துணைவயிற்பிரிவு.]

**எசு. உதவி யந்தண ரொழிந்தோர்க் குரித்தே.**

இ - ள். வேந்தர்க்கு உற்றுழித் துணைசெய்தற்குப் பிரிதல் அந்தணரொழிந்த அரசர் முதலிய மூவர்க்கும் உரியதாகும் எ-று.

[நால்வருணத்தார்க்குமுரியபிரிவு.]

**எஎ. பரத்தையிற் பிரிவும் பொருள்வயிற் பிரிவும்
உரைத்த நால்வர்க்கு முரிய வாகும்.**

பொருள் வெளி. (எஎ)

[இழிந்தோர்க்குரியபிரிவு]

**எஅ. இழிந்தோர் தமக்கு மிவற்றுண்மேம் பட்டவை
ஒழிந்தன வாமென மொழிந்தனர் புலவர்.**

இ - ள். இவற்றுள் - இங்கே சொல்லப்பட்ட தொழில்களுள்ளே—மேம்பட்டவை ஒழிந்தன - மேம்பட்டனவாகிய ஓதல், நாடுகாவல், தூதுபோதல் என்னும் மூன்றும் ஒழிந்தனவாகிய தொழில்கள்—இழிந்தோர் தமக்கும் ஆம் என மொழிந்தனர் புலவர் - இழிந்தோர்க்கும் உரியனவாகும் என்று சொல்லினர் புலவர் எ - று. (எஅ)

[தலைமகன் பிரிவுணர்த்துதல்.]

**எகூ. கல்வி முதலா மெல்லா வினைக்குஞ்
சொல்லி யகறலுஞ் சொல்லா தகறலும்
உரியன் கிழவோன் பெருமனைக் கிழத்திக்கு.**

இ - ள். ஓதல் முதலாகிய எல்லாத்தொழிற்கும் செல்லற்கண் தலைமகளுக்குச் சொல்லிப பிரிதலுகரும் சொல்லாது பிரிதற்கும் தலைமகன் உரியவனாகும். எ - று. (எகூ)

[தலைமகன்பிரிவு பாங்கிக்குணர்த்துந் திறம்.]

அ0. சொல்லா தகலினுஞ் சொல்லும் பாங்கிக்கு.

இ - ள். தலைமகளுக்குச் சொல்லாமற் பிரிவானாயினும் பாங்கிக்குச் சொல்லிவிட்டே பிரிவன் எ - று. (அ0)

[தலைமகன்பிரிவுதலைமகளுக்குணர்த்துந்திறம்]

அக. குறிப்பி னுணர்த்தும் பெறற்கருங் கிழத்திக்கு.

இ - ள். தலைமகன்வாயாற் சொல்லாதொழியினும குறிப்பினாலே தலைமகள் அறியும்படி உணர்த்துவன் எ - று. (அக)

[தலைமகன்பிரிந்துசெல்லுந்திறம்.]

அஉ. காலிற் சேறலுங் கலத்திற் சேறலும்
ஊர்தியிற் சேறலு நீதி யாகும்.

இ - ள். அநதணர் முதலிய நால்வரும் பிரிந்து நாடிடையிட்டுச் செல்லுங்கால் காலினாலே நடந்து செல்லுதலும், மரக்கலத்திலேறிச் செல்லுதலும், ஊர்தியிலேறிச் செல்லுதலும் முறையாகும எ - று. (அஉ)

[அந்தணர்க்காகாதசெல்லலாறு.]

அங. புலத்திற் சிறந்த புரிநூன் முதல்வர்க்குக்
கலத்திற் சேறல் கடனன் றென்ப.

இ - ள். அந்தணருக்கு மரககலத்திலேறிச செல்லுதல் முறையன்று எனறு சொலலுவர் புலவர் எ - று.

புலமை - அறிவு. புரிநூல் - புணுநூல. (அங)

[குலமாதரோடுசெல்லலாகாதபிரிவு.]

அச. வலனுயர் சிறப்பின் மற்றைமூ வர்க்குங்
குலமட மாதரொடு கலமிசைச் சேறலும்
பாசறைச் சேறலும் பழுதென மொழிப.

இ - ள். குலமடமாதரோடு மரக்கலமேறிச் செல்லுதலும் பாசறையிற் செல்லுதலும் அரசர் முதலிய மூவர்க்கும் குற்றம் என்று சொல்லுவர் புலவர்

குலமடமாதரோடு சேறல் பழுது எனவே பரத்தையரோடு சேறல் பழுதன்றென்பது பெறுதும் பாசறையிற் சேறல் என்பதனால் அரசருடன் போர்க்குத் துணைசெய்தற்குப் போதல் என்பது பெறுதும். பாசறை - பகைமேற்சென்றோர் உறைவிடம். (௮௪)

[தலைமகன்செலவழுங்குதல்.]

௮௫. ஓதன் முதலா வோதிய வைந்தினும்
பிரிவோ னழுங்கற்கு முரியோ னாகும்.

இ - ள். ஓதற்பிரிவு முதலிய ஐந்து தொழிற்கண்ணும் பிரிந்து செல்லுந் தலைமகன் செல்லுதற்கண்ணின்று செல்லாது தவிர்தற்கும் உரியனாகும் எ - று.

ஓதல் முதலிய ஐந்தினையும் "பரத்தையிற் பிரிதல்" என்னும் ௬௰-ம். சூத்திரத்திற் காண்க. அழுங்கல் - தாமதித்தல், செல்லாது தவிர்தல் (௮௫)

[செலவழுங்குதற்குரியஇடம்.]

௮௬. இல்லத் தழுங்கலு மிடைச்சுரத் தழுங்கலும்
ஒல்லு மவற்கென வுரைத்திசி னோரே.

இ - ள். பிரிந்துசெல்லக் கருதிய தலைமகனுக்கு இல்லின்கண்ணேயிருந்து செலவழுங்குதலும் இடைச்சுரத்தின்கண்ணே செலவழுங்குதலுமாகிய இரண்டும் உரியனவாகப் பொருந்தும் எ-று.()

[செலவழுங்குதற்காரணம்.]

௮௭. தலைவி தன்னையுந் தன்மனந் தன்னையும்
அலமர லொழித்தற் கழுங்குவ தல்லது
செல்வத் தோன்றல் செல்லா னல்லன்.

இ - ள். தலைமகளையும், தன்மனத்தையும் அலமரலினின்றும் நீக்கும்பொருட்டு அழுங்குவதன்றித் தலைமகன் செல்லாது விடுவானல்லன் எ - று.

எனவே அழுங்குதல் செய்து செல்வான் என்பது பெறுதும். அலமரல் - கலங்கல், சுழலல், துயருறல். செல்வத்தோன்றல் - தலைமகன். அவன் தலைமகளைத் தேற்றற்கு இல்லத்திலும், தன்மனத்தைத் தேற்றற்கு இடைச்சுரத்திலும் அழுங்கும் எனக்கொள்க.()

[ஓதற்பிரிவின்காலவரையறை.]

௮௮. அவற்றுள்,
ஓதற் பிரிவுடைத் தொருமூன் றியாண்டே.

இ - ள். முற்சொல்லப்பட்ட பிரிவுகளுள்ளே தலைமகன் ஓதற்குப் பிரியும் பிரிவின் காலநீட்டம் மூன்றுவருடம் என்னும் எல்லையினையுடையது எ - று. (௮௮)

[மற்றைப்பிரிவின்காலவரையறை.]

௮௯. தூதிற் பிரிவுந் துணைவயிற் பிரிவும்
பொருள்வயிற் பிரிவு மோர்யாண் டுடைய.

இ - ள். தூதிற்பிரிவு, துணைவயிற்பிரிவு, பொருள்வயிற்பிரிவு என்பவற்றின் காலநீட்டம் ஒருவருடம் என்னும் எல்லையையுடையது எ - று.

தூதிற்பிரிவு - இருவேந்தரைப் பகைதணிவித்து நட்பாக்குதற்குத் தூதாகச் செல்லுதல். இது பகைதணிவினை எனவும் பெயர் பெறும். துணைவயிற்பிரிதல் - அரசாக்கு உற்றுழி உதவிசெய்தற்குப் பிரிதல். பொருள்வயிற்பிரிதல் - இல்லறம் நிகழ்த்தற்குப்பொருள் தேடும்படி பிரிந்துபோதல். காடிடையிட்டும் நாடிடையிட்டும் சேய்மைக்கட் பிரிந்து செல்லாமையின் பரத்தையிற்பிரிவு. காவற்பிரிவு என்னும் இரண்டற்கும் காலவரையறை கூறிற்றாயினார்

[தலைவன்றலைவியைப்பிரியலாகாக்காலம்]

௯௰. பூத்த காலைப் புனையிழை மனைவியை
நீரா டியபின் னீரா று நாளுங்
கருவயிற் றுறுங் கால மாதலிற்
பிரியப் பெறாஅன் பரத்தையிற் பிரிவோன்.

இ - ள். பரத்தையிற் பிரிவோனாகிய தலைமகன் தலைமகள் பூப்படைந்து நீராடியபின் பன்னிருநாளும் அவள்வயிற்றிலே கருவுண்டாகுங் காலமாதலால் பூப்படைந்தகாலத்து அவளைப் பிரியப்பெறான் எ - று. (௯௰)

[ஓதற்குப்பிரிந்தோன்செய்யலாகாதன.]

௯௧. ஓதற் ககன்றோ னொழிந்திடை மீண்டு
போதற் கியையவும் புலம்பவும் பெறாஅன்.

இ - ள். ஓதற்குப் பிரிந்து சென்ற தலைமகன் ஓதுதலை இடையில் விட்டுவந்து மீண்டுபோதற்கு இயைதலையும், தலைமகளை நினைந்து புலம்புதலையும் பொருந்துதற்கு உரியனல்லன் எ - று. (௯௧)

[தூதுக்குந்துணைக்கும்பிரிந்தோன்செயல்.]

௬௨. தூதுந் துணையு மேது வாகச்
சென்றோ னவ்வினை நின்றுநீட் டித்துழிப்
புலந்து பாசறைப் புலம்பவும் பெறுமே.

இ - ள். தூதுகாரணமாகவும், உதவிகாரணமாகவும் பிரிந்து சென்ற தலைமகன் அத்தொழில்கள் ஒரு யாண்டிலே முடிவுபெறாது நிலைபெற்று நீட்டித்தகாலத்துப் பாசறையிற்றங்கி அவற்றை வெறுத்துத் தலைமகளை நினைந்து புலம்புதலையும் பெறுவான் எ - று. ()

[தலைமகளுக்குரியதொழில்.]

௬௩. பூத்தமை சேடியிற் புரவலற் குணர்த்தலும்
நீத்தமை பொறாது நின்று கிழவோனைப்
பழிக்குங் காமக் கிழத்தியைக் கழறலுங்
கிழவோற் கழறலும் வழிமுறை மனைவியைக்
கொழுநனொடு வந்தெதிர் கோடலு மவனொடும்
பாங்கொடும் பரத்தையைப் பழித்தலு நீங்கிப
புறநகர்க் கணவனொடு போகிச் செறிமலர்ச்
சோலையுங் காவு மாலையங் கழனியும்
மாலைவெள் ளருவியு மலையுங் கானமுங்
கண்டுவிளை யாடலுங் கடும்புனல் யாறும்
வண்டிமிர் கமல வாவியுங் குளனும்
ஆடிவிளை யாடலுங் கூடுங் கிழத்திக்கு.

இ - ள். பூத்தமை சேடியிற் புரவலற்குணர்த்தல் முதலாக இங்கே சொல்லப்பட்டவைகள் கற்புக்காலத்திலே தலைமகளுக்குரிய ஒழுகலாறுகளாகும் எ - று.

பூத்தமை - பூப்படைந்திருக்குந்தன்மை. புரவலன் - தலைமகன். கழறல் - இடித்துரைத்தல். வழிமுறைமனைவி - பின்முறை வேட்டமனைவி. (௬௩)

[பாணற்குரியதொழில்.]

௬௪. வாயில் வேண்டலும் வாயினேர் வித்தலுஞ்
சேயிழை யூட றீர்த்தலும் போயுழி
அவணலந் தொலைவுகண் டழுங்கலுமவள்வயிற்
செல்லவிரும்ப லுஞ்சென்றவர்க்குணர்த்தலுஞ்

சொல்லிய கூற்றெனச் சொல்லுங் கிழவோன்
வரவு மீண்டுவந் தரிவைக் குணர்த்தலும்
அணிநலம் பெற்றமை யறியான் போன்றவட்
பணிவொடு வினுதலும் பாணற் குரிய.

இ - ள். வாயில்வேண்டல் முதலாக இங்கே சொல்லப்பட்ட வைகள் வாயில்களுள்ளே பாணனுக்குரிய தொழில்களாகும் எ-று.

வாயில்வேண்டல் - குறையுறுதல். (௩௪)

[விறலிக்குரியதொழில்.]

௩௫. செலவிற் றேற்றலும் புலவிற் றணித்தலும்
வாயில் வேண்டலும் வாயினேர் வித்தலுந்
தெரியிழை விறலிக் குரிய வாகும.

இ - ள். செலவிற்றேற்றல் முதலாக இங்கே சொல்லப்பட்டவைகள் விறலிக்குரிய தொழில்களாகும் எ - று. (௩௫)

[கூத்தர்க்குரியதொழில்]

௩௬. செல்வம் வாழ்த்தலு நல்லறிவு கொளுத்தலுங்
கலனணி புரைத்தலுங் காமநுகர் புரைத்தலும்
புலவி முதிர்காலைப் புலங்கொள வேதுவிற்
றேற்றலுஞ் சேய்மை செப்பலும் பாசறை
மேற்சென் றுரைத்தலு மீண்டுவரவுரைத்தலுங்
கூற்றரு மரபிற் கூத்தர்க் குரிய.

இ - ள் செல்வம்வாழ்த்தல் முதலாக இங்கே சொல்லப்பட்டவைகள் கூத்தர்க்குரிய தொழில்களாகும் எ - று.

கலன் - ஆபரணம். காமநுகர்பு - காமநுகர்ச்சி. ஏது - காரணம. சேய்மை - தூரம். கூற்றருமரபு - அருமரபிற்கூற்று அரிய முறைமையினையுடைய கூற்று. (௩௬)

[இளையோர்தொழில்.]

௩௭. மடந்தையை வாயில் வேண்டலும் வாயில்
உடம்படுத் தலுமவ ளூட நீர்த்தலுங் [லுஞ்
கொற்றவற் * குணர்த்தலுங் குற்றேவல்செய்த
சென்றுமுன் வரவு செப்பலு மவன்றிறம்

* கொற்றவற்காத்தலும எனவும் பாடம்.

ஓரா றிகின் றுரைத்தலும் வினைமுடி புரைத்தலும்
வழியியல்பு கூறலும் வழியிடைக் கண்டன [ம
மொழிதலு மிளையோர் தொழிலெனற் குரிய.

(இ-ள்) தலைவியை வாயிலோவெண்டல் முதலாக இங்கே சொல் [illegible] வைகள் இளையோர்க்குரிய தொழில்களாகும் எ-று.

செய்த [illegible] - தலைமகனது [illegible] சென்று முன்னுரைத்தல் [illegible] - தலைவிமாட்டுச் சென்று தலைவன் வருவனென முன்னுரைத்தல் [illegible] வழியியல்பு - வழியினியல்பு. வழியிடைக் கண்டன - வழியிடைக் கண்ட நிமித்தம் முதலியன. (௯௭)

[கண்டோர்க்குரியதொழில்.]

௯௮. தீதுடைப் புலவி தீர்த்தலு மவன்வரல்
காதலிக் குரைத்தலுங் கண்டோர்க் குரிய.

(இ-ள்) [illegible] தீர்த்தலும், தலைமகன் வரவு தலைவிக்குரைத்தலும் [illegible] தொழில்களாகும் எ-று. (௯௮)

[பார்ப்பனப் பாங்கற்குரிய தொழில்.]

௯௯. இளமையும் யாக்கையும் வளமையு மேனவும்
நிலையாத் தன்மை நிலைபெறத் தோற்றலுஞ்
செலவழுங்கு வித்தலுஞ் செலவுடன் படுத்தலும்
பிறவு மெல்லா மறையோற் குரிய.

(இ-ள்) [illegible] பருவமும், யாக்கையும், செல்வமும், இவை [illegible] நிலையாத [illegible] உணர்த்தி [illegible] செலவழுங்குவித்தலும் செலவுடன் [illegible] பார்ப்பனப் பாங்கற்குரிய தொழில்க [illegible] எ-று.

[illegible] - [illegible] பற்றிய செலவைத் தவிர் [illegible] செலவுடன்படுத்தல் - நல்லநிமித்தம் பற்றிய செலவு [illegible] படுத்தல். பிறவும் என்பதனால் [illegible] முதலியனவைகளும் கொள்க. (௯௯)

[சூத்திரப்பாங்கற்குரியதொழில்.]

௧௦௦. நன்மையி னிறுத்தலுந் தீமையி னகற்றலுஞ்
சொன்னவை பிறவுஞ் சூத்திரற் குரிய.

இ - ள். நன்மையினைக்கண்ணே நிறுத்துதலும், தீமையினின்று நீக்குதலும். மேற்சொல்லப்பட்டவை பிறவும் உறுதிப்பயாநூற் குரிய தொழில்களாகும் எ - று.

சொன்னவை பிறவாவன வாயில்வேண்டல் முதலாக மேற் சொல்லப்பட்டன. (௧௦௦)

[பாகனுக்குரியதொழில்.]

௧௦௧. சேயிழைக் கிழத்தியை வாயில் வேண்டலும்
வாயினேர் வித்தலும் வயங்குதுனி தீர்த்தலும்
வினைமுடித் ததன்பின் வியன்பதி சேய்த்தெனத்
தினைவோற் றேற்றலும் பாகற் கியல்பே.

இ - ள். தலைமகளை வாயில்வேண்டல் முதலாக இங்கே சொல்லப்பட்டவைகள் பாகனுக்குரிய தொழில்களாகும் எ - று.

துனி - ஊடல். சேய்த்து என - தூரத்தது என்று. இனைவோற் றேற்றல் - வருந்துபவனாகிய தலைமகனைத் தேற்றுதல். (௧௦௧)

[பாங்கிக்குரியதொழில்.]

௧௦௨. பிரிவுழி விலக்கலும் பிரிவுடன் படுத்தலும்
பிரிவுழித் தேற்றலும் பிரிவுழி யழுங்கலும்
பிறவு முரிய விறைவ னாப பாங்கிக்கு.

இ - ள். பிரிவுழி விலக்கல் முதலாக இங்கே சொல்லப்பட்டவைகள் பிறவும் பாங்கிக்குரிய தொழில்களாகும் எ - று.

[செவிலிக்கும் அறிவர்க்குமுரியதொழில்.]

௧௦௩. முன்வரு நீதியு முலகியன் முறையும்
பின்வரும் பெற்றியும் பிறவு மெல்லாந்
தெற்றெனக் கூறல் செவிலித் தாய்க்கும்
உற்ற வறிவர்க்கு முரிய வாகும்.

இ - ள். முன்வருநீதி முதலாகச் சொல்லப்பட்டவைகளும் பிறவும் தெளியக் கூறுதல் செவிலித்தாய்க்கும், அறிவர்க்கு முரிய தொழில்களாகும். எ - று.

முன்வருநீதியாவன கற்பு, ஒழுக்கம், சுற்றமோம்பல், முதலாயினவாக முன்னுளோரால் கூறப்பட்ட நீதிகள். பின்வரும்பெற்றி - பின்னரடையும்முறைமை. பிறவாவன அல்லவைகடிதன் முதலியன.

[காமக்கிழத்தியர்க்குரியதொழில்.]

௧0௪. குடிப்பிறந் தோரை வடுபபடுத் துரைத்தலும்
மனைவியைப் பழித்தலும் வாடா வூடலுட்
டலைவற் கழறலு மனைவிக் கமைந்த
ஒழுக்கமுங் காமக் கிழத்தியர்க் குரிய.

இ - ள். குடிப்பிறந்தோரை வடுப்படுத்துரைத்தல் முதலாக
இங்கே சொல்லப்பட்டவைகள் காமக்கிழத்தியர்க்குரிய தொழில்க
ளாகும் எ - று.

வடு - குற்றம். மனைவிக்கமைந்த ஒழுக்கம் - மனைவிக்குரிய
ஒழுக்கத்தைத் தான்கொண்டிருத்தல். (௧0௪)

[பரத்தையர்க்குரியதொழில்.]

௧0௫. கிழவோன் றன்னையுங் கிழத்தி தன்னையும்
இகழ்தலுந் தம்மைப் புகழ்தலு நிகழ்பொருள்
கரத்தலும் பரத்தையர் கடனென மொழிப.

இ - ள். கிழவோன் - தலைமகன். கிழத்தி - தலைமகள். நிகழ்
பொருள்கரத்தல் - வந்துகூடியபொருளை மறைத்தல். கடன் - கட
பாடாகிய தொழில் எ - று. (௧0௫)

[இதுவுமது.]

௧0௬. பரத்தையர் காதற் பரத்தையைப் புகழ்தலுந்
தம்மை யிகழ்தலுந் தம்முளுங் கூறுப.

இ - ள். பரத்தையர் காதற்பரத்தையைப் புகழ்தலும் தம்மை
யிகழ்தலும் பிறரிடத்தன்றித் தம்முள்ளேயும் கூறுவர் எ - று. (௧0௬)

[இளையர்.]

௧0௭. இளையர் கிழவோற் கிரவும் பகலும்
களைத லில்லாக் கவசம் போல்வார்.

இ - ள். இளையராவார் தலைமகனுக்கு இரவும் பகலும் நீக்குத
லில்லாத கவசம்போன்று பிரியாமனின்று பாதுகாவல் செய்பவர்
எ - று.

களைதல் - நீக்குதல். கவசம் - சட்டை. (௧0௭)

[இருவகைப்பாங்கர்.]

௧௦௮. இருவகைப் பாங்கரு மொருபெருங் குரிசிற்
கின்னுயிர்த் துணையா விருபெருங் குரவருந்
தன்னை யளித்த தகைமை யோரே.

இ - ள். இருவகைப்பாங்கரும் தலைமகனுக்கு உயிர்த்துணையாக அவன் தந்தைதாயராகிய இருமுதுகுரவரும் அடைக்கலம் என்று அவனைக் கொடுத்தற்குக் காரணமாய் நின்ற பெருமையை யுடையவராவர் எ - று. (௧௦௮)

[தோழி.]

௧௦௯. தோழி செவிலி மகளாய்ச் சூழ்வோ
டுசாத்துணை யாகி யசாத்தணி வித்தற்
குரிய காதன் மருவிய துணையே.

இ - ள். தோழியாவாள் செவிலியின்மகளாய நன்மை தீமை யாராய்தலுடன் உசாத்துணையாகித் துயர்தணிவித்தற்குரிய அன்பமைந்த துணைசெய்பவளேயாம் எ - று.

உசா - ஆராய்வு. அசா - துயர். (௧௦௯)

[செவிலி.]

௧௧௦. செவிலி நற்றாய் தோழி யாகி
அவல நீக்கி யறிவுமா சாரமுங்
கொளுத்தித் தலைவியை வளர்த்த தாயே.

இ - ள். செவிலியாவாள் நற்றாயக்குத் தோழியாகி துயர் நீக்கி அறிவும் ஒழுக்கமும் கொள்ளச்செய்து தலைவியை வளர்த்த தாய் எ - று. (௧௧௦)

[அறிவர்.]

௧௧௧. அறிவர் கிழவோன் கிழத்தியென் றிருவர்க்கும்
உறுதி மொழிந்த வுயர்பெருங் குரவர்.

இ - ள். அறிவராவார் தலைமகன், தலைமகள் என்ற இருவர்க்கும் உறுதிப்பொருள்களை உபதேசித்த உயர்ந்த பெருங்குரவராயுள்ளவர் எ - று. (௧௧௧)

[காமக்கிழத்தியர்.]

௧௧௨. ஒருவன் றனக்கே யுரிமை பூண்டு
வருகுலப் பரத்தையர் மகளி ராகிக்
காமக்கு வரைந்தோர் காமக் கிழத்தியர்.

இ - ள். காமக்கிழத்தியராவார் சேரிப் பரத்தையர்போலப் பல்கரு முரியவரன்றி ஒருவற்கே உரிமைபூண்டுவரும் குலப்பரத்தையர் மகளிராகிக் காமநுகாரணமாகத் தலைமகனால் வரையப்பட்டவர் எ - று. (௧௧௨)

[காதற்பரத்தையர்]

௧௧௩. யாழ்வரையு நயவா வியல்பிற் சிறந்த
சேரிப் பரத்தையர் மகளி ராகிக்
காதலிற் புணர்வோர் காதற் பரத்தையர்.

இ - ள். கலையும் விருப்பத்தக்க தன்மையிற் சிறந்த சேரிப்பரத்தையருடைய மகளிராகி அன்பொடு புணர்வோர் காதற்பரத்தையராவார் எ - று. (௧௧௩)

[இதுவுமது.]

௧௧௪. அவருளும் வரைதற் குரியா ருளரே.

இ - ள். அக்காதற்பரத்தையருள்ளும் தலைமகனுக்கு வரைந்து கொள்ளுதற்குரியோர் உளர் எ - று.

(குலப்பரத்தையர் மகளிரே யன்றிச் சேரிப்பரத்தையர் மகளிராகிய இவரும் சிலபொழுது காமக்கிழத்தியராதற் குரியர் என்றவாறு. (௧௧௪)

[துறவறங்காத்தல்.]

௧௧௫. மக்களொடு மகிழ்ந்து மனையறங் காத்து
மிக்க காமத்து வேட்கை தீர்ந்துழித்
தலைவனுந் தலைவியுந் தம்பதி நீங்கித்
தொலைவில் சுற்றமொடு துறவறங் காப்ப.

இ - ள். தலைமகனும் தலைமகளும் மக்களோடும் கூடி மகிழ்வுடன் வாழ்ந்து இல்லறத்தினைப் பேணிக் காமவேட்கை தீர்ந்தபோதே தம்மூர் நீங்கிக் காட்டிற்சென்று நீங்குதலில்லாத சுற்றத்தாரோடும் துறவறம் காப்பர் எ - று.

அகத்திணையியல் முற்றிற்று.



# களவியல்.



களவு என்னும் கைகோளின் இலக்கணம் உணர்த்துதலை நுதலி இவ்வியல் களவியல் எனப்பட்டது. களவு - களப்புணர்ச்சி. இயல் - இலக்கணம்.

[களவு.]

ந க சா. உளமலி காதற் களவெனப் படுவ
தொருநான்கு வேதத் திருநான்கு மன்றலுள்
யாழோர் கூட்டத் தியல்பின தென்ப.

(இ - ள்.) களவென்று சிறப்பித்துச் சொல்லப்படும் ஒழுக்கம் மேலோதிய வேதத்திற் சொல்லப்பட்ட எண்வகை மணத்துள்ளே யாழோர் கூட்டத்தின் இயல்பினையுடையது என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

உளமலி காதல் - உள்ளம் நிறைதற்குக் காரணமாகிய காதல். மன்றல், மணம், கூட்டம், புணர்ச்சி என்பன ஒருபொருட் கிளவிகள். யாழோர் கூட்டம் - காந்தருவமணம். யாழோர் - கந்தருவர்.

மணம் எட்டாவன: பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என்பன.

பிரமமணமாவது பிரமசாரியும் தக்கவனுமாயுள்ள ஒருவனுக்குக் கன்னிகையை அலங்காரஞ்செய்து அக்கினிமுன்னிலையிற் கொடுப்பது.

பிரசாபத்திய மணமாவது தலைமகனுடைய பெற்றோர்வேண்டத் தலைமகளுடைய பெற்றோர் அவளை அலங்காரஞ் செய்து அக்கினிமுன்னிலையிற் கொடுப்பது.

ஆரிடமணமாவது ஆவும் ஆனேறும் பொற்கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து அவற்றிடைக் கன்னிகையை நீரிற்கொடுப்பது.

தெய்வமணமாவது வேள்வியாசாரியனுக்கு வேள்வித்தீமுன்னர்க் கன்னிகையைத் தக்கிணையாகக் கொடுப்பது.

காந்தருவமணமாவது கொடுப்பவரும் கேட்பவருமின்றித் தலைமகனும் தலைமகளும் தாமே தனியிடத்தில் எதிர்ப்பட்டுக் கூடுவது.

ஆசுரமணமாவது கொல்லேறுதழுவல், வில்லேற்றுதல் முதலிய வீரச்செயல் செய்தவனுக்குக் கன்னிகையைக் கொடுப்பது.

இராக்கதமணமாவது தலைமகன் தலைமகளை வலிந்து கூடுவது.

பைசாசமணமாவது நித்திரைசெய்தாள், கள்ளுண்டு களித்தாள் முதலியோரைக் கூடுவது.

இந்த எண்வகைமணங்களையும் வேறுசிலநூல்கள் சிறிது வேறுபடச் கூறுவதும் உண்டு. இவற்றுள்ளே கந்தருவர்புணர்ச்சி போல ஒருதலைமகனும் ஒருதலைமகளும் தாமே எதிர்பபட்டுப புணர்வதே களவு என்னும் கைகோளாகும். (௧)

[கைக்கிளை.]

௧௧௭. காட்சி யையந் துணிவுகுறிப் பறிவென
மாட்சி நான்கு வகைத்தே கைக்கிளை.

இ - ள். காட்சியும், ஐயமும், துணிவும், குறிப்பறிவும் எனக் கைக்கிளை மாட்சியமைந்த நான்குவகை உடையதாகும் எ-று. (௨)

[காட்சி.]

௧௧௮. புணர்ப்பதும் பிரிப்பது மாகிய பால்களுட்
புணர்க்கும் பாலிற் பொருவிறந் தொத்த
கறைவேற் காளையுங் கன்னியுங் காண்ப
இறையோ னுயரினுங் குறையின் றென்மனார்.

இ - ள். புணர்த்துவிடுவதும் பிரித்துவிடுவதுமாகிய இருவகை ஊழ்வினையுள்ளே புணர்க்கும் ஊழாகிய நல்வினையினாலே தம்மிற்றாமே ஒத்த தலைமகனும் தலைமகளும் ஒருவரையொருவர் எதிர்ப்படுவர்; தலைமகன் உயர்ந்தோனாயினும் குற்றமில்லை என்று சொல்லுவர் புலவர் எ - று.

பால்—ஊழ், விதி. பொருவு-ஒப்பு. கறைவேற்காளை - நிணம் பொருந்திய வேற்படையையுடைய தலைமகன். இறையோனுயரினுங் குறையின்று எனவே தலைமகள் உயர்தல் குற்றம் என்பது பெறப்படும்.

உதாரணம்.

புயலே சுமந்து பிறையே யணிந்து பொருவிலுடன்
கயலே மணந்து கமலே மலர்ந்தொரு கற்பகத்தின்
அயலே பசும்பொற் கொடிநின்ற தால்வெள்ளை யன்னஞ்செந்நெல்
வயலே தடம்பொய்கை சூழ்தஞ்சை வாணன் மலயத்திலே.

[ஐயம்.]

௧௧௯. மடமா னேக்கி வடிவுங் கண்ட
இடமுஞ் சிறந்துழி யெய்துவ தையம்.

இ - ள். தலைமகளுடைய வடிவமும், அவளைத் தான கண்ட இடமும் சிறந்தகாலத்துத் தலைமகனிடத்தே உண்டாகும் உணர்வு ஐயம் எனப்படும் எ - று.

எனவே அவைசிறவாவழி ஐயம் நிகழாது என்பதாயிற்று. ஈண்டு ஐயமாவது மானுடப்பெண்ணோ? தெய்வப்பெண்ணோ? என்று ஒரு நிலைப்படாத உணர்வு.

உதாரணம்.

பாரணங் கோதிருப் பாற்கட லீன்றபங் கேருகத்தின்
ஓரணங் கோவெற் புறையணங் கோவுயர் பாவலர்க்கு
வாரணங் கோடி தருந்தஞ்சை வாணன்றென் மாறைவையை
நீரணங் கோநெஞ்ச மேதனி யேயிங்கு நின்றவரே. (௪)

[துணிவு.]

௧௨௦. எழுதிய வல்லியுந் தொழில்புனை கலனும்
வாடிய மலருங் கூடிய வண்டும்
நடைபயி லடியும் புடைபெயர் கண்ணும்
அச்சமும் பிறவு மவன்பா னிகழுங்
கச்சமி லையங் கடிவன வாகும்.

இ - ள். இங்கே கூறப்பட்ட எழுதியவல்லி முதலியனவும் பிறவும் அத்தலைமகன்பால் நிகழ்கின்ற அளவிறந்த ஐயங்களைப போக்குங் காரணங்களாகும் எ - று.

எழுதியவல்லியாவது முலையிலுந் தோளிலும் எழுதப்பட்ட தொய்யிற்கொடி. தொழில்புனைகலன்-தொழிலால் அலங்கரிக்கப் பட்ட ஆபரணம். வாடியமலராவது கையிற்கொண்டு மோந்து உயிர்த்தலால் வாட்டமடைந்தபூ; உடம்பிலணிந்து வாட்டமடை

ந்த பூ எனினுமாம். கூடியவண்டு - தேனுண்ணுமாறு கூடிய வண்டு. நடைபயில் அடி - பூமியிலே தோயாது நடத்தலுடைமைபொருந்திய அடி. புடைபெயர்கண்-பிறழுகின்ற கண். அச்சம் - அடவணைக் கண்டுழி அஞ்சுதல். பிறவாவன நிழலிடுதல், வேறாவைகொள்ளல், ஆடையழுக்கடைதல் முதலியன. கச்சம் - [illegible] கடிதல்-நீக்குதல்.

எழுதியவல்லி முதலியன தெய்வமகளிரிடம் காணப்படாமையான் மானுடமகள் எனத் துணிதற்கு அவை ஏதுவாயின.

### உதாரணம்.

மையார் குவளை வயற்றஞ்சை வாணனை வாழ்த்தலர்போல்
நையா தொழிமதி நன்னெஞ்ச மேயினி நம்மினுந்தன
நெய்யார் கருங்குழற் செம்மலர் வாடின நீலவுண்கண்
கையா லழைப்பன போலிமை யாநிற்குங் காரிகைக்கே.

திருநுதல் வேர்வரும்புந் தேங்கோதை வாடும்
இருநிலஞ் சேவடியுந் தோயும்—அரிபரந்த
போகித முண்கணு மிமைக்கும்
ஆகு மற்றிவ ளகலிடத் தணங்கே. வெண்பாமாலை.

### [குறிப்பறிவு.]

**கஉக. அரிவை நாட்ட மகத்துநிகழ் வேட்கை**
**தெரிய வுணர்த்துங் குரிசிற் கென்ப.**

இ - ள். தலைமகளுடைய கண்கள் அவளுடைய [illegible] நிகழ்கின்ற வேட்கையைத் தலைமகனுக்கு விளங்குமாறு அறிவிக்கும் எ - று.

நாட்டம்-கண். தெரியவுணர்த்தலாவது தலைமகனை நோக்க நோக்குக்கு எதிரே அவளும் நோக்குதல். அந்நோக்கினுலே தலைமகன் அவள் கருத்தினை அறிந்துகொள்ளுவன். குறிப்பு-கருத்து. அறிவு-அறிதல்.

### உதாரணம்.

பண்ணிற் சிறந்த புகழ்த்தஞ்சை வாணன் மலயவெற்பிற்
பெண்ணிற் சிறந்த விபபேதைதன் பார்வை பெருவினைபோ
லெண்ணிற் சிறந்த விருந்துயர் நோய்தனக் கின்மருந்தாய்க்
கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை யாவதுங் காட்டியதே. (கூ)

[களவின்கிளவித்தொகை.]

[1]இயற்கைப் புணர்ச்சி [2]வன்புறை [3]தெளிவே
[4]பிரிவுழி [5]மகிழ்ச்சி [6]பிரிவுழிக் கலங்கல்
[7]இடந்தலைப் பாடு [8]பாங்கற் கூட்டம்
பாங்கிமதி யுடம்பாடு [9]பாங்கியிற் கூட்டம்
பாங்கமை [10]பகற்குறி [11]பகற்குறி யிடையீ
டிரவுக் குறியே [13]யிரவுக்குறி யிடையீடு
வரைவு வேட்கை [15]வரைவு கடாதல்
ஒருவழித் தணத்தல் [17]வரைவிடை வைத்துப்
பொருள்வயிற் பிரிதலென் றொருபதி னேழுங்
களவிற் குரிய கிளவித் தொகையே.

இ - ள். இங்கே கூறப்பட்ட இயற்கைப்புணர்ச்சி முதலிய பதினேழும் களவு என்னும் கைகோளுக்குரிய கிளவியின் தொகை யாகும் எ - று.

---

## க. இயற்கைப்புணர்ச்சி.

தெய்வப்புணர்ச்சி தலைவியிற் புணர்ச்சியென்றிப்படி யிருவகைத்தாகும். இஃதுலாசசூத்திரம்.

[தெய்வப்புணர்ச்சி.]

௧௨௩. தெய்வம் புணர்ப்பச் சிந்தை வேறாகி
எய்துங் கிழத்தியை யிறையோ னென்ப.

இ - ள். தெய்வமானது கூட்டிவிடத் தலைமகன் தன்மனம் வேறுபட்டுத் தலைமகளைக் கூடுவான் என்று சொல்லுவர் புலவர் எ - று. (அ)

[தெய்வப்புணர்ச்சியின்விரி.]

௧௨௪. கலந்துழி மகிழ்தலு நலம்பா ராட்டலும்
ஏற்புற வணிதலு மென்னுமிம் மூன்றும்
போற்றிய தெய்வப் புணர்ச்சியின் விரியே.

இ - ள். கலந்துழிமகிழ்தல் முதலிய மூன்றும் போற்றப்பட்ட தெய்வப்புணர்ச்சியின் விரியாகும் எ - று.

கலந்துழிமகிழ்தல்-புணர்ந்துழிமகிழ்தல். நலம்பாராட்டல்-நலத்தினைக் கொண்டாடுதல். ஏற்புறவணிதல் - புணர்ச்சியிலே

சிதைந்தவைகளை முன்போலப் பொருந்த அணிதல். போற்றிய துதிக்கப்பட்ட.

உதாரணம்.

கலந்துழிமகிழ்தல்.

சொற்பா லமிழ்திவள் யான்சுவை யென்னத் துணிந்திங்ஙனே
நற்பால் வினைத்தெய்வந் தந்தின்று நானிவ ளாம்பகுதிப்
பொற்பா ரறிவார் புலியூர்ப் புனிதன் பொதியில்வெற்பிற்
கற்பா வியவரை வாடக்கடி தோட்ட களவகத்தே. திருக்கோவை.

நலம்பாராட்டல்.

உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம் பலத்தொரு த்தன், குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிக் கொடி யிடைதோள், புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய், மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின் றதே. திருக்கோவை.

ஏற்புறவணிதல்.

தூசுங் கலையுந் தொலையா வழகெறிக் குநதொடியும்
வாசங் கமழு மதுமல ரோதியும் வண்களபம்
பூசுங் கனதனம் பூணுமுந் தாரமும் பூங்குழையும
ஆசும் பழுதில்பொன் னேபண்டு போல வணிந்தனமே.

இலக்கணவிளக்கம் (௧)

[தலைவியிற்புணர்ச்சிவகை.]

௧௨௫. [1]வேட்கை யுணர்த்தன் [2]மறுத்த [3]லுடம்படல்
[4]கூட்டமென் றிறைவியிற்கூட்டநால்வகைத்தே.

இ - ள். வேட்கையுணர்த்தலும், மறுத்தலும், உடன்படலும், கூட்டமும் என்று தலைவியாற் புணரும் புணர்ச்சி நான்குவகையி னையுடைத்து. எ - று. (௪௦)

[தலைவியிற்புணர்ச்சிவிரி.]

௧௨௬. [1]இரந்து பின்னிற்றற் கெண்ணலு மிரந்து
பின்னிலை நிற்றலு முன்னிலை யாக்கலும்
மெய்தொட்டுப் பயிறலும் பொய்பாராட்டலும்
இடம்பெற்றுத் தழாஅலும் வழிபாடுமறுத்தலும்
இடையூறு கிளத்தலு நீடுநினைந் திரங்கலும்

மறுத்தெதிர் கோடலும்வறிதுநகைதோற்றலும்
[4]முறுவற்குறிப்புணர்தலுமுயங்குதலுறுத்தலும்
புணர்ச்சியின் மகிழ்தலும் புகழ்தலும் பிறவும்
உணர்த்திய தலைவியிற் புணர்ச்சியின் விரியே.

இ-ள். இரந்து பின்னிற்றற்கெண்ணல் முதலாக இங்கே கூறப்பட்டவைகளும் பிறவும் தலைமகளாற் புணரும் புணர்ச்சியின் விரியாகும் எ-று.

தழாஅல் - தழுவுதல். வழிபாடுமறுத்தலாவது தலைவியின் வேட்கைக்குறிப்புக்கண்டு தலைமகன் சார்தலுற்றவழி அவள் உடம்படாது மறுத்தல். வறிதுநகை - சிறிதாகிய நகை. முயங்குதலுறுத்தல் - முயங்குதலை யிருத்துக்கூறல். பிறவாவன மருங்கணைதன முதலியன.

இவற்றுள்ளே இரந்துபின்னிற்றற்கெண்ணல், இரந்துபின்னிலைநிற்றல், முன்னிலையாக்கல், மெய்தொட்டுப்பயிறல், பொய்பாராட்டல், இடம்பெறறுத்தழாஅல், இடையூறுகிளத்தல், நீடுநினைந்திரங்கல் என்னும் எட்டும் தலைவன் தன் வேட்கையுணர்த்தற்குரியன. வழிபாடுமறுத்தல் என்னும் ஒன்றும் தலைவி மறுத்தற்குரியது. மறுத்தெதிர்கோடல், வறிது நகைதோற்றல் என்னும் இரண்டும் தலைவியுடம்பாட்டிற்குரியன. முறுவற்குறிப்புணர்தல், முயங்குதலுறுத்தல், புணர்ச்சியின்மகிழ்தல், புகழ்தல் என்னும் நான்கும் கூட்டத்திறகுரியன.

## உதாரணம்.

### இரந்துபின்னிற்றற்கெண்ணல்.

[தலைவன் தலைவியிடத்துத் தன்வேட்கையுரைத்து அவளை இரந்து வழிபட்டுநிற்கவெண்ணல். பின்னிற்றல்-வழிபடல்.]

தேங்கிய காதர வாதரஞ் செப்பித்தண் செப்பிணைபோல்
வீங்கிய மாமுலை மேவுதும் யாம்விசை யக்கொடிமேல்
வாங்கிய சாப முயர்த்தவன் போர்வென்ற வாணன்வையா
தாங்கிய மாலனை யான்றஞ்சை சூழ்வரைத் தாழ்குழற்கே.

### இரந்துபின்னிலைநிற்றல்.

[தலைவன் தலைவியை இரந்து வழிபட்டு நிற்றல். பின்னிலை நிற்றல் - பின்னிற்றலைச்செய்தல்.]

செறிவேழ வெஞ்சிலை வேடஞ்சைவாணன் திருந்தலர்மேல்
எறிவேலை வென்றகண் ணென்னுயிர்க் கேவி யிருண்டறல்போல்

நெறிவே யலங்கன் முடித்தலை சாயத்திங்ங னிற்பதுதான்
அறிவே யறிந்த வுனக்கலர் மாளிகை யாரணங்கே.

## முன்னிலையாக்கல்.

[தலைவன் தலைவியை முன்னிலையாக்கிக் கூறுதல்.
முன்னிலையாக்கல் - எதிர்முகமாக்கல், விளித்தல்.]

வழுதியர் நாமம் வளர்க்கின்ற வாணன்றென் மாறைவண்டு
கொழுதிய லார்செய குழன்மட வீர்நுங்குற் றேவல்செய்து
தொழுதிய லாயத் தொகுதியொ டாடிச் சுனைகுடையா
தெழுதிய பாவையைப போனின்ற வாறென் னியம்புமினே.

## மெய்தொட்டுப்பயிறல்.

[தலைவன் யாதுமொருவியாசமாகத் தலைவியின் மெயயினைத
தீண்டிப்பயின்று நிற்கும் நிலைமை.]

நல்லார் விழிபோ லிருந்து மளியெனு நாமம்பெற்றும்
அல்லார் குழலி லமர்நதிருந் தாலம ராரைவெல்ல
வல்லான் வரோதயன் வாணன்றென் மாறை மதுகரங்கா
நில்லா திடையுமக் கேபழி சால நிலைநிற்குமே.

## பொய்பாராட்டல்.

[தலைவன தலைவியைப பொயசெய்யாநின்று புனைந்துரைத்தல

டருநதொன்று கூரிலை வேற்றஞ்சை வாணன பரிமளபூஞ்
செருந்தொனறு சோலைத்தென மாறையன் னீர்செழுந திங்களுந
முருநதொன்று கோப முகங்கண்டு நாணி முயன்மறுத்தி [கலை
மருந்தொன்று நாடியன் றேவட மேரு வலங்கொள்வதே.

## இடம்பெற்றுத்தழாஅல்.

[தலைவன் தலைவியை முகம்பெற்று அவளை உளப்படுததிக்
கூறுதல். தழாஅல் - தழுவுதல்.]

படம்பட்ட வாளர வல்குலி லேதலை பட்டநெஞ்சே
விடம்பட்ட வாள்பட்ட வேதனை தீரவின் டோய்பொழிலு
டம்பட்ட வாவியுஞ் சூழ்தஞ்சை வாணன் றமிழ்க்கிரிநாட்
டிடம்பட்ட வார முலைத்தடந் தோய்தற் கிடமிதுவே.

## வழிபாடுமறுத்தல்.

[தலைவன்செய்த வழிபாடுகளைத் தலைவி மறுத்தல்.]

தேருந தெவ்வென்ற வாணன்றென் மாறைச்செந் தேனருவி
யூருந காலத்து மூறுதண் சார லொராதுக்கிடந்தந்
தாருந சோகமு மாற்றுதல் வேண்டு மசோகமெய்தி
மாருந தண்ணளி கூர்மலர் வாண்முக மாதவியே.

## இடையூறுகிளத்தல்.

[தலைவி கூட்டத்திற்கிடையூறாக நிகழ்ந்தவ
ற்றைத் தலைவன் சொல்லல்.]

சிதையா முளரித் திருமா ளிகையிற் சிறந்ததென்றென்
இதயா ரவிந்தத் தினிதிருப் பீரிரு கோட்டொருகை
மதயானை வாணன் வருந்தஞ்சை சூழ்வையை நாட்டுறைவோர்
புதையார் தனமென்ப தோமதர் வேறகண் புதைத்ததுவே.

## நீடுநினைந்திரங்கல்.

[தலைவன் புணர்ச்சிநிகழாது பொழுதுநீண்டதற்கிரங்கல்.]

தமிழ்தங்கிய தஞ்சைக் காவலன் வாணன் றடஞ்சிலம்பிற
குமிழ்தங் கியமதிக் கொம்பரன் னீர்குளிர் வெண்ணிலவூ
டுமிழதண் டரளப் பவளச்செங் கேழ்வள்ளத் துள்ளிருக்கும
அமிழ்தரு கருவதென் றேபெரு வேட்கையென ருயிர்க்கே.

## மறுத்தெதிர்கோடல்.

[முன்னர் வழிபாடுமறுத்த தலைவி தலைவனை
எதிர்கொள்ளுதலை விரும்பல்.]

கறையா ரிலங்கிலை வேலன்பர் காமக் கடற்கெதிர்ந்த
நிறையாம் வரம்பினி னிற்பதன் றுனிறை நீருலகை
மறையாமல் வன்கலி மாற்றிய வாணன்றென் மாறையினும்
பொறையார் தவஞ்செய திலைநெஞ்ச மேயென் புநல்வதுவே.

## வறிதுநகைதோற்றல்.

[தலைவி முகிழ்நகை சிறிது தோற்றுவித்தல்.]

எறிதே னலம்புஞ் சிலம்பினெப் போது மிரந்திவள்பின்
வெறிதே திரிந்து மெலிந்தன நாமுள்ள மெல்லியற்குப்

பிறிதேகொ லென்னும் பெருந்தகை தேறப் பெரிதுயிர்த்து
வறிதே முறுவல்செய தாடஞ்சை வாணன வரையணங்கே.

## முறுவற்குறிப்புணர்தல்.

[தலைவன் தலைவிசெய்த முறுவலின் குறிப்பறிதல்.]

வின்மலை வேலன்ன நன்னுதல் வாட்கண்ணி வேட்கையெண்ணாள்
என்மலை வேனென்னு மென்னுயிர் தாங்கு மெதிர்ந்தவொனனார்
மன்மலை வேழந் திறைகொண்ட சேயதஞ்சை வாணனமஞ்சார்
தென்மலை வேயனிக ரும்பெருந் தோளி சிறுநகையே.

## முயங்குதலுறுத்தல்.

[தலைவன் தனது முயங்குதல்விருப்பத்தை
வலியுறுத்திக் கூறல்.]

வானக் கதிரவன் மண்ணக மாதை மணந்த தன்றோ
ஈனக் குழலியை நானின்று பெற்றது நாவலர்க்குத்
தானக் களிறு தரும்புயல் வாணன் றமிழ்த்தஞ்சைசூழ்
கானக் கடிவரை வாயவிரை நாண்மலர்க் காவகத்தே.

## புணர்ச்சியின்மகிழ்தல்.

[தலைவியை முயங்கித் தலைவன் மகிழ்ச்சியடைதல்]

மலைநாடு கொண்ட வழுதிகண் போல்பவன் வாணனெனணணை
கலைநாடு தஞ்சையர் காவலன் மால்வரைக் கன்னிபொனனாள
முலைநா முயன்று முயங்கின மானமுயன் குலினிடைந
தலைநாக நன்மணி யும்பெற லாகுமித் தாரணிக்கே.

## புகழ்தல்.

[தலைமகன் தலைமகளது அழகைப புகழ்தல்.]

திரண்மா மரகதச் செயகுன்று காளென்றுஞ் செவ்வனநீா
முரண்மா தவங்கண் முயன்றுசெய தாலு முளரிமங்கை
சரண்மாறை வாணன் றமிழ்த்தஞ்சை நாட்டென் றனியுயிர்க்கோர்
அரண்மா னனையகண் ணாள்கொங்கை போற லரிதுமக்கே. (கக)

---

## உ. வன்புறை.

*கஉ௪. ஐயந் தீர்த்தல் பிரிவறி வுறுத்தலென்
றெய்திய வன்புறை யிருவகைத் தாகும்.

இ - ள். களவித்தொகை கூறிய "இயற்கைப்புணர்ச்சி" என்னும் சூத்திரத்தாற் பெறப்பட்ட வன்புறை ஐயந்தீர்த்தல் என்றும் பிரிவறிவுறுத்தல் என்றும் இருவகையுடையது எ - று.

வன்புறை - வற்புறுத்தல். வன்பு - திடம், வலி. உறை - உறுத்தல். வன்பினையுறுத்தல் என விரியும். (கஉ)

[வன்புறைவிரி.]

கஉஅ. [1]அணிந்துழி நாணிய துணர்ந்து தெளிவித்தலும்
[2]பெருநயப் புரைத்தலுந் [3]தெய்வத்திறம் பேசலும்
[4]பிரியே னென்றலும் [5]பிரிந்துவரு கென்றலும்
[6]இடமணித் தென்றலு மென்றிவை யாறும்
மடனறத் தெரிந்த வன்புறை விரியே.

இ - ள். அணிந்துழி நாணியதுணர்ந்து தெளிவித்தல் முதலிய ஆறும் வன்புறையின் விரியாகும் எ - று.

இவற்றுள்ளே முன்னையமூன்றும் ஐயந்தீர்த்தல். பின்னையமூன்றும் பிரிவறிவுறுத்தல்.

உதாரணம்.

அணிந்துழிநாணியதுணர்ந்துதெளிவித்தல்.

[தலைவன் புணர்ச்சியில் வேறுபட்ட அணிகளைத் திருத்தியபோது தலைவி நாணியதை அறிந்து அவளைத் தெளிவித்தல்.]

நாவியுங் காரகி லாவியுந் தோய்குழ லணியஞ்சேல்
வாவியுஞ் சோலையுஞ் சூழ்தஞ்சை வாணன்றென் மாறைவயற்
காவியுஞ் சேலுங் கமலமுங் காட்டுநின் கண்மலரும்
ஆவியும் போலினி யாரணி யாக வணிந்தனனே.

பெருநயப்புரைத்தல்.

[தலைவன் தன்மாட்டுள்ள மிகுந்த விருப்பத்தைக் கூறுதல். நயப்பு - விருப்பு.]

மன்னு வுலகத்து மன்னிய சீர்த்தஞ்சை வாணன்வெற்பில்
என்னுயி ரன்ன விவளிடை மேலிணை கொண்டெழுந்த
பொன்னணிகொங்கைபோலவண்டருங்கள் பொய்கையுண்டோ
நன்னு ளரும்பொரு தாளிரண் டனு நளினங்களே.

## தெய்வத்திறம்பேசல்.

[தலைவன ஊழினைகூறுபாட்டைக் கூறுதல்.]

மன்னிய பாரபுகழ் வாணன்றென் மாறையின் மாநதளிர்போல்
மின்னிய மாமை விளர்ப்பதென் னேவிதி கூட்டமிர
பின்னிய காதற் பிரிப்பவர் யாரினிப் பேரருவி
இன்னிய மாக விளையாடி லாடு மிரும்பொழிற்கே.

## பிரியேனென்றல்.

[தலைவன் பிரிவன்மைகேட்டு வருந்திய தலைவியை நோக்க
நான் நின்னிற பிரியேனென்று கூறுதல்.]

வண்கொடி யேயமதின் மாறை வரோதபன் வாணனென்று
ஒண்கொடி யேனுடை யிவ்வண்ண நீயிரங் கேலிரங்கேல்
நுணைகொடி யேரிடை வண்டிமிர் பூங்குழ லாபுரத்தாட்
பண்கொடி யேபிரி யேன்றரி யேனிற் பிரியினுமே.

## பிரிந்துவருகேன்றல்.

[தலைவன நான் நின்னிற சிறிதுபிரிந்து மீட்டுவருவேன
என்று கூறுதல. வருகு - வருவேன்.]

சென்றே பகைவென்ற திண்படை வாணன் செழுந்தஞ்சைசூழ்
நன்றே தருவையை நாடனை யாடமை தாருயிர்போல்
ஒன்றே யெனதுரை யூங்குயர் சோலையி னூடொளித்து
நின்றே வருவலிங் கேயிளை யாடுக நீசிறிதே.

## இடமணித்தென்றல்.

[தலைவன் தன்னூர் அணித்தாயுள்ளதென்று
தலைவிக்குக் கூறுதல்.]

மணிபொன் சொரியுங்கை வாணன்றென் மாறை மருவினர்போற்
றணிபொன் சொரியுந தடமுலை யாயுயர் சந்தமுந்தி
அணிபொன் சொரியு மருவியெஞ் சார லகத்தலர்தேங்
கணிபொன் சொரியுநின் சாரன்மென் காந்தளங் கையகத்தே. (கரு)

---

## ரு. தெளிவு.

**கஉகூ. தலைவன் மாற்றந் தலைவி தேற்றந்
தெளிவா மென்ப தெளிந் திசினோரே.**

இ - ள். தலைவன் சொல்லிய சொல்லினைத் தலைவி தேறுதலைத் தெளிவு என்று சொல்லுவர் புலவர் எ - று.

தெளிந்திசினோர் - தெளிந்தவர், புலவர்.

### உதாரணம்.

எத்துறா கமதுரை தேறிநின் றேனையிங் கேதனியே
வைத்தருங் ககன்று மறந்துறை யார்வறி யோர்கவர
முத்தந் துகிரு மிரங்குந் தரங்க முகந்தெறிந்து
தத்தும புனல்வையை சூழ்தஞ்சை வாணன் றமிழ்வெற்பரே.

---

## ௪. பிரிவுழிமகிழ்ச்சி.

**௧௩0. செல்லுங் கிழத்தி செலவுகண் டுளத்தொடு**
**சொல்லலும் பாகனொடு சொல்லலு மிரண்டும்**
**பிரிவுழி மகிழ்ச்சியின் விரியெனக் கொளலே.**

இ - ள். தன்னைத் தலைவிகாணாமல் தான் அவளைக் காணாதக்க அளிமைக்கணின்ற தலைமகன் புணர்ச்சிக்களத்தினின்றும் போகுந் தலைமகளின் செல்லுகையைக்கண்டு தன்னுளத்தொடு கூறுதலும், தேர்ப்பாகனொடு கூறுதலுமாகிய இரண்டும் பிரிவுழி மகிழ்ச்சியின் விரியாகும் எ - று.

பிரிவுழி மகிழ்ச்சியாவது தலைவி பிரிந்துசெல்லும்வழித் தலைவன் மகிழ்தல்.

### உதாரணம்.

**செல்லுங்கிழத்திசெலவுகண்டுளத்தொடுசொல்லல்.**

அகிலேந்து கூந்த லொருகையி லேந்தி யசைந்தொருகை
துகிலேந்தி யேந்துந் துணைச்சிலம் பார்ப்பத் துளிகலந்த
முகிலேந்து பூம்பொழில் சூழ்தஞ்சைவாணன் முந்நீர்த்துறைவாய
நகிலேந்து பூங்கொடி போற்செல்லு மானெஞ்ச நம்முயிரே.

**பாகனொடுசொல்லல்.**

தென்பாற் றிலகமன் ஞன்றஞ்சை வாணன்றென் மாறைமுந்நீர்
வன்பாற் றிரண்முத்த வண்டலின் மேல்வரு மேதமஞ்சி
முன்பார்த்தென் னெஞ்சம் வரும்வழி பார்த்து முறைமுறையே
பின்பார்த் தொதுங்குதல் காண்வல வாவொரு பெண்ணணங்கே.

## ரு. பிரிவுழிக்கலங்கல்.

கரு௧. மருளுற் றுரைத்த றெருளுற் றுரைத்தலென்
றிருவகைத் தாகும் பிரிவுழிக் கலங்கல்.

இ - ள். பிரிவுழிக்கலங்கல் மருளுறறுரைத்தலும் தெருளுற றுரைத்தலும் என்று இருவகையுடைத்து எ - று.

பிரிவுழிக்கலங்கலாவது தலைவிபிரிந்தவழித் தலைவன் மனங் கலங்கிக் கூறுதல். (௧௬)

[பிரிவுழிக்கலங்கல்விரி]

கரு௨. ஆய வெள்ளம் வழிபடக் கண்டிது
மாயமோ வென்றலும் வாயில்பெற் றுய்தலும்
பண்பு பாராட்டலும் பயந்தோர்ப் பழிச்சலுங்
கண்படை பெறாது கங்குனோ'தலுமெனும்
ஐந்தும் பிரிவுழிக் கலங்கல்விரி யாகும்.

இ - ள். ஆயவெள்ளம் வழிப்படக்கண்டிது மாயமோவென் றல் முதலிய ஐந்தும் பிரிவுழிக்கலங்கலின் விரியாகும். எ - று.

ஆயவெள்ளம் வழிபடக்கண்டிதுமாயமோவென்றல் என்னும் ஒன்றும் மருளுற்றுரைத்தற்குரியது. மற்றைய நான்கும் தெருளு ற்றுரைததற்குரியன.

### உதாரணம்.

#### ஆயவெள்ளம்வழிபடக்கண்டிதுமாயமோவென்றல்.

[தலைவன் தலைமகளது ஆயவெள்ளத்தின் பெருக்கையும் அவர் கள் அவட்குச்செய்யும் வழிபாட்டையுங்கண்டு இவளை யான் பெற்றது என்னமாயமோவென்று வியந்துகூறல்.]

சேயங்கொ லோவெனத் தெவ்வென்ற வாணன்றென் மாறைவையை
தோயங்கொ லோவெனு நேயநம் பால்வைத்துச் சோலைமஞ்சை [த்
ஆயங்கொ லோவெனு மாயத் துள்ளாளிவ் வரிவையென்ன
மாயங்கொ லோநெஞ்ச மேமணம் போலிங்கு வந்துற்றதே.

#### வாயில்பெற்றுய்தல்.

[தலைவிக்குச் சிறந்தாளாகிய பாங்கியின் காரியைத் தலைவன் பெற்று உய்ந்தேனென்று எண்ணுதல்.]

பெருமான் மருந்தொன்று பெற்றனம் யாநெஞ்சம் பேதுறல்பார்
மருமான் வரோதயன் வாணன்றென் மாறை மணங்கமழ்பூந்
திருமான் முகமலர்ச் சேயரி பாயகயல் சென்றுசென்றவ்
வொருமா னகைமுக மாமல ரோடை யுலாவருமே.

## பண்புபாராட்டல்.

[தலைவியுடைய அழகினைத் தலைவன் விரும்பிப் பாராட்டுதல.
பாராட்டல் - கொண்டாடல்.]

மயலார் களிற்றண்ணல் * வாணன்றென் மாறையில் வாயத்தவா
கயலா மெனிற்கயல் கள்ளங்கொள் ளாகருந் தாழளகம் [கண்
புயலா மெனிற்புயல் போதுகொள் ளாவிப் புனையிழையார்
இயலா மனத்தையும் வேறென்ன பேரிட் டியம்புவதே.

## பயந்தோர்ப்பழிச்சல்.

[தலைவியின் பெற்றோரைத் தலைவன் வாழத்துதல்.
பயந்தோர் - பெற்றோர்.]

அணியுஞ் சுடர்விரி சங்குபங் கேருக மாடகமும்
மணியுந் தரமன்னி வாழிய ரோதஞ்சை வாணன்வெற்பிற்
றணியுந் தொழிலொழித் தின்பமுந் துன்பமுந் தம்பதமே
பணியும் பணியெனக் குப்பயந் தாளைப் பயந்தவரே.

## கண்படைபெறாதுகங்குனோதல்.

[தலைவன் தலைவிமேற்கொண்ட வேட்கையால
நித்திரையின்றி இரவில் வருந்தல்.]

வாமக் கலையல்குல் வாணுத லார்தஞ்சை வாணன்வெற்பின்
[illegible]மக் கலவி நலங்கவர் போது நமக்களித்த
[illegible]மக் கனலவர் கையகல் காலைக் கடும்பனிகூர்
[illegible] கடலகத் துந்தணி யாதினி யென்செய்துமே. (கள

## சா. இடந்தலைப்பாடு.

**கநுங. தெய்வந் தெளிதல் கூடல் விடுத்தலென்
றிவ்வோர் மூவகைத் திடந் தலைப்பாடே.**

இ - ள். இடந்தலைப்பாடு தெய்வந்தெளிதலும், கூடலும் விடுத்தலும் எனப்பட்ட இம்மூவகையுமுடையது எ - று.

* மயிலாமெனக்கென்ன என்னும் பாடாந்தரமுமுண்டு.

இடந்தலைப்பாடு - இடத்திலே எதிர்ப்படுதல்; தலைவன் முன்னாட்கூடினவிடத்திலே வந்து தலைவியை எதிர்ப்படுதல் என்றவாறு.

[இடந்தலைப்பாட்டின்விரி.]

**௧௩௪.** [1]தந்த தெய்வந் தருமெனச் சேறலும்
[2]முந்துறக் காண்டலு [3]முயங்கலும் [4]புகழ்தலும்
[5]உடன்புண ராயத் துய்த்தலு மெனவைந்
திடந்தலைப் பாட்டி னிலக்கண விரியே.

இ - ள். தந்ததெய்வந் தருமெனச்சேறல் முதலிய ஐந்தும் இடந்தலைப்பாட்டின் இலக்கணவிரியாகும் எ - று.

இவற்றுள்ளே தந்ததெய்வம் தருமெனச்சேறல் தெய்வந்தெளிதற்குரியது; காண்டல், முயங்கல், புகழ்தல் என்னும் மூன்றும் கூடற்குரியன; ஆயத்துய்த்தல் விடுத்தற்குரியது.

**உதாரணம்.**

**தந்ததெய்வந்தருமெனச்சேறல்.**

[முன்னர்க்கூட்டிவைத்த விதியே பின்னுங் கூட்டிவைக்குமென்றுபோதல்.]

மன்றும் பொதியினு மாமயில் சேர்தஞ்சை வாணன்வெற்ப
ன்றும் புயலிளஞ் சோலையின் வாயச்சுற வுக்குழைமைச்
சென்றுந்து சேல்விழி முன்னைமுன் னாட்டந்த தெய்வநமக்
கின்றா தருநெஞ்ச மேயெழு வாழியிங் கென்னுடனே.

**முந்துறக்காண்டல்.**

[தலைவன் தலைவியை முந்துபோலக் காணுதல்.]

மருவ[illegible] பண் மயிலூரு வாயநென்னல் வாணன்றஞ்சைத்
தருவாயத் தழைகொயது தண்புனங் காத்துத் தடங்குடைந்து
திருவாய மலர்ந்து சிலம்பெதிர் கூயின்றோர் தெய்வதம்போன
உருவா யொருதனி யேநின்ற தாலென் னுயிர்க்குயிரே.

**முயங்கல்.**

[தலைவன் தலைவியைக் கூடல்.]

மானா கரன்றஞ்சை வாணன் வரோதயன் மாறையன்னா
டானாவி நின்றலர் தாமரை யேயத் தடமலர்வாய
ஆனா தொழுகுசெந் தேனல்லி மேவு மரசவன்னம்
யானா மிடைப்பது வேயென்ன பான்மை யிருவர்க்குமே.

## புகழ்தல்.

[தலைவன் தலைவியைப் புகழ்ந்துரைத்தல்.]

அரும்பா மலவிட னத்தொடொவ் வாயில ராமலவிற்
கரும்பா மொழிவத னத்தொடொவ் வாயகளி யானைசெம்பொன்
சரும்பாரி வாணன் றமிழ்த்தஞ்சை யான்றரி யாரின்முன்செய்
பெரும்பாவ மல்லது நீநின்ற பேறல்லி பெற்றிலையே.

## ஆயத்துய்த்தல்.

[தோழியர் கூட்டத்தை அடைக என்று
தலைவியைத் தலைவன விடுத்தல்.]

மேவிக் கலைக்கடன் மென்புலன் மீனுண்டு மீண்டுவந்தென்
தூவிக் கமலத் தமரன்ன மேயின் னயில்விழிபோல்
வாவிக் சயலுக ளுந்தஞ்சை வாணன் வரையினுடன்
கூவிக் கயங்குடை நின்குயி லாயங் குறுகுகவே. (௪௯)

---

## ஏ. பாங்கற்கூட்டம்.

கஅ௫. சார்தல் கேட்டல் சாற்ற லெதிர்மறை
நேர்தல் கூடல் பாங்கிற் கூட்டலென்
றுங்கெழு வகைத்தே பாங்கற் கூட்டம்.

இ - ள். பாங்கற்கூட்டம் சார்தலும், கேட்டலும், சாற்ற லும், எதிர்மறையும், நேர்தலும், கூடலும், பாங்கிற்கூட்டலும் என்று எழுவகையினையுடையதாகும் எ - று.

பாங்கற்கூட்டமாவது தலைவன் பாங்கனாலே தலைவியைச் சென்றெய்துதல். பாங்கனைக் கூடுதலென்பாருமுளர். (௨௦)

[பாங்கற்கூட்டத்துவிரி.]

கஅ௬. தலைவன் பாங்கனைச் சார்தலும் பாங்கன்
தலைவனை யுற்றது வினாதலுந் தலைவன்
உற்ற துரைத்தலுங் கற்றறி பாங்கன்
கழறலுங் கிழவோன் கழற்றெதிர் மறுத்தலுங்
கிழவோற் பழித்தலுங் கிழவோன் வேட்கை
தாங்கற் கருமை சாற்றலும் பாங்கன்
தன்மனத் தழுங்கலுந் தலைவனோ டழுங்கலும்
எவ்விடத் தெவ்வியற் றென்றலு மவனவ்

திவ்விடத் திவ்வியற் றென்றலும் பாங்கன்
இறைவனைத் தேற்றலுங் குறிவழிச் சேறலும்
இறைவியைக் காண்டலுமிகழ்ந்ததற்கிரங்கலுந்
தலைவனை வியத்தலுந் தலைவியை வியத்தலுந்
தலைவன் றனக்குத் தலைவிநிலை கூறலுந்
தலைவன் சேறலுந் தலைவியைக் காண்டலுங்
கலவியின் மகிழ்தலும் புகழ்தலுந் தலைவியைப்
பாங்கியொடு வருகெனப் பகர்தலும் பாங்கிற்
கூட்டலு மென்றிங் கீட்டு நாலாறுங்
காட்டிய பாங்கற் கூட்டத்து விரியே.

இ - ள். தலைவன் பாங்கனைச் சார்தல் முதலிய இருபத்து நான்கும் மேலே காட்டப்பட்ட பாங்கற்கூட்டத்து விரியாகும் எ — று.

கழறல் - இடித்துரைத்தல். கழற்றெதிர்மறுத்தல் - கழறிய வார்த்தையை எதிர்மறுத்துரைத்தல். கழறு + எதிர் = கழற்றெதிர். கழறு - கழறல். அழுங்கல் - கவலல். எவ்விடத்து — எவ்விடமுடையது. எவ்வியற்று - எவ்வியல்புடையது. கலவி-புணர்ச்சி.

இவற்றுள்ளே பாங்கனைச்சார்தல் முதலிய மூன்றும் முறைபேசார்தல் முதலிய மூன்றற்குமுரியன. பாங்கன்கழறல் முதலிய நான்கும் எதிர்மறைக்குரியன. பாங்கன் தன்மனத்தழுங்கல் முதலிய பதினொன்றும நேர்தற்குரியன. தலைவன் சேறல் முதலிய நான்கும் கூடற்குரியன. பாங்கியொடு வருகெனப் பகர்தல்முதலிய இரண்டும் கூட்டற்குரியன.

### தலைவன் பாங்கனைச் சார்தல்.

[தலைவன் வாயில் விரும்பிப் பாங்கனைக் கிட்டுதல்.]

புனையாழி யங்கைப் புயல்வளர் பாற்கடற் பூங்கொடிவாழ்
மனையா கியதஞ்சை வாணனென் னூரென மறநிங்ஙனே
இனையா தெழுமதி நன்னெஞ்ச மேநமக் கின்னுயிரே
அனையா னருட்புன லாலனங் கானல மாற்றுதுமே.

### பாங்கன் றலைவனை யுற்றது வினுதல்.

[பாங்கன் தலைவனது வேறுபாடு கண்டு காரணம் வினவுதல்.]

வலம்புரி போற்கொடை வாணன்றென் மாறை மழைவளர்பூஞ்
சிலம்புறை சூர்வந்து தீண்டின போலொளி தேம்பியிவ்வா

றுலம்புனை தோளுநின் னுள்ளமும் வாடி யுருகிநின்று
புலம்புவ தென்னைகொல் லோசொல்ல வேண்டும் புரவலனே.

## தலைவனுற்றதுரைத்தல்.

[தலைவன் தனக்குற்ற வேறுபாட்டின் காரணத்தைப்
பாங்கனுக்குக் கூறுதல்.]

மலைமுழு துங்கொற்றம் வைக்கின்ற வாணன்றென் மாறைநண்பா
சிலைமுழு துஞ்சுற்று முற்றுமெய் யாநிற்பச் செந்நிறத்தே
கொலைமுழு துங்கற்ற கூரியவாளி குளிப்ப வின்றென்
கலைமுழு தும்பட்ட தாலொரு மான்முடிக் கண்ணியிலே.

## கற்றறிபாங்கன்கழறல்.

[பாங்கன் தலைவனைக் கண்டித்துக் கூறல்.]

தருகற் பகமன்ன சந்திரவாணன் றடஞ் சிலம்பின்
முருகக் கடவு ளனையவெற்பா முகிலும் பிறையுஞ்
செருகிக் கிளர்வரை வந்தவொர் பேதைக்குள் சிந்தையெல்லாம
உருகிக் கலங்கினை நீதரு மோமற் றுனக்கிதுவே.

## கிழவோன்கழற்றெதிர்மறுத்தல்.

[தலைவன் பாங்கன் கண்டித்ததை மறுத்துக் கூறுதல்.]

மாலாய மதம்பொழி மாதங்க வாணன்றென் மாறையன்னார்
சேலார் கருங்கண்ணுஞ் செங்கனி வாயுஞ் சிறியநுண்ணோ
நூலார் மருங்கும் பெருநதன பாரமு நும்மையன்றி
மேலா னவருங்கண் டாலுரை யாரிந்த வீரங்களே.

## கிழவோற்பழித்தல்.

[தலைவனைப் பாங்கன் பழித்துக்கூறல்.]

சூரார் சிலம்பிற் சிலம்பிமென னூல்கொண்டு சுற்றவெற்றிப்
போரார் களிறு புலம்பிநைந் தாங்கொரு பூவைகொங்கை
வாரா லணைப்ப வருந்தினை நீதஞ்சை வாணன்வெற்பா
ஓராழி சூழுல கத்தெவ ரேநின்னை யொப்பவரே.

## கிழவோன் வேட்கைதாங்கற் கருமைசாற்றல்.

[தலைவன் தன்காதல் தாங்கமுடியாதென்று கூறல்.]

பொறைகொண்ட தாமரைப் போதன்ன கொங்கையும் பொங்கரிசேர், கறைகொண்ட வாளன்ன கண்களுங் கொண்டொரு கன்னிதெய்வைத், திறைகொண்ட வாணன் செழுந்தஞ்சை சூழுஞ்

சிலம்பிலின்றென், நிறைகொண்ட வாறறி யாதிக ழாநிற்றி நீயு
நின்றே. 45

### பாங்கன்றன்மனத்தழுங்கல்.

[தலைவன்வேட்கைமிகுதிகேட்டுப்பாங்கன் தனனுள்ளேயிரங்கல்.]

சீதள வாரங் கமழ்தஞ்சை வாணன்றென் மாறையன்னாள்
காதள வாவெங் கடுவள வாவொளிர் காவியந்தண்
போதள வாம்விழி யென்னுமென் றைசப புறத்தளவாஞ்
சூதள வாமுலை யென்னுமென் றுமினிச் சொல்லுவதே. 46

### பாங்கன்தலைவனொடழுங்கல்.

[பாங்கன் பரிந்து தலைவனொடிரங்கல்.]

என்மே லறைவ தியானிங்கு நின்செவிக் கென்சொலெல்லாம்
வன்மே லடர்கொங்கை காரண மாத்தஞ்சை வாணன்வெற்பா
கன்மே லறைகின்ற மென்முளை போலுங் கடல்வெதும்பிற்
றன்மே லளாவவுண் டோதரை மேலொரு தண்புனலே. 47

### எவ்விடத்தெவ்வியற்றென்றல்.

[பாங்கன் தலைவனைநோக்கி நீ கண்ட உரு எவ்விடத்துள்ளது?
எவ்வியல்புடையது? என்று வினவுதல்.]

முகத்திற் பகழி யிரண்டுடை யார்க்கிட மூரிமுந்நீர்
அகத்திற் பிறந்த வரவிந்த மோவடை யார்தமக்கு
மகத்திற் சனியன்ன சந்திர வாணன்றென மாறைவெற்போ
நகத்திற் பகலனை யாயதன்மை யேது நுவலெனக்கே. 48

### அஃதிவ்விடத் திவ்வியற்றென்றல்.

[தலைவன் தான்கண்ட உரு இவ்விடத்துள்ளது
இவ்வியல்புடையது என்றுகூறுதல்.]

கனமே குழல்செங் கயலே விழிமொழி கார்க்குயிலே
தனமே முகையென் றணிநெஞ் சமேயிடை தன்பகைக்கு
வனமே யருளிய வாணன்றென் மாறை மணிவரைசூழ்
புனமே யிடமிங்ங னேயெனை வாட்டிய பூங்கொடிக்கே 49

### பாங்க னிறைவனைத் தேற்றல்.

[பாங்கன் குறை முடிப்பனென்று தலைவனைத் தெளிவித்தல்.]

மழைவளர் மாளிகை மாறை வரோதயன் வாணன்வெற்பின்
இழைவளர் வார்முலை யேரிளந் தோகையை யிக்கணம்போயுக்

கழைவளர் சாரலிற் கண்டுனை யான்வந்து காண்பளவுந்
தழைவளர் தாரண்ண லேதணி வாயகின் றகவின்மையே.

### குறிவழிச் சேறல்.

[தலைவன் கூறிய குறியிடத்துத் தலைவியைக்
காணுமாறு பாங்கன்போதல்.]

பாரித்த திண்மையெம் மண்ணலுண் ணீரைப் பருகிநின்று
பூரித்த செவ்விள நீர்களுந் தாங்கிய பூங்கொடிதான்
வாரித் தலம்புகழ் வாணன்றென் மாறை வரைப்புனஞ்சூழ்
வேரித் தடம்பொழில் வாயவிளை யாடுங்கொன் மேவினரே.

### இறைவியைக்காண்டல்.

[பாங்கன் தலைவியைக் காணல்.]

கானே யளகங் கரும்புய லேயியல் கார்மயிலே
மானே விழிமுக மாமதி யேதஞ்சை வாணன்வெற்பிற்
றேனேய் தொடையலச் சேயனை யான்சொன்ன சேயிழையாள
தானே யிவளிது வேயிட மாகிய தண்புனமே.

### பாங்கனிகழ்ந்ததற் கிரங்கல்.

[தலைவனைத்தான் பழித்தமைக்குப் பாங்கன் இரங்கல்]

கொலைகா லயிற்படை நேரியர் கோனகங் கோடவங்கைச்
சிலைகால் வளைத்துத் திருத்திய வாணன்றென் மாறைவெற்பின்
மூலைகால் கொளக்கண் டிளைத்தநுண் ணூலிடை முற்றிழைகண
வலைகால் பிணிப்பவந் தார்வருந் தாரல்லர் மாலுழந்தே.

### தலைவனை வியத்தல்.

[பாங்கன் தலைவனை வியந்துகூறல்.]

தலங்காவ லன்றஞ்சை வாணன்முந் நீர்பொருந் தண்பொருநத்
திலங்கார வல்வடக் கொங்கைவெற் பாலிணை நீலவுண்கட்
பொலங்காம வல்லி கடைந்தவப் போது புடைபெயர்ந்து
கலங்கா திருந்ததெவ் வாறெம் பிரான்றன் கலைக்கடலே.

### தலைவியைவியத்தல்.

[பாங்கன் தலைவியை வியந்து கூறல்.]

வெங்கோன் மழைபொழி வானவர் போர்வென்று மீனவர்தஞ்
செங்கோன் முறைமை செலுத்திய வாணன்றென் மாறைவெற்பின
கங்கோன் மெலிய நலிகின்ற காமவெங் நஞ்சினையிப்
பைங்கோன் மணிவளை யார்தணி யாரல்லர் பார்வைகொண்டே.

## தலைவன்றனக்குத் தலைவிநிலைகூறல்.

[குறியிடத்திலே தலைவி தனிநிற்கும் நிலையைப் பாங்கன் கண்டுவந்து தலைவற்குக் கூறல்.]

வளங்கனி மாறை வரோதயன் வாணன் மலயவெற்பா
உளங்கனி காதலுட னின்றதா னின்னு டலமெல்லாங்
களங்கனி போலக் கருகவெண் கோட்டுக் களிறுண்டதோர்
விளங்கனி போல்வறி தாநிறை வாங்கிய மென்கொடியே.

## தலைவன்சேறல்.

[தலைவன் குறியிடத்துப்போதல்.]

புறங்கூ ரிருட்கங்குல் போன்றக நண்பகல் போன்றபொங்க
திறங்கூர் விழியவர் நின்றனரோ நிழலைச் சுளித்து
மறங்கூர் களிற்றண்ணல் வாணன்றென் மாறையில் வாணுதலார்
அறங்கூர் மனத்தரு ளானின்ற தாமென தாருயிரே.

## தலைவியைக்காண்டல்.

[தலைவன் குறியிடத்திலே தலைவியைக் காணல்.]

பாகையுந் தேனையும் போன்மொழி யார்தமிழ்ப் பைந்தொடையும
வாகையுஞ் சூடிய வாணன்றென் மாறை வளமுமவன்
ஈகையும் போலு மெழிலியை நோக்கி யிரங்குபுள்ளுந்
தோகையும் போனின்ற வாதனி யேயிந்தச் சோலையிலே.

## கலவியின்மகிழ்தல்.

[தலைவன் புணர்ச்சிபெற்று மகிழ்தல்.]

யாரும்பர் தம்பத மென்போல வெய்தின ரிம்பரம்பொன்
வாருந் துறைவையை சூழ்தஞ்சை வாணன் மலயவெறபிற்
றேருந் தொறுமினி தாந்தமிழ் போன்றிவள் செங்கனிவாய
ஆருந் தொறுமினி தாயமிழ் தாமென தாருயிர்க்கே.

## புகழ்தல்.

[தலைவன் தலைவியைப் புகழ்ந்து கூறல்.]

தழல்கண்ட தன்ன கல்வெம்மை யாறத்தன் றண்ணளியால்
நிழல்கண்ட சந்திர வாணன்றென் மாறை நிழல்பொலியுங்
கழல்கண்ட தன்ன கதிர்முத்த மாலிகைக் காரிகைநின்
குழல்கண்ட பின்னல்ல வோவற னிருட் குளித்ததுவே.

ருடடை. **பாங்கியோடுவருகெனப்பகர்தல்.**

[தலைவன் இனிப் பாங்கி துணையாக வருவாயாக
வென்று தலைவிக்குச் சொல்லல்.]

என்கா தலிநின் றியம்புகின் றேனிங் கினிவருங்கால்
நின்கா தலியொடு நீவரல் வேண்டு நிலமடந்தை
தன்கா தலன்றஞ்சை வாணன்றென் மாறைத்தண் டாமரைவாழ்
பொன்கா தல்கொண்டு தொழுஞ்சிலம் பாரடிப் பூங்குயிலே.

**பாங்கிற்கூட்டல்.**

[தலைவன் தலைவியை ஆயத்துச் செலுத்தல். பாங்கு
பக்கம், என்றது பக்கத்து நிறபோரை.]

என்னொடு நின்ற விளங்கொடி யேசங்க மேந்துகுழாந்
தன்னொடு செல்லுஞ் சலஞ்சலம் போற்றஞ்சை வாணன்வெற்பிற
பொன்னொடு செல்லும் புகழ்மணி போனின் புடையகலா
மின்னொடு நுண்ணிடை யாருட னீசென்று மேவுகவே.

---

## அ. பாங்கிமதியுடம்பாடு.

**கஅஎ. முன்னுற வுணர்தல் குறையுற வுணர்தல்
இருவரு முள்வழி யவன்வர வுணர்தலென்
றொருமூன்று வகைத்தே பாங்கிமதி யுடம்பாடு.**

இ - ள. பாங்கி மதியுடம்பாடு முன்னுறவுணர்தலும், குறையுறவுணர்தலும், இருவருமுள்வழியவன்வரவுணர்தலும் என்று சொல்லபபடும் மூன்றுவகையுடையது எ - று.

முன்னுறவுணர்தலாவது முன்னரே தலைவியிடத்தே உற்றதாகிய வேறுபாட்டினுற் பாங்கி உணர்தல். முன்னுறவு + உணர்தல் = முன்னுறவுணர்தல். முன்னுறவு - முன்னருற்றது. குறையுறவுணர்தலாவது தலைமகன் குறையுறறு நிற்றலாற் பாங்கி உணர்தல். உறவு - உற்றது. இருவருமுள்வழியவன்வரவுணர்தலாவது தானுந்தலைவியுமாகிய இருவரும் ஓரிடத்திருந்துழித் தலைமகன் வருதலாற் பாங்கி உணர்தல். பாங்கி மதியுடம்பாடாவது பாங்கி அறிவொருப்படுதல். முன்னுற என்பதற்கு முன்னம் மிக எனவும் குறையுற என்பதற்கு குறையுற்றவழி எனவும் கூறுவாருமுளர். முன்னம்-குறிப்பு. ()

**[முன்னுறவுணர்தல்.]**

**கஅஅ. நாற்றமுந் தோற்றமு மொழுக்கமு முண்டியுஞ்
செய்வினை மறைப்புஞ் செலவும் பயில்வுமென்**

றிவ்வகை யேழினு மையமுற் றோர்தலும்
அவ்வகை தன்னுலையந் தீர்தலும்
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருட் சொல்லினு டலுமென
முன்னுற வுணர்தன் மூன்று கும்மே.

இ - ள். பாங்கி நாற்றம் முதலிய எழினாலும் ஐயுறவுற்றறித லும், அவ்வகையானே புணர்ச்சி உண்டென ஐயந்தீர்தலும், வழி பாட்டுநிலை தவறாதுநின்று மெய்ப்பொருளானும், பொய்ப்பொரு ளானும் பலவேறுவகைப்பட்ட கவர்பொருட்சொல்லினாலே மறை த்துச்சொல்லி ஆராய்தலும் என முன்னுறவுணர்தல் மூன்றுகூறு படும் எ - று.

வழிநிலை - பின்னிற்றல், குற்றேவல். கவர்பொருள் - ஒன்றே யாகாது பிளவுபட்டபொருள். நாடல் - ஆராய்தல்.

பாங்கி ஐயமுற்றோர்தற்குக் காரணமாய் நின்ற நாற்றம்முத லியவைகளை வேறுவேறாகக் கூறுதும்.

நாற்றமாவது கூந்தலும் நெற்றியும் முன்போலாது தலைம கன் புணர்ச்சியால் மான்மதம் முதலியனவும் பலபூக்களும் கல ந்து நாறுதல். தோற்றமாவது தந்நிலை திரிந்து வேறுபட்டுக் காட் டும் தோள், முலை, கண்முதலிய உறுப்புக்களின் பொலிவு. ஒழு க்கமாவது சிற்றில் புனைதல் சிறுசோறடுதல் முதலியவைகளை வெறுத்துப் பெண்டன்மைக்கியைய ஒழுகுதலுந் தெய்வந்தொ ழாமை முதலியனவுமாம். உண்டியாவது பண்டையிற் குறைந்த உண்டி. செயவினைமறைத்தலாவது தலைவனொடுபட்ட நினைவுஞ்செ யலுமாகிய அவைகளைப் பிறர்க்குப் புலப்படாமல் மறைத்தல். செலவாவது பண்டுபோல வேண்டியவாறு நடவாது சீர்பெற நட ந்து ஓரிடத்திற்சேறல். பயில்வாவது செவிலிமாட்டுத் துயிலாது வேறோரிடத்துப் பயிறல்.

செலவு ஆயத்தோடு கூடாது தனியே செல்லல் என்பாரும் பயில்வு ஓரிடத்திலே நிற்றலென்பாருமுளர்.

## உதாரணம்.

## நாற்றம் முதலியவற்றால் ஐயமுற்றோர்தல்.

பூங்கேச மன்றல் புனையா வெழில்வெண் புதுமதிகண்
டாங்கே யிசழ்த லருகிய வுண்டி யருஞ்செலவு

தீங்கே கரத்த லொருவயி னேயென் றுஞ் சென் றுநிற்றல்
தாங்கே வலமல்ல வந்ததென் னேவிந்தத் தையலுக்கே.

இலக்கணவி.

இச்செய்யுளிலே நாற்றம் முதலிய ஏழும் வந்தன. நாற்றம் முதலியவைகளைத் தனித்தனியுங் காட்டுவர்.

### தோற்றத்தானுராய்தல்.

வண்டலை யாயத் துடனயர்ந் தோவன்றி வண்டிமிர்பூந்
தண்டலை யாரத் தழைகள்கொய தோதஞ்சை வாணன்வெற்பிற்
புண்டலை வேலினுங் கண்சிவப் பாரப் பொலஞ்சுனைத்தேன்
கொண்டலை நீர்குடைந் தோவிவண் மேனி குழைந்ததுவே.

### அவ்வகைதன்னுலையந்தீர்தல்.

முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலைய ளொள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே.

### ஒழுக்கத்தாலையந்தீர்தல்.

திளைக்குந் திரைமே லுனக்குமுன் றேன் றலிற்செம்பொன்வெற்பை
வளைக்கும் பிரான்முடி வைகுத லாற்றஞ்சை வாணன்மண்மேல்
விளைக்கும் புகழ்போல் விளங்குத லாற்செக்கர் விண்பிறைகார்
தளைக்குங் குழற்றிரு வேதொழ வேதகுந் தன்மையதே.

### சுனைவியந்துரைத்தல்.

[தலைவியாடினேனென்ற சுனையின் செய்கையைப்
பாங்கி வியந்துரைத்தல்.]

பூட்டிய வார்சிலை வீரரை வென்றெப் பொருப்பினுஞ்சீர்
தீட்டிய வாணன்றென் மாறையன் னீரிதழ்ச் செம்மையுமை
ஊட்டிய வாளின் கருமையுந் தான்கொண் டுமக்கிங்ஙனே
சூட்டிய வாறுநன் றுன்முல்லை மாலை சுனைப்புனலே.

### சுனைநயப்புரைத்தல்.

[இவ்வேறுபாடுதருஞ்சுனையை யானுமாடிக்
காண்பேனெனப் பாங்கி கூறல்.]

மறலா யெதிர்ந்த மறமன்னர் வேழ மலையெறிவேற்
றிறலார் முருகன் செழுந்தஞ்சை வாணன்றென் மாறைவையை
அறலார் குழலாய் நுதற்குறு வேர்வு மழகுநின்போற்
பெறலா மெனிற்குடை வேனடி யேனும் பெருஞ்சுனையே.

MAHAMAHOPADHYAYA

## தகையணங்குறுத்தல்.

[தலைவியைத் தோழி தகையினாலே தெய்வம் என்று மிகுத்துக் கூறுதல். தகை - அழகு.]

*குவளை சிவத்துக் குமுதம் வெளுத்த குறையல்லவேல்*
*அவளை மறைத்துன்னைக் காட்டலு மாமலர்த் தேன்குதிக்கத்*
*தவளை குதிக்குந தடம்பொய்கை சூழ்தஞ்சை வாணன்வெற்பில்*
*இவளை வரக்கண்டு நீயணங் கேயின் னெழுந்தருளே.*

## நடுங்கநாட்டம்.

[தலைமகள் நடுங்கும்படி தோழி பொய்யாயினது கூறி ஆராய்தல். நாட்டம் - நாடுதல், ஆராய்தல்.]

*பால்போன் மொழிவஞ்சி யஞ்சிநின் றேனிந்தப் பார்முழுது*
*மால்போற் புரந்தவன் மாறை வரோதயன் வாணனவென்றி*
*வேல்போற் சிவந்து நெறிமுறை கோடிய வேந்தன்வெய்ய*
*கோல்போற் கொடியன வாங்கொலை யானையின் கோடுகண்டே.*

## இதுவுமது.

*பண்டிப் புனத்திற் பகலிடத் தேனலுட்*
*சண்டிக் களிற்றை யறிவன்மற—றொண்டிக்*
*கதிரன் பழையனூர்க் கார்நீலக் கண்ணாய*
*உதிர முடைத்திதன் கோடு.*

## [துறையுறவுணர்தல்.]

௧௩௯. **பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுத்தோன்**
**கண்ணியுந் தழையு மேந்தி நண்ணி**
**ஊர்பெயர் கெடுதியோ டொழிந்தவும் வினவுழி**
**யாரே யிவர்மனத் தெண்ணம் யாதெனத்**
**தேர்தலு மெண்ணந் தெளிதலு மெனவாங்**
**கோரிரண் டாகுந் துறையுற வுணர்தல்.**

இ - ள். இயற்கைப்புணர்ச்சியின்பின் தலைவியாற் பேணப்பட்ட வாயிலாகிய தோழியைப்பெற்று இரந்து குறையுறுதலைவலியுறுத்த தலைமகன் கண்ணியும் தழையும் ஏந்திச் சார்ந்துநின்று ஊரும் பெயரும் வேழம் முதலிய கெடுதியும் ஒழிந்தவும் வினவியவிடத்து, இவர்யாவர் எனவும் இவருடைய மனத்தெண்ணம் யாது எனவும் பாங்கி ஆராய்தலும், ஆராய்ந்து அவன்மனத்தெண்ணத்தினைத் தெளிதலும் என இரண்டாகும் துறையுறவுணர்தல் எ - று.

பெட்டல் - பேணுதல். வாயில் - சார்பு. கெடுதி - கேடடைந்தபொருள். ஒழிந்த - கூறுதொழிந்தனபிற; அவை வழி முதலியன.

## உதாரணம்.

### பெட்டவாயில் பெற்றிரவு வலியுறுத்தல்.

[தலைவன் தோழியை இரந்து குறையுறுதற்கெண்ணல்.]

பொருமணி வெண்டிரைப் பைங்கடல் வங்கம் பொருந்திமுன்பு
தருமணி பின்பெற் றணிபவர் போற்சென்று சார்ந்திரந்து
பருமணி நன்கலப் பாங்கியை நீங்கியப் பாவையைநாம்
மருமணி வண்டுறை தார்வாணன் மாறை மருவுதுமே.

### ஊர்வினுதல்.

[தலைவன் தோழியை ஊர் வினுதல்.]

புதியேன் மிகவிப் புனத்திற் கியான்றனிப் போந்தனனும்
பதியேது செல்லும் படிசொல் லுவீர்படி மேற்படிந்த
மதியேய சுதைமதில் சூழ்தஞ்சை வாணன்றென் மாறைவையை
நதியேய சுழிநிக ரும்பழி நீருந்தி நல்லவரே.

### பேர்வினுதல்.

[தலைவன் தோழியைப் பெயர் வினுவல்.]

கரைத்தாவி யுந்திய காவிரி வைகிய காலத்தினுந்
தரைத்தாரு வன்னசெந் தண்ணளி வாணன் றமிழ்த்தஞ்சைசூழ்
வரைத்தாழ் சிலம்பினும் வாழ்பதி யீதென்று வஞ்சியன்னீர்
உரைத்தா லிழிவதுண் டேற்பெய ரேனு முரைமின்களே.

### கெடுதிவினுதல்.

[தலைவன் தோழியைத் தான்கெடுத்த வேழத்தை வினுவல்.]

தண்பட்ட மேவும வயற்றஞ்சை வாணன் றமிழ்ச்சிலம்பிற்
பண்பட்ட தேமொழிப் பாவையன் னீர்பனை பட்டகையும்
மண்பட்ட கோடு மதம்பட்ட வாயும் வடிக்கணைதோய
புண்பட்ட மேனியு மாயவந்த தோவொரு போர்க்களிறே.

### ஒழிந்தனவினுதல்.

[ஊர் பேர் கெடுதி அல்லாதனவற்றுள் பேசாமைக் காரணம் வினுவல்.]

வனமார் குடிஞைப் பகைக்குர லாமென வாணன்றஞ்சைப்
புனமார் குளிரிப் புடைப்பொலி யாற்கிள்ளை போயினமீண்

டினமா மெனவந்திவ் வேனலெல் லாம்வவ்வு மென்பதற்கோ
கனமா நறுங்குழ லீர்மொழி யாதொழி காரணமே.

**யாரே இவர்மனத்தெண்ணம் யாதேனத்தேர்தல்.**

[தோழி தலைவனை இவர்யார் இவர் எண்ணம்
யாதென்று மனத்தினாராயதல்.]

தரையார வண்புகழ் தேக்கிய வாணன் றமிழ்த்தஞ்சைசூழ்
வரையாது நும்பதி யாதுநும் பேரென்பர் வார்துளிக்கார்
புரையானை யம்பொடு போநததுண் டோவென்பர் பூங்கொடியீர்
உரையாத தென்னென்ப ராலென்கொ லோவவ ருட்கொண்டதே.

[தலைவனுடைய எண்ணம் இதுவெனத் தோழி தெளிதல்.]

யாரே யிவரென் றறிகின் றிலேமெதிர்ந் தாரைவென்று
வாரேய் கழற்புனை வாணன்றென் மாறை வரையுறைவீர்
ஊரே தெனமுன் வினவிபபின் வேறொன் றுரைப்பதெல்லாம்
நேரே யிவர்பொருட் டாலென்றுதோன் றுமென்னெஞ்சினுக்கே ()

**[இருவருமுள்வழி அவன்வர வுணர்தல்.]**

**கசுo. கையுறை யேந்திவந் தவ்வகை வினவுழி**
**எதிர்மொழி கொடுத்தலு மிறைவனை நகுதலும்**
**மதியி னவரவர் மனக்கருத் துணர்வுமென்**
**றிருவரு முள்வழி யவன்வர வுணர்தல்**
**ஒருமூன் றுருகுந் தெரியுங் காலே.**

இ - ள். இருவருமுள்வழி யவன்வரவுணர்தல் தலைமகன் கையுறை ஏந்திநின்று முன்போல வினவுழித் தோழி அவ்வினவுக்கு எதிர்மொழி கொடுத்தலும், தலைமகனை நகுதலும், மதியினால் அவரவர் மனக்கருத் துணர்தலும் என மூன்றுரும் ஆராயுமிடத்து எ - று.

கையுறை - கையிலுறுத்துவது, கையிற் கொடுப்பது; ஒருவரைக் காணப்போவோர் அவரைத் தம்மாட்டு முகஞ்செயதல் காரணமாக அவர் கையிற் கொடுக்கும் பூத் தழை முதலியன. அவ்வகை வினுதல் - முற்சூத்திரத்துக் கூறியபடி ஊர்பெயர் கெடுதியும் ஒழிந்தவும் வினவுதல். எதிர்மொழி - மறுமொழி. நகுதல் நகையாடல். மதி - புத்தி.

## உதாரணம்.

### தலைவன் கையுறையேந்திவருதல்.

தண்டா மரைமலர்ப் பொன்னையும் பார்மங்கை தன்னையும்போல்
வண்டார் குழன்மட வார்மணந் தார்சென்று வாணன்றஞ்சை
நண்டா தணிபொங்கர் நீழலின் கீழந் நுடங்கிடையார்க்
கண்டா தரவைபெல் லாஞ்சொல்ல வேநல்ல காலமிதே.

வல்லா ரிளங்கொங்கை வஞ்சியன் னீர்தஞ்சை வாணனைக்கண்
டொல்லார் களத்தி னுடைந்தது போல வொருகலையோர்
வில்லார் கணைதைப்ப மெய்சோர்ந் தினம்விட்டு வெய்துயிர்த்துப்
புல்லார் வதுமின்றி யேவந்த தோறும் புனத்தயலே.

### எதிர்மொழிகொடுத்தல்.

[தோழி மறுமொழி கூறல்.]

வாக்குந் திறனு மதனையொப் பீர்தஞ்சை வாணன்மஞ்சு
தேக்குங் குடுமிச் சிறுமலைக் கேதிரி கோட்டிரலை
நோக்குஞ் சரமுங் குருதியுஞ் சோரக் கொடிச்சியரேங்
காக்கும் புனமருங் கேதனி யேவரக் கண்டிலமே.

### பாங்கி யிறைவனைநகுதல்.

[தோழி தலைவன்கூறினது உலகத்து நிகழ்வதன்
றெனறு நகையாடல்.]

மைவா ளிலங்குகண் மங்கைநல் லாயதஞ்சை வாணன்வெற்பில்
இவ்வாளி மொய்யம்பரின் றெய்தமெய்ம் மானிள மாந்தளிரின்
செவ்வா ளியுங்கொண்டு சேட்சென்ற தாலன்று சீதைகொண்கன்
கைவாளி யுங்கொண்டு போன பொய்ம்மானினுங் கள்ளத்ததே.

### மதியினவரவர் மனக்கருத்துணர்தல்.

[தோழி தன்புத்தியினால் தலைவன் தலைவியிருவருடைய
வேட்கையையறிதல்.]

புனங்காவ லன்றிவள் பூண்டது மாண்டகை போந்ததுமான்
இனங்காவ லின்கலை யெய்யவன் றலிக லாழிவிந்தை
தனங்காவ லன்றஞ்சை வாணனன் னாட்டிவர் தங்களிற்றும்
மனங்காவல்கொண்டதெல்லாங்கண்களேசொல்லும்வாய்திறந்தே.

[பாங்கிமதியுடன்பாட்டின்விரி.]

**கசக. ஈங்ஙனங் கூறிய விருநான்கு கிளவியும்
பாங்கி மதியுடம் பாட்டதன் விரியே.**

இ - ள். இவ்வாறே வகுத்துக் கூறப்பட்ட எட்டுக் கிளவிகளும் பாங்கிமதியுடம்பாட்டின விரியாகும் எ - று.

இருநான்குகிளவி என்றது "நாற்றமுந் தோற்றமும்" என்ற சூத்திரத்திலே ஐயமுற்றோர்தல் முதலாக மேலைச்சூத்திரத்திலே மதியினவரவர் மனக்கருத்துணர்தல் என்பதீறாகவுள்ள எட்டுக் கிளவிகளையும். (உரு)

---

## சு. பாங்கியிற்கூட்டம்.

**கசஉ. இரந்துபின் னிற்றல் சேட்படை மடற்கூற்று
மடல்விலக் குடன்படன் மடற்கூற் றொழிதல்
குறை நயப்பித்த னயத்தல் கூட்டல்
கூட லாயங் கூட்டல் வேட்டலென்
றீராறு வகைத்தே யிகுளையிற் கூட்டம்.**

இ - ள். இரந்து பின்னிற்றல் முதலிய பன்னிருவகையுடையதாகும் பாங்கியிற் கூட்டம் எ - று.

பாங்கியிற் கூட்டம் - பாங்கியினாற் கூடுங் கூட்டம். இரந்து பின்னிற்றல் - தலைவன் தோழியைக் குறையுற்று நிற்றல். சேட படை - சேட்படுத்தல், மறுத்தல், அகற்றல். மடற்கூற்று - தலைவன் மடலேறுவனென்று கூறுதல். மடல்விலக்கு - தோழிமடலேறுதலை விலக்குதல். உடன்படல் - தோழிகுறைமுடித்தற்கு நேர்தல். மடற்கூற்றொழிதல் - தலைமகன் மடலேறுந் திறத்தை நீங்குதல். குறைநயபபித்தல் - தோழிகுறைமுடித்தற்குத் தலைவியை விரும்புவித்தல். ஆயங்கூட்டல் - தலைவன் தலைவியை ஆயத்திற கூட்டல். (உசு)

[இரந்துபின்னிற்றலும், சேட்படையும்.]

**கசங. தலைவ னுட்கோள் சாற்றலும் பாங்கி
குலமுறை கிளத்தலுந் தலைவன் றலைவி
தன்னை யுயர்த்தலு மன்னுதற் பாங்கி
அறியாள் போன்று வினாதலு மிறையோன்
இறைவி தன்மை யியம்பலும் பாங்கி
தலைவி யருமை சாற்றலுந் தலைவன்**

இன்றி யமையாமை யியம்பலும் பாங்கி
நின்குறை நீயே சென்றுரை யென்றலும்
பாங்கியைத் தலைவன் பழித்தலும் பாங்கி
பேதைமை யூட்டலுங் காதலன் றலைவி
மூதறி வுடைமை மொழிதலும் பாங்கி
முன்னுறு புணர்ச்சி முறையுறக் கூறலுந்
தன்னிலை தலைவன் சாற்றலும் பாங்கி
உலகிய லுரைத்தலுந் தலைமகன் மறுத்தலும்
பாங்கி யஞ்சியச் சுறுத்தலு மாங்கவன்
கையுறை புகழ்தலுந் தையன் மறுத்தலும்
ஆற்று நெஞ்சினோ டவன்புலத் தலுமவள்
ஆற்றுவித் தகற்றலு மாகு நாலைந்தும்
இரந்துபின் னிற்றற்குஞ் சேட்படுத் தற்கும்
பொருந்துவ வென்மனார் தெரிந்திசி னோரே.

இ - ள். இங்கே சொல்லப்பட்ட தலைவனுட்கோள் சாற்றல் முதலிய இருபதும் இரந்து பின்னிற்றற்கும் சேட்படைக்கும பொருந்துவனவாகிய கிளவிகள் என்று சொல்லுவர் அறிந்தோரா எ - று.

இவற்றுள்ளே தலைவன் கூற்றுயினவெல்லாம் இரந்து பின னிற்றற்கும், பாங்கி கூற்றுயினவெல்லாம் சேட்படுத்தற்கும் உரி யன எனக்கொள்க.

ட்கோள் - கருத்து. இன்றியமையாமை - இல்லாது கூடா மை. பேதைமை - அறியாமை. மூதறிவு - பேரறிவு. அச்சுறுத்தல் - அஞ்சுவித்தல். புலத்தல் - வெறுத்தல்.

## உதாரணம்.

### தலைவன் உட்கோள்சாற்றல்.

[தலைவன் தன்மனக் கருத்தினைச் சொல்லுதல்.]

வாவுங் கலைவிந்தை காவலன் வாணன்றென் மாறையன்னீர்
ஏவுந் தொழிலெனக் கேதிய லாததிங் கேநுமக்கோர்
மேவுஞ்செயகுன்றமுஞ்சோலையுமாகப்பொன் வெற்பும்விண்ணோர்
காவுந தரவும்வல் லேனெனை யாளுங் கண்டக்கண்வைத்தே.

## பாங்கிகுலமுறைகிளத்தல்.

[பாங்கி தலைவனுக்குத் தலைவியின் குலமுறை கூறி
நின்கருத்து இயையாதென்றல்.]

நீவே றுரைக்கின்ற தென்குற மாதெங்க ணேரிழைபோர்
மாவேழ வன்படை வாணன்றென் மாறை மணியையன்றித்
தாவேது மில்லாத் தமனிய மீது தலம்புரக்குங்
கோவே யழுத்துவ ரோவறி யோருங் குருவிந்தமே.

## தலைவன் தலைவியையுயர்த்தல்.

[தலைவன் தலைவியை உயர்த்துக் கூறல்.]

மிக்கா ருளரல்லர் மெல்லியன் மாதரின் மேதினிமேற்
றக்கார் புகழ்தஞ்சை வாணர் பிரான்றமிழ் நாடனையாய்
மைக்கார் நிகர்குழல் வள்ளிசெவ வேளுக்கு வல்லையாம்
இக்கா ரணமுண ராதென கொலோநின் றியம்புவதே.

## பாங்கியறியாள்போன்று வினாதல்.

[என்னுடைய தோழியர் பலருளர்; அவருள் நின்னைவேட்கை
யுறுவித்தவள் யாரென்று தோழி அவனை அறி
யாள்போன்று தலைவனை வினவுதல்.]

பொன்னிய லூசலும் பொய்தலு மாடியெப் போதுநன்னீர்
மன்னிய நீலமு நித்தில முங்குற்று வாணன்றஞ்சை
இன்னிய லாரு மிளமரக் காவி னிடம்பிரியாக்
கன்னியர் தாம்பலர் யார்நின்னை வாட்டிய காரிகையே.

## இறையோனிறைவி தன்மையியம்பல்.

[தலைவன் தோழிக்குத் தலைமகளுடைய இலக்கணங் கூறுதல.]

தாளிணை மாந்தளி ரல்குல்பொற் றேரிடை சங்கைகொங்கை
கோளிணை கோலக் குரும்பைகை காந்தள் கொடிக்கரும்பார்
தோளிணை வேயமுகந் திங்கள்செவ் வாயிதழ் தொண்டையுண்கண்
வாளிணை வார்குழ லாய்வாணன் மாறையெம் மன்னுயிர்க்கே.

## பாங்கி தலைவியருமைசாற்றல்.

[எந்தலைவி நும்மால் விரும்பற்கெளியளல்லளென்று
தோழி தலைமகற்குரைத்தல்.]

புகழார் வரையெம் புரவலன் காதற் புதல்வியைநீர்
இகழா வெளியளென் றெண்ணப் பெறீரெமக் கென்றும்வண்மை

திகழா பரணன் செழுந்தஞ்சை வாணன் சிலம்பினுள்ளீர்
அகழார் கலியுல கிற்புல ஞன வணங்கவளே.

## தலைவனின்றியமையாமையியம்பல்.

[தலைவியையின்றித் தன்னுயிர் நிலையாதென்று
தலைவன் தோழிக்குரைத்தல்.]

வனைந்தா லனைகொங்கை மாதுரு வாயத்தஞ்சை வாணனவெற்பிற்
புனைந்தா லனைய புனத்தயல் வாயவண்டு போதகத்தே
நனைந்தா லனையவென் னல்வினை தான்வந்து நண்ணிற்றென்று
நினைந்தா லணங்கனை யாய்தமி யேனுயிர் நிற்கின்றதே.

## பாங்கி நின்குறை நீயே சென்றுரையென்றல்.

[தலைவியிடத்து நீயேசென்று நின்குறைகூறென்று
தலைவனுக்குத் தோழி சொல்லல்.]

மருப்பா வியதொங்கல் வாணன்றென் மாறை வனசமலர்த்
திருப்பாவை யன்னவென் சேயிழை யாட்குன் றிருவுளத்து
விருப்பா கியகுறை யுள்ளதெல் லாஞ்சொல்லி வேண்டுகநீ
பொருப்பா மொழியப் பெருரெம் மனோரிவை போல்வனவே.

## பாங்கியைத் தலைவன் பழித்தல்.

[தோழி மறுத்ததற்காகத் தலைவனவளைப் பழித்துரைத்தல்.]

வில்லார் நுதல்வெய்ய வேலார் விழிக்கென் மெலிவுசொல்ல
[illegible]ரிலைசொல்ல வல்லையென் றியான்றஞ்சைவாணன்றெவ்வின்
ஒல்லா திதுநுமக் கென்றுண ரேனின் றுணங்கியிந்நாள்
எல்லா மிரந்தது நின்குறை யேயல்ல வென்குறையே.

## பாங்கி பேதைமை யூட்டல்.

[பாங்கி தலைவிமாட்டு அறியாமை ஏற்றிக் கூறுதல்.]

தேனுஞ் சுரும்புஞ் செறிதொங்கல் வாணன்றென் மாறைவெற்பா
மானுங் கலையும் வடிக்கணை யாலெய்து மன்னுயிரும்
ஊனுங் கவர்கின்ற தன்னையர் போலயி லொத்தகண்ணு
டானும் பிறருள்ள நோயறி யாத தகைமையளே.

நறுந்தண் டகரம் வகுள மிவற்றை
வெறும்புதல்போல் வேண்டாது வெட்டி—எறிந்துழுது
செந்தினை வித்துவார் தங்கை பிறர்நோய்க்கு
நொந்தினைய வல்லளோ நோக்கு. திணைமாலை.

### தலைவன் தலைவி மூதறிவுடைமைமொழிதல்.

[தலைவன் முதிர்ந்த அறிவினையுடையவள் தலைவி என்று கூறுதல்.]

வருநீர் வனமுலை மங்கைநல் லாய்செங்கை வாணன்வையை
தருநீர் மலிவயற் றஞ்சையன் னாளன்று தஞ்சமிலேன்
அருநீர் நவையறக் கண்மலர் நீர்தெளித் தாற்றினளால்
இருநீர் நிலங்கொள்ளு மோவறி யாளென்னு மிவ்வுரையே.

### பாங்கிமுன்னுறுபுணர்ச்சிமுறையுறக்கூறல்.

[தோழி தலைவனுக்கு முன்னர்க் கூடியவாறு இன்னுஞ் சென்று கூடுக என்று சொல்லல்.]

செறிவளர் காவி வயற்றஞ்சை வாணன் சிறுமலைமேல்
நெறிவளர் வார்குழ னேரிழை யாளன்ன நீர்மையளேற்
குறிவளர் காவின்முன் கூடிய வாறின்னுங் கூடுகநீ
கறிவளர் சாரல்வெற் பாபிற ராலென்ன காரியமே.

### தன்னிலை தலைவன்சாற்றல்.

[தலைவன் தன்வருத்தமிகுதி கூறல்.]

உரைத்தென் பிறவந்தப் பைந்தொடி யாக முறுவிடில்வெண்
டிரைத்தென் கடன்முத்துந் தன்மலைச் சந்துஞ் செழும்பனிநீர்
அரைத்தென் புருகமெய் யப்பினும் வெப்ப மறுதினிநின்
வரைத்தென் கருமமெல் லாந்தஞ்சை வாணன் வரையணங்கே.

### பாங்கியுலகியலுரைத்தல்.

[தோழி தலைவனுக்குத் தலைமகளை உலகமுறைப்படி வரைந்துகொள்ளென்று கூறல்.]

விரையக நாண்மலர் மெல்லியன் மாதை விரும்பினையேல்
வரையக நாட வரைந்துகொ ணீதஞ்சை வாணன்முந்நீர்த்
தரையக நான்மறைக் கேள்வியர் வேள்வியர் சான்றவர்தம்
உரையக நாடிமுன் னிட்டன வாகு முலகியலே.

### தலைமகன் மறுத்தல்.

[தலைவன் தோழி குறைநயந்தபின் வரைந்துகொள்வேனென்றல்.]

வெண்டா மரைமங்கை காதல னாகிய வேதியன்பால்
உண்டா கியதொல் லுலகிய லாலுங்க ளாரணங்கை
வண்டார் குழலி வரைந்துகொள் வேன்றஞ்சை வாணன்வண்மை
கண்டா ரருளுள்ள நீயெனை தாருயிர் காத்தபின்னே.

## பாங்கியஞ்சியச்சுறுத்தல்.

[தோழி தமரை அஞ்சி அவ்விடம் விட்டகலுமாறு
தலைவனை அச்சுறுத்திக் கூறல்.]

மல்லார் புயன்றஞ்சை வாணன்வெற் பாவெமர் வந்தினியிக்
கல்லார் வியன்புனங் காவல் விடாரவர் காணின்மிகப்
பொல்லா திருண்டது போதுமற் றியாங்களும் போதுமிங்கு
நில்லா தெழுந்தரு ணீயுமிப் போது நெடுந்தகையே.

## தலைமகன் கையுறைபுகழ்தல்.

[தலைவன் இத்தழை நல்லவென்று தான் கொடுவந்த
கையுறையைப் பாராட்டுதல்.]

சிமையார் மலயத் தமிழ்த்தஞ்சை வாணன் சிறுமலைமேல்
அமையா கியதடந் தோளன்ன மேயணி யத்தகுமால்
உமையா ளிறைவன் பயில்கயி லாயத்து மும்பர்தங்கும்
இமையா சலத்துமல் லாலில்லை * யாணிக ரித்தழைக்கே.

## பாங்கிகையுறைமறுத்தல்.

[தோழி தலைவன் கொடுவந்த கையுறையை
ஏற்காது மறுத்தல்.]

மல்குற்ற தண்புனல் சூழ்தஞ்சை வாணன் மலயவெற்பா
நல்குற் றவையிந்த நாட்டுள வன்மையி னன்னுதலாள்
அல்குற் றடத்தெமர் கண்டா லயிர்ப்ப ரதுவுமன்றிப்
பல்குற றழும்வரு மால்யாங்கள் வாங்கேம் பசுந்தழையே.

## தலைமகனுற்றதுபுலத்தல்.

[தலைவன் தோழி கையுறைமறுத்தமைக் காற்றாது புலந்துகூறல்.]

உழையும்வெங் காளமும் போலுங்கண் ணுளொரு காலமுள்ளங்
குழையுமெம் பாலென்று கொண்டநெஞ் சேகலிக்கோடைமண்மே
மழையுமந் தாரமும் வந்தன வாணன்றென் மாறையின்மாந் [ன்
தழையுநம் போலிங்ங னேகவின் வாடத் தவஞ்செய்ததே.

## பாங்கியாற்றுவித்தகற்றல்.

[தோழி தலைவனை ஆற்றுவித்தனுப்புதல்.]

சோலையில் வாழிளந் தோகையன் னாளைத் தொழுதிரந்திம்
மாலையில் வாழி வரங்கொள்வல் யான்றஞ்சை வாணன்வெற்பா

* எல்லாமில்லை என்றும் பாடமுண்டு.

வேலையில் வார்துகி ரன்னவெப் யோன்வெயில் வெற்பின்மல்குங்
காலையில் வாபின்னை யென்கைய தாகுநின் கையுறையே. (உஎ)

[மடற்கூற்றும் மடல்விலக்கும்.]

கசச. இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன்
மடலே பொருளென மதித்தலும் பாங்கிக்
குலகின் மேல்வைத் துரைத்தலு மதனைத்
தன்மேல் வைத்துச் சாற்றலும் பாங்கி
தலைமக ளவயவத் தருமை சாற்றலுந்
தலைமகன் றன்னைத் தானே புகழ்தலும்
அலர்முலைப் பாங்கி யருளியல் கிளத்தலுங்
கொண்டுநிலை கூறலு மென்றிவை யேழும்
மடற் கூற்றிற்கு மடல்விலக் கிற்குங்
கடவ வென்மனார் கற்றறிந் தோரே.

இ - ள். இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன் மடலே பொருளென மதித்தல் முதலிய ஏழும் மடற்கூற்றிற்கும் மடல் விலக்கிற்குமுரிய கிளவிகள் என்று கற்றறிந்தோர் சொல்லுவா ஏ - று.

இவற்றுள்ளே தலைமகன் கூற்றாயினவெல்லாம் மடற்கூற்றிற் கும் பாங்கிகூற்றாயினவெல்லாம் மடல்விலக்கிற்கும் உரியன எனக்கொள்க.

உதாரணம்.

தலைமகன் மடலேபொருளென மதித்தல்.

[பொருள் - காரியம்.]

திருந்தார் தொழுங்கழற் சேயன்ன வாணன்றென் மாறைவெற்பில்
அருந்தா வமுதன்ன வஞ்சொனல் லாரழ கார்குழைதோய
பெருந்தாரை வேல்விழி தந்தவெங் காமப் பிணிதனக்கு
மருந்தா வதுநெஞ் சமேயில்லை வேறு மடலன்றியே.

மடலேறலை யுலகின்மேல்வைத் துரைத்தல்.

விரையூர் குழலியர் தந்தசிந் தாகுல வெள்ளநிரைக்
கரையூர் பொழுதிளங் காளையர் தாங்கிழி கைப்பிடித்துத்
தரையூர் தொறும்பெண்ணை மாமட லூர்வர் தவிர்ந்துபின்னும்
வரையூர்வர் தஞ்சையர் கோன்வாணன் மாறையில் வாணுதலே.

## தலைமகன் மடலேறலைத் தன்மேல்வைத்துரைத்தல்.

வன்பணி போனிலந் தாங்கிய வாணன்றென் மாறைவெற்பின்
மின்பணி பூண்முலை மெல்லிய லீர்குறை வேண்டியுங்கண்
முன்பணி வேனின்று நாளைவெண் பூளை முகிழெருக்கோ
டென்பணி வேன்மடன் மேல்வரு வேனிவை யென்பணியே.

[தோழி தலைவியின் அவயவங்களை எழுதலருமை கூறல்.]

தொடையே யெருக்கென்பு நீயணிந் தாலென்ன சூல்வளையூர்
மடையேய வயற்றஞ்சை வாணன்வெற பாமல ரோன்வகுத்த
படையேய நயனம் படைத்தபொற் பாவை படியெடுக்க
இடையே தெனதெரி யாதுரை யாணி யிடவரிதே.

## தலைமகன்றன்னைப்புகழ்தல்.

[தலைமகன் தனதெழுதல்வன்மையைப் புகழ்தல்.]

நறையல ராவிரைப போதிசை யாதிசை நான்முகத்து
மறையல ராவந்த மான்மகன் யான்றஞ்சை வாணன்வையைத்
துறையல ராவியங் காவியங் கண்ணி துணிந்துசொல்லுங்
குறையல ரார்குழ லாட்கினித் தீரக் குறையில்லையே.

## பாங்கியருளியல்கிளத்தல்.

[தோழி அருளுடையாருக்கு மடலேறுதல் தகாதென்று கூறல்.]

செயலார் குடம்பையிற் செந்தலை யன்றிற் சினையுளபைங்
கயலோர் வனவெண் குருகின்வண் பார்ப்புள கைக்கடங்கா
மயலார் களிற்றண்ணல் வாணன்றென் மாறைவை யைத்துறைவா
இயலா தருளுடை யார்க்கென்று மாமட லேறுவதே.

## கொண்டுநிலைகூறல்.

[கொண்டுநிலைகூறலாவது இறந்துபடுமாறு நிற்குந் தலைவனைத்
தாங்கிக்கொண்டு நிற்றற்குரிய சொற்கூறுதல். கொண்டு
நிலை - தாங்கிக்கொண்டு நிற்றல்.]

வெண்டோ டணிமுகப் பைங்குரும்பைக்கொங்கைவெய்யவுண்கட்
கண்டோர் விரும்புங் கரும்பனை யாரைக் கடற்றுறைவா
கொண்டோர் குறைமுடி கொம்பனை யார்நின் குறைமறுத்தால்
வண்டோலிடுந்தொங்கலான்வாணன்மாறைவளநகர்க்கே. (உஅ)

[குறைநேர்தலும் மடற்கூற்றொழிதலும்.]

கசரு. தலைவி யிளமைத் தன்மை பாங்கி
தலைவற் குணர்த்தலுந் தலைவன் றலைவி
வருத்திய வண்ண முரைத்தலும் பாங்கி
செவ்வி யருமை செப்பலுந் தலைவன்
செவ்வி யெளிமை செப்பலும் பாங்கி
என்னை மறைப்பி னெளிதென நகுதலும்
அந்நகை பொறாஅ தவன்புலம் பலுமவள்
தேற்றலுங் கையுறை யேற்றலுங் கிழவோன்
ஆற்றலு மென்னு மவ்வொன் பானுங்
குறைநேர் தற்குமடற் கூற்றொழி தற்கும்
முறைமையி னுரிய முன்னுங் காலே.

இ - ள். இங்கே சொல்லப்பட்ட தலைவியிளமைத்தன்மை பாங்கி தலைவற்குணர்த்தல் முதலிய ஒன்பதும் உடன்படற்கும் மடற்கூற்றொழிதற்கும் முறையானே உரியனவாகும் ஆராயுமி ட - று.

இவற்றுள்ளே பாங்கி கூற்றுயினவெல்லாம் குறைநேர்தற் கும், தலைவன் கூற்றுயினவெல்லாம் மடற்கூற்றொழிதற்கும் உரிய எனக்கொள்க. குறைநேர்தல்-உடன்படல். முன்னுதல்-ஆராய்தல்.

உதாரணம்.

பாங்கி தலைவியிளமை யுணர்த்தல்.

களவரும் பாகரு நீலங்கள் காமக் கடவுளுமால்
கொளவரும் பாவைக் குரும்பைக் குலஞ்செங் குமுதத்துவெண்
டளவரும் பாநண் பனேதஞ்சை வாணன் றமிழ்வையைநாட்
டிளவரும் பாமிவண் மாட்டென் கொலோநின் றிரப்பதுவே.

தலைவன் தலைவிவருத்திய வண்ணமுரைத்தல்.

சிலைபயில் வாணுதல் மின்னே பிறந்தவச் செவ்வியிலே
கொலைபயி லாகக் குருளையைப் போற்குறி யோனிருந்த
மலைபயில் வார்தமிழ் வாணன்றென் மாறை மயிலனையாள்
அலைபயி லாவ்விழி யாலென தாவி யணங்கினளே.

## பாங்கி செவ்வியருமை செப்பல்.

[தலைவியை என்றுலெய்தல் எளிதன்றெனத் தோழி கூறல்
செவ்வி - பதம், காலம்.]

ஏடா ரலங்க லிலங்கிலை வேல்வெற்ப வேழுலகும்
வாடாமல் வந்தருள் வாணன்றென் மாறையில் வல்லியன்னாள்
சூடாள் குவளையு முல்லையுஞ் சூட்டுஞ் சுனையும்பர்தும்
ஆடா டனக்கென் கொலோவடி யேன்சென் றறிவிப்பதே.

## தலைவன் செவ்வியெளிமை செப்பல்.

[தலைவன் நின்றுலெய்தல் எளிதென்று கூறல்.]

தேன்வந்த வாயிதழ்ச் சேயிழை யாயிளஞ் செவ்விநவ்வி
மான்வந்த வாள்விழி வஞ்சிக்கு நீதஞ்சை வாணன்வெற்பில்
யான்வந்த வாசென் றியம்புதி யேலவர் யாவரென்னாள்
தான்வந்த வாவுட னேநின்னை யாரத் தழீஇக்கொள்ளுமே.

## பாங்கி யென்னைமறைப்பி னெளிதென நகுதல்.

[என்னை மறைப்பின் நீர் எண்ணிய காரியம் எளிதின் முடியு
மெனத் தோழி தலைவனை நகையாடிக்கூறல்.]

மண்ணும் பயில்வித்து மொன்றினுஞ் சந்திர வாணன்வெற்பா
ரண்ணும் புனலின்றி யங்குரி யாதுங்க ணல்வினையாற்
சண்ணுங் கருத்துங் கலந்தன வாயினுங் கண்ணினும்முள்
எண்ணுங் குறையென்னை நீர்மறைத் தாலிங் கியல்வதன்றே.

## அந்நகைபொறு தவன்புலம்பல்.

வெவ்வே லெறிந்த விழுப்புண்ணின் மீட்டும் வெதுப்பியதோர்
செவ்வே லுழைப்பவர் சீலமன் றேதிரு வேமருவார்
வைவே லமர்வென்ற வாணன்றென் மாறை மயில்பொருட்டால்
னைவேனை யஞ்சலென் றுதின்ன வாறு நகைக்கின்றதே.

## பாங்கி தலைவனைத் தேற்றல்.

நன்கண் ணனையதன் பாங்கிய ருள்ளுந் தனக்குயிராம்
என்கண் ணருள்பெரி தெம்பெரு மாட்டிக் கிகன்மலைந்தார்
வன்கண் ணமர்வென்ற வாணன்றென் மாறையில் வந்தவளாற்
புன்கண் ணடையலை நீயினி வாடல் புரவலனே.

## பாங்கி கையுறை யேற்றல்.

ஒலிதெண் கடல்புடை சூழுல கேழினு மூழ்வினைதான்
வலிதென் பதனை வயக்கிய தாற்றஞ்சை வாணன்வெற்பா

கலிதெங்கு மாவுங் கமுகும் பலாவுங் கதலிகளும்
பொலிதென் பொதியிலின் மேற்சந்த னூடவிப் பூந்தழையே.

தலைமக னூற்றல்.

மைப்போ தணிதொங்கல் வாணனென் றூரென வல்வினையேற்
கப்போ தடைந்த வருந்துயர் நீங்கி யரும்பியபொற்
செப்போ திளமுலை யாணகை வாண்முகத் திங்களைக்கண்
டிப்போ திளகிய தாலிந்து காந்தங்கொ லென்னெஞ்சமே. (உசு)

[துறைநயப்பித்தலும் மறுத்தலும்.]

கசசு. இறைவன் றனக்குக் குறைநேர் பாங்கி
இறைவிக் கவன்குறை யுணர்த்தலு மிறைவி
அறியாள் போன்று குறியாள் கூறலும்
பாங்கி யிறையோற் கண்டமை பகர்தலும்
பாங்கியைத் தலைவி மறைத்தலும் பாங்கி
என்னை மறைத்த தென்னெனத் தழாஅலுங்
கையுறை புகழ்வுமென் றிவ்விரு மூன்றும்
மெலிதாகச் சொல்லிக் குறைநயப் பித்தற்கும்
வலிதாகச் சொல்லி மறுத்தற்கு முரிய.

இ - ள். இங்கே சொல்லப்பட்ட இறைவன்றனக்குக் குறைநேர்பாங்கி இறைவிக்கவன் குறையுணர்த்தல் முதலிய ஆறும பாங்கி மெலிதாகச் சொல்லிக் குறைநயபபித்தற்கும் தலைவி வலிதாகச் சொல்லி மறுத்தற்குமுரியனவாம் எ - று.

இவற்றுள்ளே பாங்கி கூற்றாயினவெல்லாம் குறைநயப்பித்தற்கும் தலைவி கூற்றாயினவெல்லாம் மறுத்தற்குமுரியன எனக் கொள்க.

இறைவிக்கவன்குறையுணர்த்தல்.

[தோழி தலைவிக்குத் தலைவன் குறையைக் கூறுதல்.]

இருவர்கண் டால்வரு மேதமென் றெண்ணி யெனக்கெதிரே
வருவர்வந் தாலுந்தம் வாய்திற வார்தஞ்சை வாணன்வெற்பில்
ஒருவர்நஞ் சார லுழையக லார்தழை யுள்ளதெல்லாந்
தருவர்வம் பார்முலை யாயென் கொலோசெயத் தக்கதுவே.

## இறைவியறியாள்போன்று தறியாள்கூறல்.

[தலைவி தோழிகூறிய தலைமகனை அறியாள்போல அவன் குறையை ஏற்றுக்கொள்ளாது வேறொன்று கூறல்.]

கலைதொடக் கீண்ட கருவியந் தேன்பல கால்கொடுமா
மலைதொடுத் தூர்ந்து வருகின்ற தாற்றஞ்சை வாணன்வென்றிச்
சிலைதொடுத் தாங்கெழில் சேர்றுத லாய்பயில் செம்பழுக்காய்க்
குலைதொடுத் தோங்குபைங் கேழ்ப்பூக நாகக் குழாங்கவர்ந்தே.

## பாங்கிதலைமகனைக் கண்டமை பகர்தல்.

திவாகர னேயன்ன பேரொளி வாணன்றென் மாறைநன்னாட்
டுவாமதி போலு மொளிர்முகத் தாயென் னுளிப்பதுன்மேல்
அவாவின னாகியொர் மானை வினாவிவந் தானையின்றிக்
கவானுயர் சோலையின் வாயவண் டாடுமைழக் கண்டனமே.

## பாங்கியைத் தலைவி மறைத்தல்.

செவ்வண்ண வேல்விழி யாயதஞ்சைவாணன்றென்மாறைநன்னாட்
டிவ்வண்ண நீசொல்வ தேற்பதன் றுனின் னிடையெனத்தம்
மெடவண்ணம் வாடி வெறிதே வருந்தி விருநதினராய்க்
கைவண்ண வார்தழை கொண்டுசென் றூர்தமைக் கண்டுகண்டே.

## பாங்கியென்னை மறைப்பதேன்னெனத் தழாஅல்.

[தழாஅல் - தழுவிக்கூறல்.]

பரக்கின்ற செவ்விதழ்ப் பங்கயப் பாதம் பணிந்துநின்னை
இரக்கின்ற தொன்றையு மெண்ணலை யாலெழு பார்முழுதும்
புரக்கின்ற கோன்றஞ்சை வாணன் பொதியிலிற்பொய்த்தென்னைநீ
கரக்கின்ற தென்னைகொ லென்னுயி ராகிய காரிகையே.

## பாங்கி கையுறை புகழ்தல்.

சூடத் தகுவன வல்லவெல் லாம்படி சொல்லினுந்தாம்
வாடத் தகுவன வல்லநல் லாயதஞ்சை வாணன்வெற்பர்
தேடத் தகுவன வல்லதல் லாத சிலம்பினுள்ளார்
நாடத் தகுவன வல்லகல் லார நறுந்தழையே. (௩௦)

## [துறைநயப்பித்தலும் நயத்தலும்.]

**கசஎ. தோழி கிழவோன் றுயர்நிலை கிளத்தலும்**
**மறுத்தற் கருமை மாட்டலுந் தலைவன்**
**குறிப்பு வேறாக நெறிப்படக் கூறலுந்**

தலைவி முனிதலுந் தலைவி பாங்கி
தன்னை முனிதலுந் தன்கைக் கையுறை
ஏற்றலு மெனமுறை சாற்றிய வாறும்
வலிதாகச் சொல்லிக் குறைநயப் பித்தற்கும்
மெலிதாகச் சொல்லி மேவற்கு முரிய.

இ - ள். இங்கே சொல்லப்பட்ட தோழி கிழவோன் துயர் நிலைகிளத்தல் முதலிய ஆறும் வலிதாகச் சொல்லிக் குறைநயப் பித்தற்கும், மெலிதாகச் சொல்லி மேவுதற்கும் உரியனவாகும் எ - று.

இவற்றுட் பாங்கி கூற்றுயினவெல்லாம் குறைநயப்பித்தற கும் தலைவிகூற்றுயினவெல்லாம் குறைநயத்தற்கும் உரியன எனக கொள்க. நயத்தல், மேவல், விரும்பல் என்பன ஒருபொருட் கிளவிகள்.

உதாரணம்.

தோழி கிழவோன் துயர்நிலைகிளத்தல்.

வனையுங் குழல்வஞ்சி வாணன்றென் மாறை வரைக்களிறு
தினையுந் தழையும் பிடியொடு மேய்ந்து தெளிநதவின்னீர்
சுனையுண்ட சோக நிழற்சோக நீங்கித் துயில்வதுகண்
டெனையுங் கடைக்கணி யாவினை யாநிற்ப ரேதிலரே.

தோழி தலைவனை மறுத்தற்கருமைமாட்டல்.

[மறுத்தற்கருமைமாட்டல் - மறுத்தற்கருமையைப
பொருத்திக்கூறல்.]

கையுந் தழையுமுன் காண்டொறுங் காண்டொறுங் கட்டுரைத்த
பொய்யுந தொலைந்தன பூந்தழை போலரி போர்த்துநஞ்சு
மையுங் கலந்துண்ட வாள்விழி யாயதஞ்சை வாணன்வெற்பா
மெய்யுந் துவண்டதென் னுன்முடி யாது வெளிநிற்கவே.

தலைவன்குறிப்பு வேறாக நெறிப்படக்கூறல்.

[தோழி தலைவனுடைய குறிப்பு வேருகவிருந்ததென்று கூறல்.]

விடையான் மிசைவரு மேருவில் லானொடு மேழிவென்றிப்
படையா னொடும்வெம் பகைகொள் வதோபகல்போலுமெய்ம்மை
யுடையா னுயர்தஞ்சை வாணனுன் னூரென வொல்கியநுண்
ணிடையாய் பிறிது கொலோவறி யேன்வெற்ப ரெண்ணுவதே.

### தோழி தலைவியைமுனிதல்.

*தூற்ரு தலரை மறைப்பவர்க் கேகுறை சொல்லுகுற்றம்
ஏற்ரு தொழியென யெம்பெரு மாட்டிசென் றேற்றவர்க்கு
மாற்ரு தருள்செங்கை வாணன்றென் மாறையில் வந்துநெஞ்சம்
போற்ருது நின்றய லேன்சொன்ன தீங்கு பொறுத்தருளே.*

### தலைவிபாங்கியைமுனிதல்.

*மற்றே தவர்நினை வார்தஞ்சை வாணன் வரையின்முன்னுட்
பொற்றேரின் வந்து புணர்ந்துசென் ருர்தம் பொருட்டுநம்மைக்
குற்றேவன் மங்கை குறையிரந் தாளெனுங் குற்றமிந்நாள்
எற்றே தவறுநம் பாலில்லை யாகவு மெய்தியதே.*

### தலைவிகையுறையேற்றல்.

*ஆற்றுந் தலைவ ரருந்துய ராற்றினு மாற்றலனுண்
மாறறும் புனையின் மயிலனை யாய்தஞ்சை வாணன்றெவ்விற்
போறறுங் கொடியினை யேன்புனை யூரவிடிற் போநதலரே
தூறறுந் தழையென்றி தொன்றெங்க னேவந்து தோன்றியதே. ()*

[கூட்டல், கூடல், ஆயங்கூட்டல், வேட்டல்.]

கசஅ. இறைவி கையுறை யேற்றமை பாங்கி
யிறைவற் குணர்த்தலுங் குறியிடங் கூறலுங்
குறியிடத் திறைவியைக் கொண்டு சேறலுங்
குறியிடத் துய்த்து நீங்கலு மிறையோன்
இடத்தெதிர்ப் படுதலு மியைதலும் புகழ்தலும்
விடுத்தலும் பாங்கி மெல்லியற் சார்ந்து
கையுறை காட்டலு மையுறை கண்ணியைப்
பாங்கிற் கூட்டலு நீங்கித் தலைவற்
கோம்படை சாற்றலு முலகியன் மேம்பட
விருந்து விலக்கலும் பெருந்தகை விருந்திறை
விரும்பலு மெனமுறை தெரிந்தபன் மூன்றுங்
கூட்டன் முதலா வேட்ட லீருப்
பாங்கிக்கு வகுத்த நான்கிற்கு முரிய.

இ - ள். இங்கே சொல்லப்பட்ட இறைவி கையுறையேற்ற
மை பாங்கி யிறைவற்குணர்த்தல் முதலிய பதின்மூன்றும் கூட்
டல், கூடல், ஆயங்கூட்டல், வேட்டல் என்னும் நான்கிற்கும் உரி
யனவாகும் எ - று.

இவற்றுட் பாங்கி கூற்றுயினவெல்லாம் கூட்டற்குரியன. பாங்கிற்கூட்டலொன்றும் ஆயங்கூட்டற்குரியது. தலைவன் கூற்றுயினவெல்லாம் கூடற்கும் வேட்டற்கும் உரியன எனக்கொள்க.

### உதாரணம்.

### தலைவிகையுறையேற்றமை பாங்கியிறைவற்குணர்த்தல்.

போயா னளித்தலுங் கைகுவித் தேற்றபின் போற்றியனபாற்
சாயாத கொங்கையின மேலணைத் தாடஞ்சை வாணன்வெற்பா
காயா மலரன்ன மேனிமெய் யாகநின் கையுறையே
நீயாக வல்லது மாநதழை யாக நினைந்திலளே.

### பாங்கிதலைவற்குக் குறியிடங்கூறல்.

[குறியிடம் - தலைவியைக் கூடக்குறித்த இடம்.]

அணிமா மலர்மயி லைப்புயத் தூணங்கொ ளாகமெனும்
மணிமாளி கைவைத்த வாணனமண் காவலனை மாறைவெற்பா
துணிமா மரகதப் பாசறை வேலைச் சுடரவன்போற
பணிமா மணிதிக ழும்பகல் யாங்கள் பயிலிடமே.

### குறியிடத்திறைவியைக்கொண்டுசேறல்.

[பாங்கி தலைவியைக் குறியிடத்திற்கழைத்துச்செல்லல்.]

நாமாவி மூழ்கி நறுமலர் குற்றுநந் தாவனத்துத்
தேமா விளந்தளிர் செவ்வண்ணங் கொயது சிலம்பெதிர்கூய
வாமா னெடுங்கண் மடநதைநல் லாயதஞ்சை வாணனவெறபிற
பூமா தவிபடந்தர் வாயவிளை யாடுதும போதுகவே.

### குறியிடத்துய்த்துநீங்கல்.

[பாங்கி தலைவியைக் குறியிடத்தில் விட்டு
வியாஜமாகப் பிரிதல்.]

கண்சாயல் கையுருக் கொண்டுதன் வேன்மயில் காந்தள்வள்ளி
எண்சாய வெனறனை யென்றுசெய் வேளிவ ரும்பவளம்
வண்சா யொசிக்கும் வயற்றஞ்சை வாணன் மலயமராத்
தண்சாயை நின்றணங் குந்தைய னீநிற்க சாரலிலே.

### இறையோனிடத்தெதிர்ப்படுதல்.

[தலைவன் குறியிடத்துச்சென்று தலைவியைக் கூடுதல்.]

முயங்கிய நூபுரப் பங்கயத் தாளு முலைசுமந்து
தயங்கிய நூலிடை தானுமென் போலத் தளர்வுறவிங்

இயங்கிய வாறென் மனத்திரு ணீக்கவென் றேதுணிந்தோ
வயங்கிய சீருடை யானவாணன் மாறை மணிவிளக்கே.

## புணர்ச்சியின்மகிழ்தல்.

[தலைவன் தலைவியைப் புணர்ந்துமகிழ்ந்து தன்னுட்கூறல்.]

திருந்சாரு வஞ்சுங் கொடையுடை யான்றஞ்சை வாணனின்சொற்
செருந்தார்பசுந்தமிழ்த்தென்வரைமேற்செம்பொனமேருவெற்பாற
சருந்தாரை நஞ்சுமிழ வாசுகி யால்வெண் கடல்கடைந்து
வருந்தா வமுதந் தரவல்ல ளாமிம் மடக்கொடியே.

## புகழ்தல்.

[தலைமகன் தலைவியை வெளிப்படப புகழதல்.]

மயனார் விதித்தன்ன மாமதில் சூழ்தஞ்சை வாணனவெற்பிற்
பயனார் பயோதரப் பாவையன் னீர்பசும் பொற்குழைதோய்
நயனார விந்தத்து நஞ்சுநும் வாயிதழ் நல்லமுதம்
அயனார் படைத்தில ரேலடங் காதவ் வரனுகருமே.

## தலைமகளைத்தலைமகன்விடுத்தல்.

[விடுத்தல் - ஆயத்திற் செல்லவிடுத்தல்.]

நேயம் புகலிட மின்றிநின் பால்வந்து நின்றதுபோல்
ஆயம் புகல வடைந்தரு ணீயடை யாதமனனா
வாயம் புகலில் வணக்கிய வாணன்றென் மாறைநன்னீர்த்
தோயம் புகரிணை வேல்விழி யாயநின் றுணையுடனே.

## பாங்கிதலைவியைச்சார்ந்து கையுறைகாட்டல்.

[தலைமகன் நீங்கியபின் தோழி தலைவியைவந்து கூடல்.]

பொயயபோ லிடைநின் விழிபோற் குவளையம் போதிவைநின்
மெயயபோ லசோக மிளிர்பூந் தழையிவை மெல்லியனின்
கைபோற் கவின்கொள்செங் காந்தளம் போதிவைகண்டருள்யான்
மைபோற் குழலிதந் தேன்றஞ்சை வாணன் வரையினின்றே.

## தலைவியைப்பாங்கிற்கூட்டல்.

[தோழி தலைவியை ஆயத்தார் விளையாடுமிடத்திற் சேர்த்தல்.]

குனிநாண் மதிநுதற் கோகில மேநின் குழலிலெல்லாப்
பனிநாண் மலரும் பறித்தணிந் தேனிந்தப் பார்மடந்தை
தனிநா யகன்றஞ்சை வாணன்றண் சாரற் றனித்துநில்லா
தினிநா மகன்றிளை யார்விளை யாடிட மெய்துதுமே.

### பாங்கிதலைவற்கோம்படைசாற்றல்.

[பாங்கி தலைமகளை ஆயத்துச்சேர்த்து மீண்டுவந்து தலைவனை
எதிர்ப்பட்டு நின்வழிபாட்டிற்கியைந்து நின்வரைப்பட்ட
என்தோழியை நீ பாதுகாத்துக்கொள்ளென்று கூறல்.
ஓம்படை - பாதுகாப்பு, பேணுதல்.]

சின்னுண் மலர்க்குழல் காரண மாச்செவ்வி பார்த்துழன்று
பன்னா ளுரைத்த பணிமொழி நோக்கிப் பழிநமக்கி
தென்னா திடைப்பட்ட வென்னிலை நீமற வேலிறைவா
சந்நாக * மெய்ப்புக ழான்றஞ்சை வாணன் றமிழ்வெற்பிலே.

### உலகியன்மேம்படவிருந்துவிலக்கல்.

[பாங்கி உலகியலால் விருந்துகூறுவாள் போன்று
தலைமகனைப் பகல்வரல்விலக்கல்.]

வலைப்பெய்த மான்றசை தேன்றோய்த் தருந்தி மரைமுலைப்பால்
உலைப்பெய்த வார்தினை மூரலு முண்டுளங் கூருவகை
தலைப்பெய்த நாளனை யான்றஞ்சை வாணன் சயிலத்தெம்மூர்
இலைப்பெய்த தாழ்குரம் பைத்தங்கி னாலுமக் கென்வருமே.

### விருந்திறைவிரும்பல்.

[தலைவன் விருந்தாகத்தங்குதலை விரும்பல்.]

மஞ்சூட்டி யன்ன சுதைமதில் சூழ்தஞ்சை வாணன்வெற்பிற்
பஞ்சூட் டியமென் பதயுகத் தீருங்கள் பாடியின்மான்
வெஞ்சூட் டிழுதன்ன வூனும்பைந் தேனும் விருந்தினர்க்குச்
செஞ்சூட் டிளகுபொன் போற்றினை மூரலுந் தெள்ளமுதே. (௩௨)

[இதுவுமது.]

**கசசு. அற்றமில் சிறப்பினிவ் வறுபத் தொன்றுங்
குற்றமில் பாங்கியிற் கூட்டத்து விரியே.**

இ - ள். தலைமகனுட்கோள் சாற்றல் முதலிய இந்த அறுபத்தொருகிளவிகளும் பாங்கியிற் கூட்டத்து விரியாகும் எ - று.

---

## ௧௦. பகற்குறி.

**கரு௦. கூட்டல் கூடல் பாங்கிற் கூட்டல்
வேட்டலென் றொருநால் வகைத்தே பகற்குறி.**

---

* சந்நாகம் - கவசம். "புகழ்க்கவசம்போர்த்து" என்றார் பிறரும். தன்னாகம் என்னும் பாடம் நன்றன்று.

இ - ள். கூட்டலும், கூடலும், பாங்கிற்கூட்டலும், வேட்டலும் என்று பகற்குறி நான்குவகையுடையதாகும் எ - று.

பாங்கிற்கூட்டல் - ஆயத்திற்சேர்த்தல். (௧௫௪)

[பகற்குறியின்விரி.]

௧௫௧. குறியிடங் கூறன் முதலாப் பெறலரும்
விருந்திறை விரும்ப லீறாப் பொருந்தப்
பகர்ந்த பன்னிரண்டும் பகற்குறி விரியே.

இ - ள். "இறைவி கையுறையேற்றமை" என்னுஞ் சூத்திரத்திலே குறியிடங்கூறல் என்பது முதலாக "விருந்திறை விரும்பல்" என்பதிறுகச் சொல்லப்பட்ட பன்னிரண்டும் பகற்குறிவிரியாகும் எ - று.

உதாரணங்களும் ஆங்கே காட்டப்பட்டன. அவற்றினை நோக்கிக்கொள்க. (௧௫௫)

[ஒருசார்பகற்குறி]

௧௫௨. இரங்கல் வன்புறை யிற்செறிப் புணர்த்தலென்
றொருங்கு மூவகைத் தொருசார் பகற்குறி.

இ - ள். ஒருசாரார் கூறும் பகற்குறி இரங்கலும், வன்புறையும், இற்செறிப்புணர்த்தலும் என மூவகையுடையதாகும் எ - று.

இது பிறர்மதங்கூறல். (௧௫௬)

[ஒருசார்பகற்குறிவிரி.]

௧௫௩. கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்
பொழுதுகண் டிரங்கலும் பாங்கி புலம்பலுந்
தலைவ னீடத் தலைவி வருந்தலுந்
தலைவியைப் பாங்கி கழறலுந் தலைவி
முன்னிலைப் புறமொழி மொழிதலு மின்னுயிர்ப்
பாங்கியொடு பகர்தலும் பாங்கியச் சுறுத்தலும்
நீங்கற்கருமை தலைவி நினைந் திரங்கலுந்
தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றலுஞ்
சிறைப்புற மாகச் செறிப்பறி வுறுத்தலும்
முன்னிலைப் புறமொழி மொழிந்தறி வுறுத்தலும்
முன்னின் றுணர்த்தலு முன்னின் றுணர்த்தி

ஓம்படை சாற்றலு மேம்படு கிழவோன்
றஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளத்தலும்
என்ற வீரேழு மெல்லுக்குறி விரியே.

இ—ள். இங்கே கூறப்பட்ட கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுதுகண்டிரங்கல் முதலிய பதினான்கும் ஒருசார் பகற்குறியின் விரியாகும் எ - று.

இவற்றுள்ளே கிழவோன் பிரிந்துழிக் கிழத்திமாலையம் பொழுதுகண்டிரங்கல், பாங்கிபுலம்பல், தலைவனீடத் தலைவிவருந்தல், முன்னிலைப்புறமொழிமொழிதல், பாங்கியொடுபகர்தல், நீங்கற்கருமை தலைவிநினைந்திரங்கல், தலைவன் றஞ்சம்பெறாது நெஞ்சொடுகிளத்தல் என்னும் ஏழும் இரங்கலுக்குரியன. இவ்வேழனுள்ளே இறுதியினின்ற ஒன்றொழிந்த ஆறும் வரைதல் வேட்கைக்குமுரியன.

தலைவியைப் பாங்கி கழறல், தலைவியைப் பாங்கியச்சுறுத்தல், தலைவிக்கு அவன் வரல் பாங்கி சாற்றல் என்னும் மூன்றும் வன்புறைக்குரியன.

சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல், முன்னிலைப்புறமொழி மொழிந்தறிவுறுத்தல், முன்னின்றுணர்த்தல், முன்னின்றுணர்த்தி யோம்படைசாற்றல், என்னும் நான்கும் இற்செறிப்புணர்த்தற்குரியன. இவை வரைவுகடாதற்குமாகும்.

அச்சுறுத்தல் - பயமுறுத்திக்கூறுதல். சிறைப்புறம் - வேலிப்புறம். செறிப்பு - இற்செறிப்பு; இற்செறிப்பாவது புறத்துப்போய விளையாடாமல் இல்லினுள்ளே அடக்கிவைத்தல். தஞ்சம் - பற்றுக்கோடு.

## உதாரணம்.

### கிழத்திமாலையம்பொழுதுகண்டிரங்கல்.

[தலைவன் பிரிந்துழித் தலைவி மாலைப்பொழுதுவர வருந்துதல்.]

ஆழ்ந்தார் தமக்கரு ளாதவர் போலிவ் வளவிலன்பு
சூழ்ந்தார் செலத்தொங்கல் சூழ்சூழ லாய்சொற் பொருள்படைத்து
வாழ்ந்தார் புகழ்தஞ்சை வாணனைப் பேணலர் மானவெயயோன்
வீழ்ந்தார் கலிக்கரந் தான்பனி மாலை வெளிப்படவே.

### பாங்கிபுலம்பல்.

[தலைவியின் வருத்தங்கண்டு தோழி இரங்கல்.]

காலையம் போருக வாண்முகத் தாளன்பர் கையகல
மாலையும் போது வருவித்த நீர்தஞ்சை வாணன்றெவ்வர்
ஆலையம் போலுங்க ளாதவன் கோயி லழல்கொளுந்த
வேலையம் போடுழல் வீர்பரி காளென்றும் வெய்துயிர்த்தே.

### தலைவனீடத்தலைவிவருந்தல்.

[தலைவன் வாராது பொழுதுநீட்டிக்கத் தலைவி வருந்தல்.]

ஆராத வின்ப விடநதொறு நீங்கிய வாயமெனபால்
வாராத முன்னம் வருகில ராற்றஞ்சை வாணன்வெற்பிற
கூரா தரநல்கி வல்வினை யேனலங் கொள்ளைகொண்டு
தேரா தவனுடனேனெனனன் மாலையிற் செனறவரே.

### தலைவியைப்பாங்கிகழறல்.

[தலைவன் வந்திலனென்று வருநதுந் தலைவியைத்
தோழி கடிந்துகூறல்.]

சிறநதார் தெரிந்த செழுந்தமிழ் வாணன்றென் மாறைவெற்பர்
துறந்தா ரெனையென்று சோருவ தேனிநதத் தொல்லுலகிற்
பிறந்தா ரெவர்க்கும் பிரிவெய்து மால்வெயய பேரமர்க்கட்
புறந்தாழ் கரிய குழற்செய்ய வாயைய பூங்கொடியே.

### தலைவிமுன்னிலைப்புறமொழிமொழிதல்.

[முன்னிலையாய் நிற்கின்ற தோழியை நோக்கிக்கூறுது அவள்
கேட்கப் பிறரைக் கூறுவாளாகத் தலைவி கூறல்.]

பூவலர் வாவியி னீரற்ற போதுற்ற புன்மையல்லாற்
காவலர் காமந் துறக்கிலென் ளுங்கடம் பாயமதுகை
மாவல வாணன் வயற்றஞ்சை வேந்தனை வாழ்த்தல்செய்யா
மேவலர் போலுங் கழற்றுரை யாளர் வியனறிவே.

### பாங்கியோடுபகர்தல்.

[தலைவி தோழிக்குத் தலைவன் பிரிவால் தானுறு
கின்ற துன்பத்தினைக் கூறல்.]

முலையார் முயக்கினு மல்லா விடத்தினு மூரிமுந்நீர்
அலையா ரமுதமு நஞ்சமும் போல வணங்கனையாய்
தொலையாத வின்பமுந் துன்பமுங் காட்டுவர் தூங்கருவி
மலையா சலத்தமிழ் தேர்வாணன் மாறைநம் மன்னவரே.

### தலைவியைப்பாங்கியச்சுறுத்தல்.

பேணற் கரியநின் பெண்மையு நாணமும் பேணியவர்
காணத் தருமென்று காண்பதல் லாற்கழி காதனெஞ்சு
பூணத் தருகினும் பொற்பல்ல வாகுதல் கற்பல்லவால்
யாணர்த் தமிழுடை யான்வாணன் மாறையி னின்னமுதே.

### நீங்கற்கருமைதலைவிநினைந்திரங்கல்.

[நீங்கற்கருமை - தலைவனைவிட்டுப் பிரிதற்கருமை.]

குன்று கியபொன்னும் வேழக் குழாமுங் கொடைபுகழ்ந்து
சென்றோர் முகக்குஞ் செழுர்தஞ்சை வாணன்றென் மாறைவெறபின்
நன்று மிறைவற்கு நன்றியி லேற்குமுன் ஞன்முகத்தோன
ஒன்று விதித்தில னேயுயிர் போல வுடம்பையுமே.

### தலைவிக்கவன்வரல்பாங்கிசாற்றல்.

நெஞ்சுக வாயமல ரன்னகண் ணீர்மல்க நின்றவஞ்சொற்
கிஞ்சுக வாயவஞ்சி கேட்டரு ணீயுங் கிளைத்தமிழோர்
தஞ்சுக வாயமொழி நெஞ்சுடை யான்றஞ்சை வாணன்வெற்பின
மஞ்சுக வார்த்தன வாலவர் தேரின் மணிக்குரலே.

### சிறைப்புறமாகச்சேறிப்பறிவுறுத்தல்.

[தலைவன் வேலிப்புறத்து வரத் தோழி தாம் இற்
செறிக்கப்படுதலை உணர்த்துதல்.]

தொடைக்கணி யார்தடந் தோளவர் கேளலர் தோகையன்னூர்
உடைக்கணி யாந்தழை கொய்யா ருழவ ருடைத்ததெண்ணீர்
மடைக்கணி யார மிடுந்தஞ்சை வாணன் வரையின்முன்போற்
கடைக்கணி யார்கணி யார்நம்மை நாளைக் கருங்கணியே.

### முன்னிலைப்புறமொழிமொழிந்திற்சேறிப்புணர்த்தல்.

[முன்னிலையாய் நிற்கின்ற தலைவனுக்கு நேரேகூறுது பிறரைக்
கூறுமாறுபோலத் தோழி தாம் இற்செறிக்
கப்படுதலை உணர்த்துதல்.]

பயில்கான பந்திப் புயலன்ன வோதியைப் பைங்கிள்ளைகாண்
மயில்காள் சிறிது மறக்கப் பெறீர்தஞ்சை வாணன்வெற்பிற்
குயில்கான மெங்கு மியம்புதண் சோலையிற் கூடியின்பம்
அயில்கான வெங்கதிர் வேலன்பர் சால வயர்ப்பினுமே.

### பாங்கிதலைமகன்முன்னின்றிற்செறிப்புணர்த்தல்.

[தோழி தாம் இற்செறிக்கப்படுதலைத் தலைமனுக்கு
நேரே உணர்த்துதல்.]

கானலங் கான்மலர்க் கள்வாயக் கருங்கணி கட்டுரையாற்
கூனலஞ் சாய்பொற் குரலுங்கொய் தாரெமர் கொற்றவயாம்
ஏனலங் காவலு மின்றே யொழிந்தன மேழ்புவிக்குந்
தானலங் காரமன் னைதஞ்சை வாணன் றமிழ்வெற்பிலே.

### முன்னின்றுசெறிப்புணர்த்தியோம்படைசாற்றல்.

[இற்செறிப்புணர்த்திய தோழி தலைமகளைப் பாது
காக்கும்படி தலைமகனை வேண்டல்.]

கனஞ்சாய நல்கிய கையுடை யானெதிர் கன்றினர்தம்
மனஞ்சாய வென்றருள் வாணன் வரோதயன் மாறைவெற்பிற்
சினஞ்சாலும் வேலன்ன லேமற வேலெம்மைச் செவ்வியிரு
தனஞ்சா யினுமினி நின்னையல் லாதில்லைத் தாழ்குழற்கே.

### இதுவுமது.

எறிந்தெமர் தாமுழுத வீர்ங்குர லேனல்
மறந்துங் கிளியினமும் வாரா—கறங்கருவி
மாமலை நாட மடமொழி தன்கேண்மை
நீமறவே னெஞ்சத்துக் கொண்டு. ஐந்திணையம்பது.

### தஞ்சம்பெறாதுநெஞ்சொடுகிளத்தல்.

[இற்செறிவறிவுறுக்கப்பட்ட தலைமகன் தனக்கொரு பற்றுக்
கோடும் காணாது நெஞ்சொடு சொல்லுதல்.]

ஏவல ரேய்விழி மாந்தளிர் மேனிய ரேனலினிக்
காவல ரேமனங் காத்தனம் யாங்களி யானைசெம்பொன்
நாவல ரேபெற நல்குங்கை மேக நறுங்குவளை
மாவல ரேய்தொடை யான்றஞ்சை வாணன் வரையில்வந்தே.

---

## கக. பகற்குறியிடையீடு.

**கருச. விலக்கல் சேறல் கலக்க மென்றுங்**
**கெப்பின்மூ வகைத்தே பகற்குறி யிடையீடு.**

இ - ள். பகற்குறியிடையீடு விலக்கலும், சேறலும், கலக்க
மும் என்று சொல்லப்படும் மூவகையுடையது எ - று.

பகற்குறியிடையீடு - பகற்குறிக்கண் தலைவன் தலைவியைக் கூடாமை நிகழ்ந்ததை. (௬அ)

[பகற்குறியிடையீட்டுவிரி.]

கருரு. இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கலும்
இறைவியைக் குறிவரல் விலக்கலு மிறைமகள்
ஆடிட நோக்கி யழிதலும் பாங்கி
ஆடிடம் விடுத்துக்கொண் டகறலும் பின்னாள்
நெடுந்தகை குறிவயி னீடுநின் றிரங்கலும்
வறுங்கள நாடி மறுகலுங் குறுந்தொடி
வாழுமூர் நோக்கி மதிமயங் கலுமெனும
ஏழும் பகற்குறி யிடையீட்டு விரியே.

இ - ள். இங்கே சொல்லப்பட்ட இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கல் முதலிய ஏழும் பசற்குறியிடையீட்டு விரியாகும் எ - று.

இவற்றுள்ளே இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்சல், இறைவியைக் குறிவரல்விலச்கல் என்னும் இரண்டும் விலக்கற்குரியன. பாங்கியாடிடம் விடுத்துக்கொண்டகறல் என்னும் ஒன்றும் சேறற்குரியது. மற்றையநான்கும் கலக்கத்திற்குரியன.

இறைவனைப்பாங்கிகுறிவரல்விலக்கல்.

புனமும் பசுந்தினைச் செங்குர லேந்தும் புகனறகிள்ளை
இனமுங் குழீஇவந் திறைகொள்ளு மாலிறை யார்வளையும்
மனமுங் கவர்வெற்ப வாணன்றென் மாறை மடப்பிடியும்
அனமுந் தொழுநடை பாற்பல கால்வரு மன்னையுமே.

பாங்கியிறைவியைக்குறிவரல்விலக்கல்.

நந்துசுற் றுங்கடன் ஞாலமெல் லாம்புகழ் நாமன்வளர்
சந்துசுற றுங்கொங்கை மங்கையர் வேள்சஞ் சரிகநறை
வந்துசுற் றுந்தொங்கல் வாணன்றென் மாறை வரையின்மலர்க்
கொந்துசுற் றுங்குழ லாயசெல்ல னீயக் குளிர்பொழிற்கே.

இறைமகளாடிடநோக்கியழிதல்.

[புனங்காவல் நீங்கி ஊர்க்குப்போகுந் தலைவி தாம் விளையாடுமிடத்தைநோக்கி மனமழிதல்.]

அருவித் தடமு மணிமுத்த யாறு மவனியெங்குந்
திருவித் தியதஞ்சை வாணன் சிலம்புமிச் சிற்றிலும்பேர்

இருவிப் புனமுமின் றென்னினைக் கின்றன வென்னையின்னே
மருவிப் பிரிபவர் போலில்லை யேமண்ணில் வன்கண்ணரே.

### பாங்கியாற்றிடம்விடுத்துக்கொண்டகறல்.

உன்னைய ராவலக்கு னல்லவ ரேயென் றுசாவினெங்கண்
மன்னைய ராமல் வருத்துறை நீதஞ்சை வாணன்வெற்பில்
என்னைய ராணைகொண் டேகுகின றேனிவை யித்தனையும்
பின்னைய ராதொழி வாயித ணேயிது பெற்றனமே.

### நெடுந்தகைகுறிவயினீடுநின்றிரங்கல்.

[தலைவன் குறியிடத்துவந்து நெடுநேரம் நின்று
தலைவிவாராமைகண்டு வருந்தல்.]

மான்கா ணிகரின் மடமயில் காடஞ்சை வாணன்வெற்பிற்
றேன்கா ணிரைமென் சிறைக்கிள்ளை காளென் றெருமரனேய்
தான்கா ணியகொலிச் சந்தனச் சோலையைத் தன்னையின்றி
யான்கா ணியகொ லெழுந்தரு ளார்தெ னின்னுயிரே.

### வறுங்களநாடிமறுகல்.

[தலைவி நீங்கிய தினைபபுனத்திலே தலைவன்
அவளைத்தேடி வருந்துதல்.]

செங்கேழ் விழிக்கு மொழிக்கும் பகைதிருப பாற்கடலும்
பங்கே ருகமும் பயந்தன வாயினும் பைங்கிள்ளைகாள்
சங்கேய் தடந்துறை சூழ்தஞ்சை வாணன் றரியலர்போல்
எங்கே யினிந்தங்கு வாரேனல் காத்திங் கிருந்தவரே.

### தலைவன்தலைவிவாழூர்நோக்கிமதிமயங்கல்.

பெறவரி தாலவர் பினசென்ற நெஞ்சமும் பேணலர்க்கு
மறவரி தானன்ன வாணன்றென் மாறை வரைப்புனஞ்சூழ்
நறவரி தாழ்முல்லை நாண்மல ரோதி நகருமெனக்
குறவரி தாமென்செய வேனென்று சோருமென் ஞேருயிரே.(௩௯)

---

## ௧௨. இரவுக்குறி.

**௧௫௪. வேண்டல் மறுத்த லுடன்படல் கூட்டல்**
**கூடல் பாராட்டல் பாங்கிற் கூட்டல்**
**உயங்க னீங்கலென் றென்பது வகைத்தே**
**இயம்பிப் போந்த விரவுக் குறியே.**

இ - ள். மேலே சொல்லிப் போந்த இரவுக்குறி, வேண்டல் என்பது முதல் நீங்கல் என்பது ஈறுகச் சொல்லப்பட்ட ஒன்பது வகையினையுடையதாகும் எ - று. (சo)

[இரவுக்குறிவிரி.]

கடுஎ. இறையோ னிருட்குறி வேண்டலும் பாங்கி
நெறியின தருமை கூறலு மிறையோன்
நெறியின தெளிமை கூறலும் பாங்கி
அவனாட் டணியியல் வினாதலுங் கிழவோன்
அவணாட் டணியியல் வினாதலு மவற்குத்
தந்நாட் டணியியல் பாங்கி சாற்றலும்
இறைவிக் கிறையோன் குறிப்பறி வுறுத்தலும்
நேரா திறைவி நெஞ்சொடு கிளத்தலும்
நேரிழை பாங்கி யொடுநேர்ந் துரைத்தலும்
நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குரைத்தலும்
குறியிடங் கூறலுங் குறிவயி னிறீஇத் தாய்துயி லறிதலும்
இறைவிக் கிறைவன் வரவறி வுறுத்தலும்
அவட்கொண்டு சேறலுங் குறியுய்த் தகறலும்
வண்டுறை தாரோன் வந்தெதிர்ப் படுதலும்
பெருமக ளாற்றின தருமைநினைந் திரங்கலும்
புரவலன் றேற்றலும் புணர்தலும் புகழ்தலும்
இறைமக ளிறைவனைக் குறிவிலக் கலுமவன்
இறைவியை யில்வயின் விடுத்தலு மிறைவியை
எய்திப் பாங்கி கையுறை காட்டலும்
இற்கொண் டேகலும் பிற்சென் றிறைவனை
வரவு விலக்கலும் பெருமகன் மயங்கலுந்
தோழி தலைமக டுயர்கிளந்து விடுத்தலுந்
திருமகட் புணர்ந்தவன் சேறலு மென்றாங்
கிருபத் தேழு மிரவுக்குறி விரியே.

இ - ள். இங்கே சொல்லப்பட்ட இறையோனிருட்குறிவேண்டல் முதலாகிய இருபத்தேழும் இரவுக்குறியின் விரியாகும் எ-று.

இவற்றுள் இறையோனிருட்குறிவேண்டல், நெறியினதெளிமைகூறல், அவணாட்டணியியல்வினாதல், பாங்கியிறைவிக்கு இறையோன் குறையறிவுறுத்தல் என்னும் நான்கும் வேண்டற்குரியன.

பாங்கி நெறியினதருமைகூறல், இறைமகளிறைவனைக்குறிவிலக்கல், பாங்கி இறைவனை வரவுவிலக்கல் என்னும் மூன்றும் மறுத்தற்குரியன. பாங்கியவனுட்டணியியல்வினுதல், அவனுக்குத் தந்நாட்டணியியல்சாற்றல், தலைவி பாங்கியொடு நேர்ந்துரைத்தல் என்னும் மூன்றும் உடன்படற்குரியன. தலைவிநேர்ந்தமை பாங்கி தலைமகற்குணர்த்தல், குறியிடைநிறீஇத் தாய்துயிலறிதல், இறைவிக் கிறைவன் வரவறிவுறுத்தல், அவட்கொண்டு சேறல் என்னும் நான்கும் கூட்டற்குரியன. தலைமகன் தலைமகளை யெதிர்ப்படுதல், தேற்றல், புணர்தல் என்னும் மூன்றும் கூடற்குரியன. புகழ்தல், கையுறைகாட்டல் என்னும் இரண்டும் பாராட்டற்குரியன. தலைமகனிறைவியை இல்வயின்விடுத்தல், பாங்கி தலைமகளை இற்கொண்டேகல் என்னும் இரண்டும் பாங்கிற்கூட்டற்குரியன. நேராதிறைவி நெஞ்சொடுகிளத்தல், தலைமகள் ஆற்றினதருமைநினைந்திரங்கல், பெருமகன்மயங்கல், தோழி தலைமக டுயர்கிளந்து விடுத்தல் என்னும் நான்கும் உயங்கற்குரியன. பாங்கி குறியுய்த்தகறல், திருமகட்புணர்ந்தவன்சேறல் என்னும் இரண்டும் நீங்கற்குரியன.

இவற்றுள்ளே நேராதிறைவி நெஞ்சொடுகிளத்தல், பெருமகளாற்றினதருமை நினைந்திரங்கல், இறைமகள் இறைவனைக்குறிவரல்விலக்கல் என்னும் மூனறும் வரைதல் வேட்கைக்குமுரியன. பாங்கி நெறியினதருமைகூறல், இறைவனை வரவுவிலக்கல் தலைமகடுயர்கிளந்து விடுத்தல் என்னும் மூன்றும் வரைவுகடாதறகும் உரியன.

## உதாரணம்.

### இறையோனிருட்குறிவேண்டல்.

[தலைவன் பாங்கியை இரவுக்குறி வேண்டாநிற்றல்.]

கருவிருந் தெண்டிசை யுங்கன மாமழை கான்றதுள்ளம்
வெருவிருந தெமபதிக் கேகவொண் ணுது விதம்விதமாய்
வருவிருந தென்றும் புரந்தருள் வாணன்றென் மாறையன்னீ
ஒருவிருந் தென்றனைப் போலெயது மோகங்கு லுங்களுக்கே

### பாங்கிநெறியினதருமைகூறல்.

[தலைவன் வரும் வழியினதருமை கூறித் தோழி இரவுக்குறி மறுத்தல்.]

மலைமாது வல்லவன் வாணன் வரோதயன் மாறைவெற்பிற்
சிலைமா லுருமெங்குந் தீயுமி ழாநிற்குஞ் சிங்கமெங்கும்

கொலைமா கரியிரை தேர்ந்துழ லாநிற்குங் கொற்றவபொற்
கலைமா னுறைபதி நீவரு மாறென்கொல் கங்குலிலே.

### இதுவுமது.

ஒருவரைபோ லெங்கும் பலவரையுஞ் சூழ்ந்த
அருவரை யுள்ளதாஞ் சீறூர்—வருவரையுள்
ஐவாய நாகம் புறமெல்லா மாயுங்காற்
கைவாய நாகஞ்சேர் காடு. **திணைமாலைநூற்றைம்பது.**

### தலைமகன்நெறியினதெளிமைகூறல்.

[தலைமகள் காரணமாக அருநெறியுமெளிதாமென்று
தலைமகன் தனதாற்றுமை புலப்படக்கூறல்.]

வடிவரி நீள்கண்ணி யஞ்சலம் யாந்தஞ்சை வாணன்வெற்பிற்
கொடுவரி கேழற் குழாமுழுங் கொல்லையுங் குஞ்சரந்தேர்ந்
தடுவரி தாவு மடுக்கலுஞ் சூர்வழங் காறுமைவாயக்
கடுவரி நாகக் குழாமல்கு கல்லளைக் கானமுமே.

### பாங்கி அவனூட்டணியியல்வினுதல்.

[தலைமகனதாற்றுமை கண்டு இரவுக்குறி நேருகின்ற தோழி
அதுபுலப்பட அவனை நின்னூட்டாரணிவது யாது
ஆடிடம் யாதென்று வினவுதல்]

பூந்தழை யாது மலைமலர் யாது புனையிழையுஞ்
சாநதமும் யாது தடம்பொழில் யாது தரணியின்மேல்
மாந்தரில் வேளன்ன வாணனறென் மாறை வளநகர்சூழ்
தேந்தரு சோலைவெற பாநுங்க ளூட்டுறை செல்வியர்க்கே.

### தலைமகன் அவள்நாட்டணியியல்வினுதல்.

[தோழி கேட்ட வினவின் குறிப்பறிந்து தலைவன் அவளை நின்
னூட்டாரணிவது யாது ஆடிடம் யாதென்று வினவுதல்.]

எந்நாட் டவரணி கூறியென் பேறிங் கிசல்வடிவேன்
மைந்நாட்ட வெண்முத்த வாணகையாயதஞ்சைவாணன் மண்மேல்
உந்நாட் டரிவைய ராடிடஞ் சாந்த மொளியிழைபூ
மொயந்நாட் டழையொடெல் லாமொழியாமன்மொழியெனக்கே.

### தலைமகற்குப்பாங்கிதந்நாட்டணியியல் சாற்றல்.

[தலைமகற்குத் தோழி யாங்கள் இன்ன அணிவோம் இன்ன
பொழிலிடத்து விளையாடுவோமென்று குறியிடங்கூறல்.]

வகைகொண்ட மாந்தழை காந்தளம் போது மருப்பின்முத்தம்
தகைகொண்ட சந்தனச் சாந்தணிந் தாடுவர் தஞ்சையர்கோன்
மிகைகொண்ட தெவ்வரை வென்கண்ட வாணன்வெற் பாவெமதூர்
நகைகொண்ட வல்லியன் னூரெல்லி நாக நறுநிழற்கே.

இதுவுமது.

ஆம்ப லணித்தழை யாரந் துயல்வருந்
தீம்புன லூரன் மகளிவ ளாயநத
நறுமலர் நீலம் பிணையல் செறிமலர்த்
தாமரை தன்னையர் பூ.

திணைமொழியைம்பது.

## பாங்கிதலைமகட்குத்தலைமகன்குறிப்பறிவுறுத்தல்.

[தலைமகனுக்கு இரவுக்குறி நேர்ந்த தோழி தலைவியைச்
சார்ந்து தலைவன் இரவுக்குறி வேண்டா
நிற்கின்றானென்று கூறல்.]

புயலே றதிர்தொறும் பொங்குளை மீதெழப் போதகநேர்ந்
தியலே றதிரு மிருங்கங்குல் வாயமுத்த மீன்றுசங்கம்
வயலே றணைவள ருந்தஞ்சை வாணன் வரையிலுண்கண்
கயலே றனையநின் பால்வரல் வேண்டினர் காதலரே.

## தலைமகள்நேராதுநெஞ்சொடுகிளத்தல்.

[வழியினதருமைநினைந்து இரவுக்குறிக்குடன்பட
தலைமகள் தனது நெஞ்சொடு சொல்லுதல்.]

விடவார் கணைவிழி மெல்லியன் மாதரை மேதினியோர்
டைய ரெனுமுரை வாயமைநெஞ் சேதஞ்சை வாணன்வெற்பிற்
கடவா ரணந்திரி கங்குனங் கண்ணன்ன காதலர்முட்
படவார் சிறுநெறி வாயவரல் வேண்டினள் பெண்ணணங்கே.

## தலைமகள்நேர்ந்துபாங்கியோடுரைத்தல்.

[வழியினதருமைநினைந்து மறுக்கலுற்ற தலைமகள அவரது
விருப்பமதுவாயின் யான் மறுத்தல் தகுமோ என
இரவுக்குறி நேர்தல்.]

வெங்குல வாரண மேற்றவர்க் கேகல்கி வேற்றரசர்
தங்குல வாழ்வு தவிர்த்தருள் வாணன் றமிழ்ச்சிலம்பிற்
கங்குல வாவினர் காதல ராயிற் களிபயந்த
கொங்குல வாவலர் சூழ்குழ லாயென்கொல் கூறுவதே.

## நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக்குரைத்தல்.

[தலைமகள் குறிநேர்ந்தமை பாங்கி தலைமகற்குரைத்தல்.]

பரவாத வண்ணம் பரவியும் பாதம் பணிந்து நெஞ்சங்
கரவாத பொன்னைநின் காரண மாகச் சயிலையென்றே
வரவா தவனஞ்சும் வெண்மா ளிகைத்தஞ்சை வாணன்வெற்பா
இரவாத வண்ணமெல் லாமிரந் தேனிவ் விரவிடையே.

## பாங்கி தலைமகனைக் குறியிடைநிறீஇத் தாய்துயிலறிதல்.

[தலைமகனைக் குறியிடத்து நிறுவி அங்கே தலைமகளைக்கொண்டுபெயர்க்கக் கருதிய தோழி தாய்துயிலறியாநிற்றல்.]

மாகந் தரியலர்க் கீந்தருள் வாணன்றென் மாறைவெற்பின்
மேகந் தருமின் னிடையன்ன மேவிரை நாண்மலர்வேய்
நாகந் தழுவுங் குடம்பையின் வாய்நடு நாளிரவிற்
சோகந் தவிர்வில வாய்த்துயி லாதென் றுரைகைகளே.

## தலைமகட்குத் தலைமகன் வரவறிவுறுத்தல்.

[தாய்துயிலறிந்த தோழி தலைமகட்குத் தலைவன் குறியிடத்து வந்தமை உணர்த்துதல்.]

கந்தார நாணுங் கனிந்தசொல் லாய்நங் கடிமனைக்கே
வந்தா ரவாவின் பெருமையி னூற்றஞ்சை வாணன்வெற்பிற்
கொந்தா ரசோகந் தருஞ்செழும் போதுங் கொழுந்தழையுந்
தந்தா ரகலந் தழீஇயக லாது தணந்தவரே.

## பாங்கிதலைமகளைக் குறிவயிற்கொண்டுசேறல்.

மின்னே யயிலொடு மின்விளக் காவந்த வெற்பரைநாம
பொன்னே யெதிர்கொளப் போதுகம் வாபுவி யேழினுக்குந்
தன்னேயம் வைத்தருள் சந்திர வாணன் றமிழ்ச்சிலம்பில்
நின்னே ரியன்மயில் கண்டுயி லுக நிழலகத்தே.

## குறியிடத்துய்த்து நீங்கல்.

[தோழி தலைவியைக் குறியிடத்து நிறுத்தி நீ இங்கே நில் நான் நினைக்குப் பூக்கொய்துகொண்டு வருவலெனத் தான் அகலாநிற்றல்.]

மந்தார மன்னகை வாணன்றென் மாறை மயிலனையாய்
நந்தா வனம்பொய்கை * நான்கொய்கு வேன்குழ லுனுங்கட்குள்

* பாங்கிபின்னர் முல்லைமலருங் காட்டலரல் "நந்தாவனப் பொய்கை" என்னும் பாடம் இயையாது.

கொந்தார் தெரியனின் செங்கனி வாயொடுங் கொங்கையொடும்
பைந்தா மரையையுஞ் சேதாம் பலையும் பகைப்பித்ததே.

## தலைமகன் தலைவியைக் குறியிடத்தெதிர்ப்படுதல்.

[குறியிடத்துத் தனிநிறை தலைவியைத் தலைமகன் வந்துசார்தல்.]

முதிரா முலையிப் பணியந்த கார முனியவல்ல
கதிரா யிரமில்லை யேழ்பரித் தேரில்லை காவல்வெய்யோற்
கெதிராதல் சோமற் கிலையவதன் றேறும்மில் யார்திறந்தார்
மதுரா புரித்தமிழ் தேர்வாணன் மாறை வனத்துவந்தே.

## ஆற்றினதருமை நினைந்திரங்கல்.

[தலைமகள் தலைமகன் வந்த வழியினதருமை
நினைந்திரங்குதல்.]

செழியன் கயலைத் திசைவைத்த வாணன்றென் மாறையின்மேற்
கழியன் புடையநின் கால்கண்க ளாகக் கராம்பயிலுங்
குழியன்றி யும்வெஞ் சுழியொன்றும் யாறுங் குழீஇக்கொடிதாம்
வழியன்ப நீயெங்ங னேவந்த வாறிம் மழையிருட்கே.

## தலைவன் தலைவியைத் தேற்றல்.

[வழியருமை நினைந்திரங்கிய தலைவியைத் தலைவன் தேற்றல்.]

வெயிலுந் தரவிந்த மென்மல ரன்னமும் விந்தைவெற்றி
மயிலும் பயில்புயன் வாணன்றென் மாறைநின் வாள்விழிபோல்
அயிலுங் குயின்மொழி நின்னிடை போன்மின்னு மாடளிகள்
பயிலுந் தொடைநின் குழல்போ லிருளைப் பருகினவே.

## புணர்தல்.

[தலைமகன் தலைமகளைப் புணர்ந்தமை கூறுநிற்றல்.]

சுழிநீ ரலைகடற் றொல்லுல கேழினுந் தோற்றும்வண்மைக்
கழிநீடு மாடக மேருவின் மீதினுங் காவல்கொண்டு
வழிநீள் புகழ்கொண்ட வாணன்றென் மாறை வரையின்மலர்ப்
பொழிநீழ லும்ப ரமுதனை யாரைப் புணர்ந்தனமே.

## புகழ்தல்.

[தலைமகன் தலைமகணலத்தைப் புகழ்ந்து சொல்லுதல்.]

மண்ணோர் பெரும்புகழ் வாணன்றென் மாறை வரையகிலுந்
தண்ணா ரமுங்கமழ் சார்வருஞ் சாரலிற் சார்ந்துறையும்
பெண்ணா ரணங்கன்ன நின்முகந் தான்கண்ட பின்னுமுண்டோ
கண்ணார் தடங்களின் வாயொடுங் காத கமலங்களே.

## தலைவி தலைவனைக் குறிவிலக்கல்.

[வழியருமைநோக்கித் தலைவி தலைமகன் குறிவயின்
வருதலை விலக்கல்.]

மூரற் கதிர்முத்த வார்முலை யாவியின் மூழ்கத்தணி
வாரறக நீதஞ்சை வாணன்வெற் பாவய மாவழங்கும்
வேரற் கடிய கவலையி னூடு வெயிலவற்கும்
சாரற கருமைய தாமிருள் கூருமெஞ் சாரலிலே.

## தலைவன் தலைவியை இல்வயின்விடுத்தல்.

[புணர்ந்து மகிழ்வுற்றுப் பிரியாநின்ற தலைமகன் இனி நீ
நின்மாளிகைக்குப் போவாயாகெனத் தலைமகளை
வீட்டிற்குச் செலுத்தாநிற்றல்.]

மல்லைடம் போர்வென்ற வாணன்றென் மாறைநின் மாளிகையாம
சொலலையடம் போருகந தேடவுங் கூடுந் தொடித்தளிரால்
முல்லையம் போது முகையுங்கொய யாது முகிழமுலையாய
செல்லையம் பொறபளிங் கிறலம் பாதஞ் சிவபபிக்கவே.

## பாங்கி தலைமகளையெய்திக் கையுறைகாட்டல்.

[தலைமகனைப் பிரிந்துநிற்கின்ற தலைமகளைத் தோழி வந்து
கூடித் தான்கொயதுவந்த பூக்களைக் காட்டல்.]

முகையா யலராய் முலைச்குநின் வாய்க்கு முறைமுறையே
டகையா முளரியுஞ் சேதாம் பலுமிவை பைங்கழுநீர்
வகையார் தொடைபுனை வாணன்றென் மாறையின மௌவலன்ன
நகையா யிவையிவை நின்குழற் காமுல்லை நாண்மலரே.

## பாங்கி தலைமகளை இற்கொண்டேகல்.

[தோழி தலைமகளை வீட்டிற்குக் கொண்டுபோதல்.]

ஒல்கா விருண்மணந் தொல்கரும் போழ்தி னுணர்ந்துநம்மை
நல்கா வியல்பன்னை நாடினு நாடு நடாததருணீ
மல்காவி சூழ்தஞ்சை வாணன்றென் மாறையின் வள்ளையின்மேற்
செல்காவி யன்ன விழித்திரு வேநின் றிருமனைக்கே.

## தலைமகனைப் பாங்கி வரவுவிலக்கல்.

[தோழி தலைமகளை வீட்டிற்சேர்த்து மீண்டுசென்று இனி நீ
இரவில் வாரற்க இரவில் நின்னை எதிர்ப்படுதற்கு

இவள் எளியளல்லளென்று அவளதருமையுரைத்
துத் தலைமகனை வரவுவிலக்காநிற்றல்.]

வெமபோர் முருகென்ன வேல்வல னேந்தி வெறிதிங்ஙனே
வம்போர் நகரெல்லி வாரல்வெற் பாமரு வாவரசர்
தம்போர் கடந்த தடம்புய வாணன் றமிழ்த்தஞ்சைநாட்
டம்போ ருகமல்ல வோதிருக் கோயி லணங்கினுக்கே.

**தலைமகன் மயங்கல்.**

[தோழி இரவுக்குறி விலக்கியது கேட்டுத் தலைவன் கலக்க
முற்றுத் தனதாற்றாமைதோனறக் கூறல்.]

வஞ்சங் கலந்த கலிவென்ற வாணன்றென் மாறைவெற்பிற்
றஞ்சங் கலைதசொற றையலும் யானுந தனித்தனியே
நெஞ்சங் கலந்த நிலைமையெல் லாங்கண்டு நீயமுதின்
நஞ்சங் கலந்தனை யேநனை யார்சூழ னன்னுதலே.

**தோழிதலைமகடுயர்கிளந்துவிடுத்தல்.**

[நீ செல்லும் நெறியினதருமை நினைந்து அவள் வருந்தா
நின்றாளென்று தோழி தலைவியது துயரங்கூறி
வரவு விலக்காநிற்றல்.]

முன்னா ரரவுந் தெரியா விருணெறி முன்னிநையும்
மின்னார் புனையிழை மின்னனை யாளுயய வேலின்வெம்போர்
மன்னார் களிறு திறைகொண்ட வாணன்றென் மாறையன்ன
நின்னா ரகம்புகுந் தாறகுறி காட்டு நெடுந்தகையே.

**தலைமகளைப்புணர்ந்து அவன் சேறல்.**

இருங்குன் றனமதி லெம்பதிக் கேக லெளிதுசெம்மை
தருங்குங் குமமுலைத் தையனல் லாய்தஞ்சை வாணன்வெற்பிற்
கருங்குஞ் சரவினம் வெண்சிங்க வேறஞ்சுங் கங்குலினெம்
மருங்குஞ் சுடர்விளக் காமட வார்குழை மாணிக்கமே. (௪௧)

---

## ௧௩. இரவுக்குறியிடையீடு.

**௧௫௮. அல்லகுறி வருந்தொழிற் கருமை யென்றாங்
கெல்லிக் குறியிடையீ டிருவகைத் தாகும்.**

இ - ள். அல்லகுறி என்றும் வருந்தொழிற்கருமை என்றும்
இரவுக்குறியிடையீடு இருவகையுடையதாகும். எ - று.

அல்லகுறி - நியமிக்கப்பட்ட குறியல்லவாகிய குறி. அது தலைமகனாலே நிகழ்த்தப்படுவனவாகிய புன்னைக்காய் நீரில்விடுதல், புள்ளெழுப்புதல் முதலிய நிகழ்ச்சிகள் பிறிதொன்றினால் நிகழ்த்தப்படுதல். வருந்தொழிற்கருமை - அவ்விடத்தே வருதற்குக் கூடாமையான தீங்குகளின் நிகழ்ச்சி. எல்லி - இரவு. இடையீடு - தவிர்தல், இடைவிடுதல். (சாரு)

[அல்லகுறி.]

கரு௬. இறைவிக் கிறைவ யிறைவர வுணர்த்துழித்
தான்குறி மருண்டமை தலைவியவட் குரைத்த
பாங்கி தலைவன் றீங்கெடுத் தியம்பலும் [லும்
புலந்தவன் போதலும் புலந்தபின் வறுங்களந்
தலைவிகண் டிரங்கலுந் தன்றுணைக் குரைத்தலுந்
தலைமக ளவலம் பாங்கி தணித்தலும்
இறைவன்மேற் பாங்கி குறிபிழைப் பேற்றலும்
இறைவிமே லிறைவன் குறிபிழைப் பேற்றலும்
அவள்குறி மருண்டமை யவளவற் கியம்பலும்
அவன்மொழிக் கொடுமைசென் றவளவட் கிய
ம்பலும்
என்பிழைப் பன்றென் றிறைவிநோ தலுமென
ஒன்று பன்னொன்று மல்லகுறிக் குரிய.

இ - ள். இறைவிக்கிறைவயிறைவரவுணர்த்துழித் தான்குறி மருண்டமை தலைவியவட்குரைத்தல் முதலாக இங்கே சொல்லப் பட்ட பதினொன்றும் அல்லகுறிக்குரியனவாகும் எ - று.

உதாரணம்.

தலைவிக்குப் பாங்கி தலைமகன் வரவுணர்த்தல்.

கயல்வென்ற வுண்கண்ணி காரண மேதுகொல் கைதையங்கான்
அயனின்ற புன்னையி னன்னமெல் லாமட லாழியங்கைச்
சயமங்கை தன்பெரு மான்றஞ்சை வாணன் றரியலர்போற்
றுயரம் பெருகி யிராவொரு போதுந் துயின்றிலவே.

இது பாங்கி தாய்க்குரைப்பவள்போலத் தலைவிக்குத் தலைவன் வரவு கூறியது. இஃது அநுவாதம்.

### தான்குறிமருண்டமை தலைவி பாங்கிக்குரைத்தல்.

[தலைமகன் வரவுணர்த்திய தோழிக்குத் தலைமகன் செய்யுங்குறி பிறிதொன்றனுன் நிகழ்ந்ததனைத் தான் மெய்யாக மயங்கிக் குறியிடஞ் சென்று மீண்டமையைத் தலைவி கூறல்.]

பேசந் தருவதொன் றன்றாகண் டாய்பிறி தோர்குறியை
நேசத் தவாகுறி யென்றுசென் றியான்குறி நின்றுவந்தேன்
வாசத் தமிழ்புனை தோளுடை யான்றஞ்சை வாணனென்னார்
தேசத் தவருமெய தாவெய்ய நோயெய்திச் சேயிழையே.

### இதுவுமது.

அணிகடற் றண்சேர்ப்பன் றேர்ப்பரிமா பூண்ட
மணியரவ மென்றெழுந்து போந்தேன்—கனிவிரும்பும்
புள்ளரவங் கேட்டுப் பெயர்ந்தே னொளியிழாய
உள்ளுருகு நெஞ்சினே னாய். ஐந்திணையைம்பது.

### பாங்கிதலைமகன்றீங்கெடுத்தியம்பல்.

[தலைமகன்றீங்கு - தலைவன் குறியிடத்து வாராததீங்கு.]

வடியோ வெனுங்கண் மடந்தைநல் லாய்தஞ்சை வாணனைக்கண்
டடியோ மெனச்சென் றடையலர் போலயர் கின்றநின்கைத்
தொடியோட மென்பணைத் தோளிணை வாடுந் தொழில்புரிந்த
கொடியோர் துணிந்துசெய் தார்குறி யாத குறிநமக்கே.

### தலைமகன்புலந்துபோதல்.

[தலைமகன் குறியிடத்து நீடுநின்று தலைமகளை எதிர்ப் படாது புலந்து போகாநிற்றல்.]

தேனுற்ற வாகையந் தார்த்தஞ்சை வாணனைச் சேரலர்போல்
மானுற்ற பார்வை மயில்பொருட் டாக வழிதெரியாக்
கானுற்ற கானற் கனையிருள் வாயவரக் கற்பித்தநீ
யானுற்ற நோயகளெல் லாம்படு வாயினி யென்னெஞ்சமே.

### வறுங்களந்தலைவிகண்டிரங்கல்.

[வறுங்களம்-தலைவன் நின்று நீங்கியவதனுற் பயன்படாதகளம்.]

தாதகை தண்டலை சூழ்தஞ்சை வாணன் றடந்துறைவாய்
நீதகை கொண்டென்முன் னின்றனை யேசெந் நிறக்கனிவாய் [க்
மேதகுமுள்ளெயிற்றொண்முகைக்கொங்கைவெண்டோட்டுமென்பூ
கேதகை யென்னுநல் லாய்கொண்கர் மாலை கிடைத்ததென்றே.

### தலைவிபாங்கிக்குரைத்தல்.

[தலைமகன் நின்றுநீங்கிய வறுங்களங்கண்டு பெயர்ந்த தலைமகள் தோழிக்குக் கூறுதல்.]

வரலிங் கரிய மயங்கிருள் யாமத்து வநதிளவேய
நரலுஞ் சிலம்பர் நவமணி யாழி நறவுண்வண்டு
முரலுந் தளையவிழ மொயம்மலாக் காந்தளஞ் செம்மலர்சகை
விரலென்று கொல்செறித் தார்நெறித் தாழ்குழன் மெல்லியலே.

அம்பிகாபதிகோவை.

### இதுவுமது.

நெய்தற் படப்பை நிறைகழித் தண்சேர்ப்பன்
கைதைசூழ் கானலிற கண்டநாட் போலானுல்
செய்த குறியுமபொய யாயின வாயிழாய
ஐயகொ லான்றூர் தொடர்பு. திணைமொழியைம்பது.

### தலைமகளவலப்பாங்கிதணித்தல்.

[அவலம் — துயர்.]

பொய்யா தவர்தங் குறிபிழை யாரவர் பூண்டவன்பு
மெய்யாத றேறி யழுங்கன்மின் னேபுய வெற்பிரண்டால்
மையாழி வைய நிலையிட்ட வாணன்றென் மாறைவெற்பில்
உய்யான மென்கழு நீர்நறு மாலை யுடைத்தல்லவே.

### பாங்கிதலைவன்மேற் குறிபிழைப்பேற்றல்.

[குறிபிழைப்பு - அல்லகுறிப்பட்டகுற்றம்.]

விம்மூர் துயர்க்கடல் வெள்ளத்துள் ளேயெம்மை வீழ்வித்துநீர்
எம்மூ ரகத்து வரலொழிந் தீரெதி ரேற்றதெவ்வர்
தம்மூரை முப்புர மாக்கிய வாணன் றமிழ்த்தஞ்சைபோல்
உம்மூர் வரத்துணிந் தேமன்பர் கூறுமவ் வூரெமக்கே.

### தலைவன் தலைவிமேற் குறிபிழைப்பேற்றல்.

துறந்தன ளாகியம் போருகந் தன்னையித் தொல்வரைமேற்
பிறந்தன ளாகும் பெருந்திரு மாதெனப் பேதையரிற்
சிறந்தன ளாதலிற செந்தமிழ் மாறன்றென் மாறையன்னாள்
மறந்தன ளாயினும் யாமொரு போது மறவலமே.

### தலைவி குறிமருண்டமை பாங்கிதலைவற்குணர்த்தல்.

தனையா வரும்புக ழுத்தரும் வாணன் றமிழ்த்தஞ்சைமான்
அனையா ளவள்குறி யாமிதென் றேகினை நல்லதொன்று
நினையா வருங்கங்கு லின்குறி யாவந்து நின்றதுநம்
வினையால் விளைந்ததென் றேவெறி தேயன்ப மீண்டனளே.

## பாங்கிதலைவன்மொழிக்கொடுமையைத்தலைவிக்குச் சொல்லல்.

பல்லியம் போனுரு மேறெங்கு மார்ப்பதும் பார்ப்பதின்றி
வல்லியம் போதகம் போர்பயில் கான்வந்து வாணன்றஞ்சை
அல்லியம் போருகை யன்னநின் பேரரு ளாசையினின்
றெல்லியம் போதுசென் றேனென்று கேள்வ ரியம்பினரே.

## தலைவி யென்பிழைப்பன்றேன நோதல்.

வியலூ ரெயிற்புற நொச்சியி னூழ்மலர் வீழ்தொறெண்ணி
மயலூர் மனத்தொடு வைகினன் யான்றஞ்சை வாணன்வெற்பர்
புயலூ ரிருட்கங்குல் வந்தவ மேநின்று போயினரென்
றயலூர் நகைக்குமென் னேயென்ன பாவங்கொ லாக்கினவே. ()

[வருந்தொழிற்கருமை.]

கசுo. தாயு நாயு மூருந் துஞ்சாமை
காவலர் கடுகுத லிலவு வெளிப்படுதல்
கூகை குழறுதல் கோழிகுரற் காட்டுதல்
ஆகிய வேழு மல்லுக்குறித் தலைவன்
வருந்தொழிற் கருமை பொருந்துதற் குரிய.

இ - ள். தாயதுஞ்சாமை முதலாக இங்கே சொல்லபபட்ட ஏழும் இரவுக்குறிக்கண் தலைமகன் வருநதொழிற் கருமை பொருந் துதற குரியனவாகும் எ - று.

வருந்தொழிற்கருமை - தலைவன் இடைவிடாது வருதற்கு உளதாம் தடை.

தாயதுஞ்சாமைக்குக் காரணம் மகளுக்கு அறிவும் ஆசாரமும் கறபித்திருத்தல் எனவும், நாயதுஞ்சாமைக்குக் காரணம் யாதே னும் ஒரு நிகழ்ச்சி எனவும், ஊர் துஞ்சாமைக்குக் காரணம் ஊர் கொண்ட பெருவிழா எனவும் கூறுவர். காவலர்கடுகுதல்-நகரிகாப் பாளர் விளக்கோடு விரைந்துவருதல். அல்லுக்குறி - இரவுக்குறி.

## உதாரணம்.

### தாய்துஞ்சாமை.

[இரவுக்குறியிடை வந்து நிற்குந்தலைவனைத் தாய் துயிலா
மையாற் சென்றெதிர்ப்படமாட்டாமற் சிறைப்புற
மாகத் தோழி கவன்று கூறுநிற்றல்.]

ஆழி யகன்புவி யுள்ளன யாவு மடங்கிநள்ளென்
றூழி முடிந்தன வோங்கிருள் யாமத்து மோடையினும்

தாழி யினும்போ தலர்தஞ்சை வாணன் றரியலர்போல்
தோழிநம் மன்னைகண் ணேதுயில் கோட றுறந்தனவே.

### நாய்துஞ்சாமை.

[யாதோ நிகழ்ந்ததுகண்டு நாய் ஓயாது குரைத்ததாக அதனால்
தலைவன் குறியிடைவருதற்கு இடையீடாயிற்றென்று
தோழி கவன்று கூறுநிற்றல் - முன்வருவனவற்றி
ற்கும் இவ்வாறுரைத்துக்கொள்க.]

தண்ணென் புனல்வையை சூழ்தஞ்சை வாணன் றரியலர்போற்
பெண்ணென் பிறவியும் பேறுடைத் தன்றிப பெரும்பதிநங்
கண்ணென் பவர்வரக் கங்குலின் ஞாளிக் கணங்குரைத்துத்
துண்ணென் கடுங்குரல் வாயன்னை துஞ்சினுந் துஞ்சிலவே.

### ஊர்துஞ்சாமை.

ஓங்கண்ணல் வெம்பக டுந்திவந் தோரை யுடன்றுதும்பைத்
தேங்கண்ணி சூடிச் செருவென்ற வாணன்றென் மாறைமினனே
தாங்கண் ணனையர் தமைப்பிரிந் தோநந் தனிமைகண்டோ
நாங்கண் ணுறங்கினு மோவுறங் கார்கண் ணகரவரே.

### காவலர்கடுகுதல்.

புயற்கண் ணியதலைப் பூகமென் பாளைப் புதுமதுநீர்
வயற்கண் ணிறைதஞ்சை வாணன்றென் மாறையில்வஞ்சியன்னாள்
கயற்கண் ணிணையஞ்சி நீர்மல்கக் காவலர் கைப்பறையின்
செயற்கண் ணிணையல்ல வோபடு கின்றன திண்கடிப்பே.

### நிலவுவெளிப்படுதல்.

தெண்பாற் கதிர்முத்த வெண்ணகை யாயதிகி ரிக்கிரிசூழ
மண்பாற் புகழ்வைத்த வாணன்றென் மாறைநமமன்னாபொற்றோ
பண்பாற் பரிக்கும் பரிவரு மாறென் பரந்தநிலா
வெண்பாற் கடலில்வை யம்பதி னாலு மிதக்கின்றவே.

### கூகைகுழறல்.

நம்பே றுடைமை யிருக்கின்ற வாகடன் ஞாலத்துள்ளோர்
தம்பே றெனவந்த சந்திர வாணன் றரியலர்போல்
வம்பேறு கொங்கை மயிலிய லுமஞ்ச மன்றமராக்
கொம்பேறி நள்ளிருள் வாய்க்குழ றுகின்ற கூகைகளே.

### கோழிதூரற்காட்டுதல்.

மன்பதை யுய்ய வருந்தஞ்சை வாணன்றென் மாறைவெற்பர்
கொன்பொதிவேல்வலங்கொண்டுவந்தாற்றங்கள்கோனடைந்தான்
என்பது தேறி யிடையிரு ளூரை யெழுப்பும் வெம்முட்
பொன்பொதி தாள்வளை வாயச்செய்ய சூட்டுவன் புள்ளினமே.

[இரவுக்குறியிடையீட்டுவிரி.]

கசுக. திரட்டி யிவ்வாறு செப்பிய வொன்பதிற்
றிரட்டியு மிரவுக்குறி யிடையீட்டு விரியே.

இ-ள். இங்ஙனமே வகையோடு சேர்த்துத் திரட்டிக் கூறிய பதினெட்டுக் கிளவியும் இரவுக்குறியிடையீட்டின் விரியாகும். (சரு)

---

### கச. வரைதல்வேட்கை.

கசுஉ. அச்ச முவர்த்த லாற்று மையென
மெச்சிய வரைதல் வேட்கைமூ வகைத்தே.

இ-ள். வியந்து கூறப்பட்ட வரைதல்வேட்கை அச்சமும், உவர்த்தலும், ஆற்றாமையும் என மூவகையுடையதாகும் எ-று.

உவர்த்தல் - வெறுத்தல். வரைதல்வேட்கை - வரைதலைவிரும்பிக்கூறல். (சசு)

[வரைதல்வேட்கைவிரி.]

கசுங. பருவரல வினவிய பாங்கிக் கிறைவி
அருமறை செவிலி யறிந்தமை கூறலுந்
தலைமகன் வருந்தொழிற் கருமை சாற்றலுந்
தலைமக னூர்க்குச் செலவொருப் படுதலும்
பாங்கி யிறைவனைப் பழித்தலும் பூங்கொடி
இறையோன் றன்னைநொந்தியற்படமொழிதலுங்
கனவுநலி வுரைத்தலுங் கவினழி வுரைத்தலுந்
தன்றுயர் தலைவற் குரைத்தல் வேண்டலுந்
துன்புறல் பாங்கி சொல்லெனச் சொல்லலும்
அலர்பார்த் துற்ற வச்சக் கிளவியும்
ஆறுபார்த் துற்ற வச்சக் கிளவியுங்
காம மிக்க கழிபடர் கிளவியுங்

தன்னுட் கையா றெய்திடு கிளவியும்
நெறிவிலக்கு வித்தலுங் குறிவிலக்கு வித்தலும்
வெறிவிலக்கு வித்தலும் பிறவிலக்கு வித்தலுங்
குரவரை வரைவெதிர் கொள்ளுவித் தலுமென
உரைபெற வருத்த வொன்பதிற் றிரட்டியும்
வரைதல் வேட்கை விரியெனப் படுமே.

இ - ள். பருவரல் வினவிய பாங்கிக் கிறைவி அருமறைசெ வியறிந்தமை கூறல் என்பது முதலாக இங்கே சொல்லப்பட்ட பதினெட்டும் வரைதல் வேட்கையின்விரி எனப்படும் எ - று.

பருவரல் - துன்பம். அருமறை - பிறராலறிதற்கரிய இரக சியம். வருந்தொழிற்கருமை - தலைவன் இடைவிடாது வருதற்கு ஆண்டு நிகழும் தீங்குகளாலாய அருமை. செலவொருப் படுதல் — செல்லுதற்குச் சம்மதித்தல். அலர் பார்த்துற்ற வச்சம் - அலரை நோக்குதலாலாகிய அச்சம். அலர் - பலரறிய நிகழ்த்துஞ்சொல். அலர்போல விரிதலிற் பலரறிய நிகழுஞ்சொல்லினை அலர் என் றும், அரும்புபோல விரியாது நிறறலிற் சிலரறிய நிகழுஞ்சொல் லினை அம்பல் என்றும் கூறுவர். அரும்பல் என்பது அம்பல் என மரீஇயிற்று. இவை யிரண்டும் களவினை வெளிப்படுத்துஞ் சொற கள். ஆறுபார்த்துற்ற வச்சம் - வரும் வழியினுள்ள தீங்குகளைச் சிந்தித்தலாலாகிய அச்சம். காமமிக்க கழிபடர் கிளவி - வேட்கை மிகுதலாற் பெரிதும் நினைந்து இரங்குஞ்சொல். காமம் - வேட்கை. கழி - உள்ளதுசிறத்தல். படர் - நினைத்தல். தன்னுட்கையா றெய்திடுகிளவி - தலைவி தன்னுள்ளத்திலே தோன்றிய துயரைப் பிறிதொன்றின்மேலிட்டுக் கூறுஞ் சொல். கையாறு - துயர். எய்த+இடு — எயதிடு; விகாரம். பிறவிலக்குவித்தல் - நொதும லர் வரைவு முதலிய பிறவற்றை நிகழாமல் விலக்குவித்தல்.

இங்கே கூறப்பட்டவைகளுள்ளே பருவரல் வினவிய பாங் கிக் கிறைவி யருமறை செவியறிந்தமை கூறல், அலர் பார்த துற்ற வச்சக்கிளவி, ஆறுபார்த்துற்ற வச்சக்கிளவி, நெறிவிலக்கு வித்தல், குறிவிலக்குவித்தல், வெறிவிலக்கு வித்தல், பிறவிலகை குவித்தல், குரவரைவரைவெதிர் கொள்ளுவித்தல் என்னும் எட் டும் அச்சத்திற்குரியன. தலைமகனூர்க்குச் செலவொருப்படுதல், பாங்கி யிறைவனைப் பழித்தல், பூங்கொடியிறைவனை நொந்தியற் பட மொழிதல், கவினழிவுரைத்தல், துன்புறல் பாங்கி சொல் லைச் சொல்லல் என்னும் ஐந்தும் உவர்த்தற்குரியன. வருந் தொழிற்கருமை சாற்றல், கனவு நலிவுரைத்தல், தன்றுயர் தலை

வற்குரைத்தல் வேண்டல், காமம் மிக்க கழிபடர்கிளவி, தனை னுட்கையா றெயதிடுகிளவி என்னும் ஐந்தும் ஆற்றுமைக்குரியன. இங்ஙனமன்றி இவைகளை வேறுபட வகுப்பாருமுளர்.

"பருவரல் வினவிய பாங்கிக்கு" என்றமையாற் பாங்கி தலைவியைப் பருவரல் வினவுதலும் அநுவாதமாகக் கொள்ளப்படும்.

### பாங்கி தலைமகளைப் பருவரல்வினவுதல்.

விண்டார் பதிகொண்ட வேற்படை வாணன் விரைகமழ்பூந்
தண்டா மரைமங்கை தங்கிய தஞ்சைநின் றுயர்தம்மோ
டுண்டா கியமுனி வோவன்றி யாயத்தொ டுற்றதொன்றோ
வண்டார் குழலிசொல் லாய்செல்வ தேதுன் மனத்திடையே.

### அருமறைசெவிலி யறிந்தமை கூறல்.

[தமது களவொழுக்கத்தைச் செவிலியறிந்தாளாகத் தலைமகள் கூறல்.]

மாணிக்க மென்கொம்ப ரென்சொல்லு கேன்றஞ்சை வாணன்வெ [றப்பார்
பேணிய புணர்ந்து பிரிந்துபின் றேன்றலும் பேதைமுகம்
பாணித்த லின்றி மதிகண்டு நாணிய பங்கயம்போல்
நாணிக் கவிழ்ந்தத னுலறிந் தாளன்னை நங்களவே.

### தலைமகன்வருந்தோழிற்கருமைசாற்றல்.

[இதுவுந் தலைவிகூற்று.]

ஓவலில் வாயன்னை ளுளியிவ் வூர்கண் ணுறங்கினுமூர்க்
காவலர் காய்வர் நிலாமதி காலுங் கடுங்குடிஞைச்
சேவலும் வாரண முந்தஞ்சை வாணனைச் சென்றிறைஞ்சா
மேவலர் போல்வெய்ய வாயடை யாவென் மெலிவறிந்தே.

### தலைவி தலைவனூர்க்குச் சேலவோருப்படுதல்.

நம்பா னலனுண்ட நம்பா தகர்தந் நகர்வினவித்
தம்பா லுடன்சென்று சார்குவ மோதரி யாரைவென்று
வம்பார் கழல்புனை வாணன்றென் மாறை வளரும்வஞ்சிக்
கொம்பா கியமருங் கிற்கரும் பாமொழிக் கோமளமே.

### பாங்கி தலைமகனைப் பழித்தல்.

[இடைவிடாது வராது தலைமகளுக்குத் துன்பமுறுத்துகின்றானென்று தோழி தலைவன்மேற் குற்றமேற்றல்.]

வறியார் புகழ்தஞ்சை வாணன்றென் மாறை மடந்தையன்னுள்
அறியா டுபர்முன் னறிந்தவர் தாமத னுலழலின்

பொறியா ருயிர்வெம் பணிமா மணியும் புறைதயிருள்கூர்
நெறியா ரருள்பெற நாநடு நாளிடை நீந்துதுமே.

### தலைமகளியற்படமொழிதல்.

[தோழி தலைவன்மேற் குற்றமேற்றினதைக் கேட்ட தலை
மகள் அவனிடத்துக் குற்றமில்லதாகக் கூறல்.
இயற்பட - தகுதிபொருந்த]

புணரா விரகமும் போகா விரவும் புணர்முலைமேல்
இணரார் பசப்பும் பிறவுமெல் லாமிருள் கூர்ந்தறல்போல்
வணரார் குழற்பிறை வாணுத லாயதஞ்சை வாணன்வெறபர்
உணரா திருபயது வேறொன்று மல்லநம் மூழ்வினையே.

### கனவுநலிவுரைத்தல்.

[இதுவுந் தலைவிகூற்று. கனவுநலிவு - கனவினாலழிதல்.]

சினைவாகை சூடிச் செருவென்ற வாணன்றென் மாறையினம்
மனவாழ் வினையவர் வந்துநல் யாம மணந்ததெல்லாம்
நனவா மெனவே மகிழ்ந்தேன் விழித்தொன்று நான்கண்டிலேன்
கனவாய் முடிந்தது பின்னையென் னேயென்ன கைதவமே.

### கவினழிவுரைத்தல்.

[இதுவுந்தலைவிகூற்று. கவினழிவு - அழகுகெடுதல்.]

வாளினு நீள்விழி வாணுத லாய்தஞ்சை வாணன்றெவ்வின்
நாளினு நாளு நலந்தொலை வேனகை யாரயில்வேல்
வேளினு மோர்நல்ல வெற்பனு நீயுமென் மேனியினுந்
தோளினு நோயறி யீரறி யாததென் றொல்வினையே.

### தன்றுயர்தலைவற்குரைத்தல்வேண்டல்.

[தலைவனுக்குத் தனது துயரை உரைக்கு மாறு
தலைவி தோழியை வேண்டல்.]

வரைப்பான் மதுரத் தமிழ்தெரி வாணன்றென் மாறைவையை
நுரைப்பான் முகந்தன்ன நுண்டுகி லாயிந்த நோயவர்க்கின்
றுரைப்பா ருளரே னுயிரெய்த லாநமக் கூர்திரைசூழ
தரைப்பால் வளரும் புகழெய்த லாமவர் தங்களுக்கே.

---

* இச்செய்யுள் சிலபிரதிகளில் இல்லை. ஈண்டு "இல்லாவ
ருந்துயில்" என்ற வேறொரு கவி இருக்கின்றது.

## துன்புறல்பாங்கிசொல்லெனச்சொல்லல்.

[யான் துன்புறுதலைப் பாங்கி நீ அவர்க்குரைத்தல்வேண்டு மென்ற தலைவியை நோக்கித் தோழி கூறல்.]

ஒல்லென வெய்து முறுதுயர் தாமு முணரும்வண்ணம்
சொல்லென நீயிது சொல்லியென் பேறுன் றுயரமெல்லாம்
வல்லென வேகொண்ட கொங்கையர்வேடஞ்சைவாணன்வெற்பில்
அல்லென வார்குழ லாயறி யாரல்ல ரன்பருமே.

## அலர்பார்த்துற்றவச்சக்கிளவி.

[இது தலைவிகூற்று.]

மலருந் தொடைவஞ்சி வஞ்சக மாதரு மாரனும்வாய
அலருந் தடங்கை யலருந் தொடாநிற்ப வஞ்சிநெஞ்சம்
பலரும் புகழ்தஞ்சை வாணர் பிரானைப பணியலர்போற்
புலரும் பெயருங்கண் ணீர்புல ராது புலரினுமே.

## ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி.

[இதுவுந் தலைவிகூற்று.]

அரியுங் கரியும் பொருநெறிக் கோர்துணை யாயவர்மேற்
சொரியுந் திவலை துடைக்கவென் றேருழை தோயநதுநஞ்சும்
வரியும் பயில்கண்ணி வாணன்றென் மாறைநம் மன்னர்வந்து
பிரியும் பொழுதெல்லி வாய்வினை யேன்மனம் பின்செல்வதே.

## காமமிக்ககழிபடர்கிளவி.

[இதுவுந் தலைவிகூற்று.]

மாதுற்ற மேனி வரையுற்ற வில்லிதில் லைநகர்சூழ்
போதுற்ற பூம்பொழில் காள்கழி காளெழிற் புள்ளினங்காள்
ஏதுற் றழிதியென் னீர்மன்னு மீர்ந்துறை வர்க்கிவளோ
தீதுறற தென்னுக்கென் னீரிது வோநன்மை செப்புமினே.

திருக்கோவை.

## இதுவுமது.

புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோற்
றுன்ப முழவாய் துயிலப் பெறுதியால்
இன்கள்வாய் நெய்தானீ யெய்துங் கனவினுள்
வன்கணர் கானல் வரக்கண் டறிதியோ.

சிலப்பதிகாரம்.

### தன்னுட்கையாறெய்திடுகிளவி.

விண்டலை யாவர்க்கும் வேந்தர்வண் டில்லைமெல் லங்கழிசூழ்
கண்டலை யேகரி யாக்கன்னிப் புன்னைக் கலந்தகள்வர்
கண்டிலை யேவரக் கங்குலெல் லாமங்குல் வாய்விளக்கும்
மண்டில மேபணி யாய்தமி யேற்கொரு வாசகமே. திருக்கோவை

### தலைமகள் நெறிவிலக்குவித்தல்.

[தலைமகன் இரவில் வந்தொழுகுதலை விலக்கெனத் தலைவி பாங்கியொடு கூறல். நெறி – வழி.]

என்று மினுமெனக் கன்புடை யாய்சென் றிரந்துகொண்டு
சான்றாண்மை யன்பர் தமக்குரை நீதஞ்சை காவலனைத்
தேனாறும் வரைத்தமிழ் சேர்த்திய வாணனைச் சேரலர்க்குந்
தோன்று விருங்கங்கு னீவரு மாறொழி தோன்றலென்றே.

### தலைமகள்குறிவிலக்குவித்தல்.

[தலைமகன் இரவுக்குறிக்கண் வருதலை விலக்கெனத் தலைவி தோழியொடு கூறல். குறி - இரவுக்குறி.]

வெற்றிய வாவிய வாணர் பிரான்றஞ்சை வெற்பகத்திப்
பெற்றிய சோலைப் பிறங்கிருள் வாரன்மின் பேதைபின்னும்
முற்றிய வேனற் படுகிள்ளை யோப்பு முறைமையளென்
றெற்றிய காதலி னாலிசைத் தாளன்னை யென்றுரையே.

### வெறிவிலக்குவித்தல்.

[அன்னை எனதுநோய் நீக்குவான் வெறியாடல் எடுத்துக்கொண்டாள் அதனை நீ விலக்குவாயாக எனத் தலைவி தோழியொடுகூறல்.]

மின்னு திடித்தென வன்னைகொண் டாள்வெறி விந்தைமங்கை
மன்னுண்மை மன்னிய வாணன்றென் மாறைவரையில்வண்டியாழ்
என்னு வசுண மிறைகொள்ளு நாட ரெனக்கருளால்
முன்னு எருளிய நோய்தணிப் பானின்று மொய்குழலே.

### பிறர்வரைவுவிலக்குவித்தல்.

[பிறர் என்னை வரைந்து கொள்ளவந்தது எனக்குப் பெருந் துன்பம் பயக்கின்றது அதனை நீ விலக்குவாயாக எனத் தலைவி தோழியொடுகூறல்.]

பொருபான் மதியினைப்போன் மருப்பியானையிற்பொன்னொடின்பந்
தருபாள் மொழிவஞ்சி சரரவந் தார்தஞ்சை வாணன்வெற்பின்

ஒருபா ைெறுமல ரென்னவெந் தீயுலை யுற்றசெவ்வேல்
இருபான் மருங்கினுங் கொண்டெறிந் தாலொத்த தென்செவிக்கே.

### தூரவரைவ்வரைவேதிர்கோள்ளுவித்தல்.

[தலைவன் வரைவுவேண்டிச் சான்றோரை வரவிடுப்பின்
அவரை நமர் எதிர்கொள்ளுமாறு செய்யென்று
தலைவி தோழியொடு கூறல்.]

கற்பழி யாமலுஞ் சந்திரவாணன் றமிழ்த்தஞ்சைநங்
கற்பழி யாமலுங் காரண மாகக் கயல்விழிநின்
சொற்பழி யார்நமர் சொல்லுவல் லேசென்று சொல்லலையேல்
இற்பழி யாம்வழி யாநம தாருயிர்க் கேதமுமே. (சஎ)

---

## கரு. வரைவுகடாதல்.

**கசஈச. பொய்த்தல் மறுத்தல் கழறன் மெய்த்தலென்**
**றொருநால் வகைத்தே வரைவு கடாதல்.**

இ - ள். வரைவுகடாதல் பொய்த்தல், மறுத்தல், கழறல், மெயத்தல் என்று சொல்லப்பட்ட நானகுவகையுடையதாகும எ - று.

பொய்த்தல் - பொய்யாயினகூறல். மெய்த்தல்-மெய்யாயின கூறல். வரைவுகடாதல் - பாங்கி தலைவனோடு வரைவுவினாதல். ()

### [வரைவுகடாதல்விரி.]

கசஈரு. **வினவிய செவிலிக்கு மறைத்தமைவிளம்பலும்**
**அலரறி வுறுத்தலுந் தாயறி வுரைத்தலும்**
**வெறியச் சுறுத்தலும் பிறர்வரை வுரைத்தலும்**
**வரைவெதிர்வுரைத்தலும்வரையுநாளுரைத்தலும்**
**அறிவறி வுறுத்தலுங் குறிபெயர்த் திடுதலும்**
**பகல்வரு வானை யிரவுவரு கென்றலும்**
**இரவு வருவானைப் பகல்வரு கென்றலும்**
**பகலினு மிரவினும் பயின்றுவரு கென்றலும்**
**பகலினு மிரவினு மகலிவ ணென்றலும்**
**உரவோ னூரு நாடு மூருங் குலனும்**
**மரபும் புகழும் வாய்மையுங் கூறலும்**
**ஆறு பார்த்துற்ற வச்சங் கூறலும்**
**ஆற்றாத் தன்மை யாற்றக் கூறலுங்**

கரவன்மிக வுரைத்தலுங் காமமிக வுரைத்தலுங்
கனவுநலி வுரைத்தலுங் கவினழி வுரைத்தலும்
எனமுறை நாடி யியம்பிய விருபதும்
வரைவு கடாதல் விரியெனப் படுமே.

இ - ள். வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல் முதலாக இங்கே சொல்லப்பட்ட இருபதும் வரைவுகடாதலின விரியாகும் எ - று.

இவற்றுள்ளே செவிலிக்கு மறைத்தமை விளம்பல் முதலிய ஐந்தும் பொய்த்தற்குரியன. குறிபெயர்த்திடுதல் முதலிய ஐந்தும மறுத்தற்குரியன. உரவோன் நாடும் ஊரும் குலனும் மரபும் புகழும் வாய்மையுங்கூறல் என்னும் ஒன்றும் கழறற்குரியது. வரைவெதிர்வுரைத்தல், வரையுநாளுரைத்தல், அறிவறிவுறுத்தல் என்னும் மூன்றும் ஆறுபார்த்துற்றவச்சங்கூறல் முதலாகிய ஆறும் மெய்த்தற்குரியன. இவையெல்லாந் தோழி கூற்று.

## உதாரணம்.

### வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல்.

[செவிலி களவொழுக்கத்தை ஐயுற்று வினவியதாகவும்
தான் அதனை அவளுக்கு மறைத்துரைத்ததாகவுந்
தோழி தலைவனொடுகூறி வரைவுகடாதல.]

தளரா விளமுலை தாங்ககில் லாது தளரிடைகண்
வளராத தென்கங்குல் வாரா யெனத்தஞ்சை வாணன்வெற்பா
விளரார் திருநுத லன்னைக்கொர் மாற்றம் விளம்பியுயநதேன
உளரா மவர்வலை யுட்பட்டு வாழ்த லுணர்ந்தருளே.

### அலரறிவுறுத்தல்.

[நின்களவொழுக்கம் அலராயிற்றென்று தோழி தலைவனொடு
கூறி வரைவுகடாதல். அலர் - பழிமொழி.]

மணிவரை மாளிகை மாறை வரோதயன் வாணன்வெற்பா
பணிமொழி யாளென்னுங் கொள்கொம்பு மூடிப் படர்ந்தயலார்
அணிமனை தோறுங் கொழுந்துவிட் டம்ப லரும்பிமண்மேற்
றணிவில தாகவிப் போதலர் பூத்தது நண்ணளியே.

## தாயறிவுரைத்தல்.

[நின்களவொழுக்கத்தைத் தாயறிந்தாளென்று தோழி தலைவனோடு கூறி வரைவுகடாதல்.]

திரையிற் பவளம் வடவா முகத்தெழுந் தீக்கொழுந்திற்
கரையிற் படருங் கடற்றுறை நாட கயற்கொடிபொன்
வரையிற் றிகழ்வித்த வாணன்றென் மாறை மலர்ந்த மௌவல்
விரையிற் களவையெல் லாமறிந் தாளன்னை மெய்யுறவே.

## வெறியச்சுறுத்தல்.

[தலைவியின்நோய் தணிக்கச் செவிலியும் நற்றாயும் வெறியாடலை விரும்பினர் என்று அச்சமுறுத்திக்கூறி வரைவுகடாதல்.]

மையுற்ற நீலக்கண் மாமங்கை கோன்றஞ்சை வாணன்வெறபில்
நெய்யுற்ற வேலன்ப நீதணி யாமையி னெஞ்சினுள்ளே
ஐயுற் றயர்வுற்றெம் மனையு மாயுமென் னாரணங்கின்
மெய்யுற்ற நோயதணிப் பான்வெறி யாடல் விரும்பினரே.

## பிறர்வரைவுரைத்தல்.

[தலைமகளைப் பிறர் வரையவிரும்பினரென்று கூறி வரைவுகடாதல்.]

வெடிக்கின்ற விப்பியு ணித்திலம் பைத்தலை வெம்பகுவாய்த்
துடிக்கின்ற திங்களிற் றேன்றுந துறைவசெஞ் சொற்புலவோர்
வடிக்கின்ற முத்தமிழ் வாணன்றென் மாறையெம் மான்மருங்கை
ஒடிக்கின்ற கொங்கைகண் டாலெவர் நெஞ்சுரு காதவரே.

## வரைவெதிர்வுரைத்தல்.

[தலைமகளை நீ வரையவேண்டி அந்தணரோடு வரின் நமர் நின்னை ஏற்றுக்கொள்வரென அவருடன்பாடுகூறி வரைவுகடாதல். எதிர்வு - எதிர்கொள்ளல்.]

குருதிகண் டாலன்ன காந்தளஞ் சாரற் குறிவதிதே
வருதிமண் டாய்தஞ்சை வாணன்வெற் பாவெங்கண் மாநகர்நீ
சுருதிகண் டாரொடுந் தோன்றிலெங் கேளிர்நின் சொல்லிகவார்
பருதிகண் டான்மல ராதொழி யாகயப் பங்கயமே.

### வரையுநாளுரைத்தல்.

[உலகத்து மணம்புரியுநாள் வந்ததென்று கூறி வரைவுகடாதல்.]

அலகம் பணகண் ணிவள் கொங்கை மென்சுணங் காகிவண்டு
பலகம் பலைசெய்யப் பூத்தன வேங்கைப் பனிவரைமேற்
றிலகம் பதித்தெனச் சேல்வைத்த வாணன்றென் மாறைமன்னன
உலகம் பயில்புகழ் போற்சிலம் பாமதி யூர்கொண்டதே.

### நல்.

[தலைமகளின் அறிவுடைமை கூறி வரைவுகடாதல்.]

வனநாண் முளரி முகைவென்று வாணன்றென் மாறைவெற்பிற்
கனநா ணணிந்துபொற் கச்சற வீசிக் கதித்தெழுந்த
தனநாணு நுண்ணிடைத் தையனல் லாள்பழி சாற்றுவல்யான
எனநாணி நின்பழி தான்மறைத் தாளன்ப வென்னையுமே.

### குறிபேயர்த்திடுதல்.

[இக்குறி ஏதமுடைத்து வேறிடஞ் செல்வாயாக எனத் தோழி குறிவிலக்கி வரைவு கடாதல்.]

ஊறோர் பவரிங் குலாவவுங் கூடும்வந் தொண்சிலம்பா
வேறோர் பொதும்பரிற் போய்விளை யாடுக வேற்படையான்
மாறோர் பகைவென்ற வாணன்றென் மாறையெம் மன்னுதவப்
பேறோர் வடிவுகொண் டாலன்ன நீயுமென் பேதையுமே.

### பகல்வருவானையிரவுவருகேன்றல்.

[வருகென்றல் - வருக என்றல்.]

முத்தணி நீல மணித்தகட் டுள்ளெங்கு மொய்கொளவே
வைத்தணி சேர வகுத்தது போற்றஞ்சை வாணன்வையைப்
பைத்தணி வார்திரை தோய்கருந் தாட்புன்னைப் பாசிலைவெண்
டொத்தணி பூந்துறை வாவரு வாயிரு ளேங்கிரவே.

### இரவுவருவானைப் பகல்வருகேன்றல்.

இழைவிளை யாடு மிளமுலை சாயற் கிடைந்தமஞ்ஞை
கழைவிளை யாடுங் கடிப்புனங் காத்துங் கலையகளா
குழைவிளை யாடு முயர்சிலம் பாவின்று முன்பொருட்டால்
மழைவிளை யாடு மதிற்றஞ்சை வாணன் மலயத்திலே.

### பகலினுமிரவினும் பயின்றுவருகேன்றல்.

[பயின்று - நெருங்கி.]

குரவுங் கணியும் விரவும்வெற் பாவெய்ய குஞ்சரமேல்
வரவுந தியதெவ்வை மாற்றிய வாணன்றென் மாறைமின்னும்
அரவும் பணியு நுடங்கிடை யாற்றல ளாற்பகலும்
இரவுங் குறிவயி னீவரல் வேண்டு மிவள்பொருட்டே.

### பகலினுமிரவினு மகலிவணென்றல்.

[பகற்குறியும் இரவுக்குறியும் விலக்கி வரைவுகடாதல்.]

தாவாத செல்வந் தருந்தஞ்சை வாணன் றடஞ்சிலம்பா
நீவாரல் சார னிலவல ராம்பக னீடிருளார்
மாவா னிலவு நிலமங்கை வார்குழன் மல்லிகைபோல்
ஒவா திரவெறிக் குஞ்சோலை நீழலி னூடுவந்தே.

### தலைமகனுடுமுதலியன கூறல்.

[இக்களவொழுக்கம் நின்குலங் குணங்கட்கொவ்வா
தென்று கூறி வரைவுகடாதல்.]

தலத்திற்கு மாறைக்கு மன்னவன் வாணன் றமிழ்த்தஞ்சைசூழ்
நிலத்திறகு மாமணி யாகிய நாட்டு நெடும்பதிக்குங்
குலத்திற்கு மாசில் குடிமைக்குஞ் சீர்மைக்குங்கோதின்மெய்ம்மை
நலத்திறகு மாவதன் றுல்வரை யாது நடப்பதுவே.

### ஆறுபார்த்துற்றவச்சங்கூறல்.

[தலைவன் வரும்வழியிலுள்ள தீங்குகளை எண்ணுவதனு
லுண்டாகும் அச்சத்தைக் கூறி வரைவுகடாதல்.]

புராந்தகர் செஞ்சடை வெண்பிறை போனுதற் புள்ளிமிழ்பூங்
குராநதொடை மென்குழற் கொம்பினைவேண்டிக்கொடிமுல்லைநீள்
பராந்தழு வுந்தஞ்சை வாணன்வெற் பாவல்சி தேர்ந்திலஞ்சிக்
கராநதிரி கல்லதர் வாயெல்லி நீவரல் கற்பலவே.

### ஆற்றாத்தன்மை யாற்றக்கூறல்.

[தலைவியினது ஆற்றுமையை நீ விரைந்து ஆற்றவேண்டு
மென்று கூறி வரைவுகடாதல்.]

கலங்குந தெள்யுங கனமெலழ மூச்செறி யுங்கண்ணினீர்
மலங்கும் பொலந்தொடி சோரமெய் சோரு மறஞ்செய்கொலை
விலங்கும் படிறுசெ யாக்குன்ற நாட விரைந்தளிப்பாய்
அலங்குங் கடும்பரித் தேர்வாணன் மாறை யணங்கினையே.

### காவன்மிகவுரைத்தல்.

[களவொழுக்கம் நிகழ்தற்கு இடையீடாயுள்ள காவலின் மிகுதியைக் கூறி வரைவுகடாதல்.]

நஞ்சா ரரவந் திரிதரு கானடு நாளிரவில்
அஞ்சாது செங்கை யயில்விளக் காவணங் கின்பொருட்டால்
மஞ்சார் மதிற்றஞ்சை வாணன்வெற் பாவரல் வன்சொலன்னை
துஞ்சாள் கடுந்துடிக் கைநகர் காவலர் துஞ்சினுமே.

### காமமிகவுரைத்தல்.

[தலைமகளது வேட்கை மிகுதிகூறி வரைவுகடாதல்.]

தென்னாக வண்டமிழ் வாணன்றென் மாறைச் செருந்தியுடன்
புன்னாக முங்கமழ் பூந்துறை வாசுரர் போற்றமிர்தம்
பின்னாக முன்வந்த பேதைதன் காமப் பெருங்கடற்கு
நின்னாக மன்றியுண் டோபுணை யாவது நீந்துதற்கே.

### கனவுநலிவுரைத்தல்.

[தலைமகள் கனவுகண்டு வருந்துவது கூறி வரைவுகடாதல்.]

மாறாத தெவ்வென்ற வாணன்றென் மாறை வளநகர்போற்
றூறாக மெல்லியற் புல்லினை யாகவப் பொய்யைமெய்யாப்
பேறா மகிழ்ந்து பெருந்துயி லேற்றவள் பின்னைநினைக்
காணாள் கலங்கின ளாற்கலங் காமனக் காவலனே.

### கவினழிவுரைத்தல்.

[தலைமகள் தலைமகன்பொருட்டுக் கவினழிந்தமை கூறி வரைவுகடாதல்.]

வரேற்ற கொங்கை யிளங்கொடி மாந்தளி ரேய்ந்தவண்ணங்
காரேற்ற கங்குலிற் பீரலர் போன்றது காவியுண்கண்
வாரேற்ற பைங்கழல் வாணன்றென் மாறையில் வாவியின்கண்
நீரேற்ற செங்கழு நீர்மலர் போன்றது நின்பொருட்டே.

---

## ௧௫. ஒருவழித்தணத்தல்.

௧௫௫. செலவறி வுறுத்தல் செலவுடன் படாமை
செலவுடன் படுத்தல் செலவுடன் படுதல்
சென்றுழிக் கலங்க றேற்றியாற்று வித்தல்
வந்துழி நொந்துரை யென்றெழு வகைத்தே
ஒன்றக் கூறிய வொருவழித் தணத்தல்.

இ - ள். செலவறிவுறுத்தல் முதலியனவாக ஒருவழித்தணத்தல் ஏழுவகையுடையதாகும் எ - று. (௩௦)

[ஒருவழித்தணத்தலின்விரி.]

கசுஎ. தன்பதிக் ககற்சி தலைவன் சாற்றலும்
மென்சொற் பாங்கி விலக்கலுந் தலைவன்
நீங்கல் வேண்டலும் பாங்கி விடுத்தலுந்
தலைவிக் கவன்செல வுணர்த்தலுந் தலைவி
நெஞ்சொடு புலத்தலுஞ் சென்றோ னீடலிற்
காமம் மிக்க கழிபடர் கிளவியுங்
கோற்றொடிப் பாங்கி யாற்றுவித் தலுமவன்
வந்தமை யுரைத்தலும் வந்தோன் றன்னொடு
நொந்து வினாதலும் வெந்திறல் வேலோன்
பாங்கியொடு நொந்து வினாதலும் பாங்கி
இறைவியை யாற்றுவித் திருந்த வருமை
கூறலு மென்னு மாறிரு கிளவியும்
ஒருவழித் தணத்தலின் விரியெனப் படுமே.

இ - ள். தன்பதிக்ககற்சி தலைவன்சாற்றல் முதலாக இங்கே கூறிய பன்னிருகிளவிகளும் ஒருவழித்தணத்தலின் விரியாகும் எ - று.

இவற்றுள்ளே தன்பதிக்ககற்சி தலைவன்சாற்றல், பாங்கி தலைவிக்கு அவன் செலவுணர்த்தல் என்னும் இரண்டும் செலவறிவுறுத்தற்குரியன. தலைமகனைப பாங்கி விலக்கல் என்னும் ஒன்றும் செலவுடன் படாமைக்குரியது. நீங்கல்வேண்டல் என்னும் ஒன்றும செலவுடன் படுத்தற்குரியது. பாங்கிவிடுத்தல் செலவுடன்படுதற்குரியது. தலைவி நெஞ்சொடுபுலத்தல், காமம்மிக்க கழிபடர் கிளவி என்னும் இரண்டும் சென்றுழிக் கலங்கலுக்குரியன. பாங்கியாற்றுவித்தல், வந்தமையுரைத்தல் என்னும் இரணடும் தேற்றியாற்றுவிததற்குரியன. வநதோன்றன்னொடு நொந்து வினவுதல் முதலிய மூன்றும் வநதுழி நொந்துரைத்தற்குரியன.

உதாரணம்.

தன்பதிக்ககற்சி தலைவன்சாற்றல்.

[அகற்சி - பிரிதல்.]

திரைகேக தகைமணங் கூடுமெம் பாடியிற் சென்றுவந்தியான்
வரைகேன் வருந்துணை வல்லியை நீதஞ்சை வாணன்செவ்வேல்

புரைசேழ் மதர்விழிக் கோங்கரும் பேர்முலைப் பூசல்வண்டு
நிரைசேச வஞ்சியஞ் சேலென்று தேற்றுத னின்கடனே.

**பாங்கிதலைவனைச்செலவுவிலக்கல்.**

பறந்தாங் கிவர்பரித் தேர்கட வேலுன் பதியடைந்தான்
மறந்தாங் கமையவும் வல்லையன் பாதஞ்சை வாணனென்னோர்
நிறந்தாங் கிவர்கணை போலுண்கண் மாமுகி னீர்மைகொண்டு
புறந்தாழ் கருங்குழல் வெண்முத்த வாணகைப் பொன்னினையே.

**தலைவன் நீங்கல்வேண்டல்.**

[தலைவன் பின்னரும் தன்பதிக்கேகல்வேண்டுமென்று
நீங்குதலை வேண்டிக்கூறல்.]

ஆறையும் பொறையும் மணர்தவெங் கானத் தணங்கையில்லைத்
திறையும் பிரிவதற் கெண்ணுகி லேனெண்ண லார்வரைமேல்
மறையும் படிவென்ற சந்திர வாணன்றென் மாறையில்வண்
டுறையுங் குழலிசென் றேவரல் வேண்டுமெம் மூரகத்தே.

**தலைமகனைப்பாங்கிவிடுத்தல்.**

[தலைமகன் தனதூர்க்குச் செல்லுதற்குத் தோழி உடன்படல்.]

இலலத் துறையு மிவள்பொருட் டாலுமக் கியானுமொன்று
சொல்லத் தவிர்கிலன் சூழ்கழ லீர்சுடர் தோய்புரிசை
யல்லத் தமர்வென்ற வாணன்றென் மாறையில் வந்துவநது
செல்லத் திருவுளம் வைத்தகல் வீர்நும் திருநகர்க்கே.

**தலைவிக்கவன்செலவுணர்த்தல்.**

[தலைவன் தனதூர்க்குச் சென்றமையைத்
தோழி தலைவிக்குரைத்தல்.]

நிலவேய் தரள நிரைத்தன்ன வாணகை நீலநிறக்
குலவேய நிகர்பொற் றொடிநெடுங் தோளி குறுகிவரச்
செலவே கருதினர் செந்தமிழ் வாணன் செழுங்கமலத்
தலவே தியன்பெறு நாள்பெற்று வாழ்பவன் றஞ்சையிலே.

**தலைவிநெஞ்சொடுபுலத்தல்.**

[தலைவன் தனதூர்க்குச் சென்றமை கேட்டுத் தலைவி
தனது நெஞ்சொடு நொந்துகூறல்.]

குளித்தா ரிளங்கொங்கை யாவியி லாவி குளிர்ப்பநம்மை
அளித்தா ரளித்தக லத்தணைத் தாரன் றணங்கின்முன்னே
தெளித்தார் செழுந்தஞ்சை வாணனன் னூரினஞ் சிந்தைநைய
ஒளித்தா ரவரிங்ங னேநன்று நன்றிவ் வுலகியலே.

## காமம்மிக்ககழிபடர்கிளவி.

[இது தலைவிகூற்று.]

மயிலாடு தண்டலை மாறை வரோதயன் வாணனென்னார்க்
கெயிலா கியகடற் கானலஞ் சேர்ப்பற் கிடையிருள்யான்
துயிலா நிலையொன் றுஞ் சொல்லாய துணையுடன் சூழ்திரைத்தேன
பயிலா மலரணை மேற்றுயி லாநிற்றி பாலன்னமே.

## தலைவியைப் பாங்கி யாற்றுவித்தல்.

[தலைவன் வரவு நீட்டித்ததனால் வேட்கை மிகுந்து வருந்திய
தலைவியைத் தோழி ஆற்றுவித்தல்.]

ஆடுகம் வாரம் மகன்றவ ரூரக லாப்புதுநீர்
பாடுகம் வாபொற் பசலைதந் தார்திறம் பாங்கினெல்லாம்
தேடுகம் வாதஞ்சை வாணனன் னாட்டன்பர் தேர்வழிநாம்
சூடுகம் வாகவ லாதவர் கானற் றுறைமலரே.

## தலைமகன்வந்தமையுரைத்தல்.

[தனதூரிற்ககன்ற தலைவன் மீண்டுவந்தமையைத்
தோழி தலைவிக்குரைத்தல்.]

பண்ணுங் குழலும் பழித்தசொற் பாவை பரியலெல்லா
மண்ணும் புகழ்தஞ்சை வாணனென் னாரென மைக்குவளைக்
கண்ணுங் கனையிருட் கங்குலு மாரன் கணைகள்பட்ட
புண்ணும் புலரவந் தார்தம தூர்வயிற் போனவரே.

## வந்தோன்றன்னொடுநொந்துவினாதல்.

[ஊர்க்குச்சென்று மீண்டுவந்த தலைவனைத் தோழி நீ நும்மூர்க்குச்
சென்றபின் எம்மூரை நினைத்து வருதலை மறந்தனை
என்று துயருற்று வினாதல்.]

ஒருதலைக் கெய்திய கல்லதர்க் குச்செல்ல வோருயிர்த்தாய்
இருதலைப் புள்ளி னியைந்தநுங் கேண்மையை யெண்ணியெம்மூர்
வருதலைக் கொண்க நினைந்திலை வாணன்றென் மாறைவண்டு
பொருதலைக் குங்குழ லாளழ நீகண்டு போயபின்னே.

## தலைவன் பாங்கியோடுநொந்துவினாதல்.

[நான் ஊர்க்குச் சென்றிருந்தபோது நீவிர் எவ்வண்ணம
ஆற்றியிருந்தீரென்று தலைவன் தோழியை வினாதல்.]

ஐவா யரவுற்ற தென்னவின் னாவிட ராற்றியென்போல்
எவ்வா றிருந்திர்நீ ரெல்வளை யீரெதிர்ந் தாரைவென்று

மைவா ரணங்கொண்ட வாணன்றென் மாறை மருவலர்போல்
ஒவ்வா வலரையுங் கேட்டிரு வீரு மொருதனியே.

தலைவியையாற்றுவித்திருந்த அருமைகூறல்.

[இது தோழி கூற்று.]

இவளா ருயிர்புரந் தியானிருந தேன்செக்க ரிந்துவென்னப்
பவளா டவியிற் பயினித திலம்பங் கயங்குவியத்
தவளா தவஞ்சொரி தண்டுறை வாதஞ்சை வாணன்றெவ்விற்
றுவளாம லாற்றுவி யென்றன்று நீசொன்ன சொன்னினைந்தே. ( )

## ௧எ. வரைவிடைவைத்துப்பொருள்வயிற்பிரிவு.

௧௬அ. பிரிவறி வுறுத்தல் பிரிவுடன் படாமை
பிரிவுடன் படுத்தல பிரிவுடன் படுதல்
பிரிவுழிக் கலங்கல் வன்புறை வன்பொறை
வரும்வழிக் கலங்கல் வந்துழி மகிழ்ச்சியென்
றொருமையிற் கூறிய வொன்பது வகைத்தே
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவே.

இ - ள். வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிவு பிரிவறி வுறுத்தல் முதலிய ஒன்பது வகையினையுடைத்தாகும் எ - று.

வன்புறை – வலிமையையுறுத்தல். வன்பொறை - வலியா யானபொறை பொறை - ஆற்றுதல். ஒருமையிற்கூறிய - ஒருமை பற்றிச்சொல்லிய. (௫௨)

[வரைபொருட்பிரிவின்விரி.]

௧௬௯. என்பொருட் பிரிவுணர்த்தேந் திழைக்கென்றலும்
நின்பொருட் பிரிவுரை நீயவட் கென்றலும்
நீடே னென்றவ னீங்கலும் பாங்கி
ஓடரிக் கண்ணிக் கவன்செல வுரைத்தலும்
பூங்குழை யிரங்கலும் பாங்கி கொடுஞ்சொற்
சொல்லலுந் தலைவி கொடுஞ்சொற் சொல்லலும்
வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தலும்
பருவங் கண்டு பெருமகள் புலம்பலும்
இருளைவம் பென்றலு மிறைமகன் மறுத்தலும்
அவர்தூ தாகிவந் தடைந்ததிப் பொழுதெனத்
துணைவி சாற்றலும் பிணைவிழி யாற்றலும்

அவனவட் புலம்பலு மவன்வரு காலைப்
பாகன் றன்னொடு மேகந் தன்னொடுஞ்
சோகங் கொண்டவன் சொல்லலும் பாங்கி
வலம்புரி கேட்டவன் வரவறி வுறுத்தலும்
வலம்புரி கிழத்தி வாழ்த்தலும் வந்துழி
நினைத்தமை வினவலு நினைத்தமை செப்பலும்
அனைத்தகை யவளை யாற்றுவித் திருந்தமை
பாங்கிகூ றலுமெனு மாங்கெழு மூன்றும்
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவின்
விரியென மொழிந்தனர் தெரிபுணர்ந் தோரே.

இ - ள். என்பொருட்பிரிவுணர்த் தேந்திழைக் கென்றல் முதலிய இருபத்தொன்றும் வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிவின் விரி என்று தெரிந்துணர்ந்தோர் சொல்லினர் எ - று.

இவற்றுள்ளே என்பொருட்பிரிவுணர்த் தேந்திழைக் கென்றல் பிரிவறிவுறுத்தற்குரியது. நின்பொருட்பிரிவுரை நீயவட் கென்றல் பிரிவுடன்படாமைக்குரியது. நீடேனென்றவனீங்கல் பிரிவுடன்படுத்தற்குரியது. பாங்கி தலைவிக்கவன்செலவுரைத்தல் பிரிவுடன்படுதற்குரியது. தலைமகளிரங்கல், தலைவிகொடுஞ்சொற் சொல்லல், பருவங்கண்டு தலைவிபுலம்பல், மறுத்தல், சேணிடைப் புலம்பல் என்னும் ஐந்தும் பிரிவுழிக்கலங்கற்குரியன. பாங்கிகொடுஞ்சொற்சொல்லல், வருகுவர்மீண்டெனப் பாங்கி வலித்தல், இகுளைவம்பென்றல், அவர் தூதாகி வந்ததிப்பொழுதென்றல் என்னும் நான்கும் வன்புறைக்குரியன. தலைமகளாற்றல் வன்பொறைக்குரியது. தலைமகன் மீண்டு வருங்காலைப் பாகனொடு சொல்லல், மேகமொடு சொல்லல் என்னும் இரண்டும் வரும்வழிக்கலங்கற்குரியன. வலம்புரிகேட்டவன் வரவறிவுறுத்தல் முதலிய ஐந்தும் வந்துழி மகிழ்ச்சிக்குரியன.

## உதாரணம்.

## என்பொருட்பிரிவுணர்த்தேந்திழைக்கென்றல்.

[யான்போய் நின்றோழி முலை விலைக்குவேண்டிய பொருள்தேடிக்
கொண்டு வருவேன், நீசென்று அவளுக்கு என்பிரிவை
உணர்த்துவாயாக எனத் தலைவன் தான்வரை
பொருட்குப் பிரிகின்றமை கூறுநிற்றல்.]

கழைபோல் வளர்நெற் கவின்பெற வாரி கவர்ந்துவரும்
மழைபோல் வருகுவன் வன்சுரம்போய்த்தஞ்சைவாணன்வெற்பில்

இழைபோ லிடையாண் முலேவிலைக் காவன யாவையுங்கொண்
டிழைபோ லரிநெடுங் கண்மயி லேசென் றுணர்த்திதுவே.

### நின்போநட்பிரிவுரை நீயவட்கென்றல்.

[பிரிவுணர்த்தக் கூறினதலைமகனுக்கு அவள் திருவுளத்துக்குப்
பொருந்த நின்பிரிவை உணர்த்த என்னால் முடியாது; அவ
வாறு கூறவல்லையேல் நீயே நின்பிரிவை அவளுக்குச்
சொல்லிப்போவாயாக என அவன் விரைந்து
வருவது காரணமாகத் தோழி தலைமக
ளது பிரிவாற்றாமை கூறல்.]

வசையும் புகழுநின் மேலன வாந்தஞ்சை வாணன்வெறபா
மிசையுங் கரும்பினில் வேய்புவைத் தாலன்ன வேட்கையெல்லாத்
திசையும் பரவுந் திருவனை யாடன் றிருவுளத்துக்
கிசையும் படிவல்லை யேற்சொல்லி நீபின னெழுந்தருளே.

### நீடேனென்றவனீங்கல்.

[யான் காலம்நீட்டியாது விரைந்து வருவேன்; நீ சென்று
அவளை ஆற்றியிரு என்று தலைவன் தோழிக்குக்
கூறிப் பிரிதல்.]

காலைப் பொழுது கடும்பரித் தேர்பண்ணிக் கானகம்போய்
மாலைப் பொழுது வருகுவல் யான்றஞ்சை வாணனன்னாட்
டாலைப் பழன மணிந்தவெம் மூர்நும் மகங்குளிரச்
சோலைப் பயில்குயில் போன்மொழி யாயென் றுணிவிதுவே.

### பாங்கிதலைவிக்கவன்செல வுரைத்தல்.

[வரைதற்குப் பொருள்தேடல் காரணமாகப் பிரிந்தானென்று
தோழி தலைவிக்குத் தலைவன் பிரிந்தமை கூறல்.]

வில்லேய் குறும்பு மிறும்புமெவ் வாயும் விராயவெவ்வாயக்
கல்லேய கவலைக் கடங்கடந் தார்நமர் காயந்தெதிர்ந்தார்
செல்லேய் களிற்றுச் செருவென்ற வாணன்றென் மாறையினின்
வல்லேய முலைவிலை தான்றந்து நாளை மணம்பெறவே.

### பூங்குழையிரங்கல்.

[தலைவன் பிரிந்தமை கூறக்கேட்ட தலைவி முன் என்னைப்
பிரியேனென்று கூறிய உரையை மறந்தா
ரென்று இரங்கிக் கூறல்.]

இப்பே ருவகை யினிப்பிரி யேனென்று மென்னச் சொன்ன
அப்பே ருரைபழு தாமென்ன வேயர வஞ்சுமந்த

மைப்பே ரலைகடல் வையகந் தாங்கிய வாணன் றஞ்சைச்
செப்பே ரிளங்கொங்கை மங்கைசெப் பாதன்பர் சென்றதுவே.

## பாங்கிகொடுஞ்சொற்சொல்லல்.

[தலைமகளிரங்குவது கண்டதோழி நின்னை வரைதல் காரண
மாகவன்றே தலைவர் பிரிந்தார்; அதற்கு நீ வருந்துவ
தென் என்று தலைமகளைக் கழறல்.]

ஆரணத் தானருள் பாரளித் தானடங் காதவரை
வாரணத் தால்வென்ற வாணன்றென் மாறை வயங்கொளிசேர்
பூரணத் தார்மதி போன்முகத் தாயென் புலம்புதிநின்
காரணத் தாலல்ல வோபிரிந் தாரின்று காதலரே.

## தலைவிகொடுஞ்சொற்சொல்லல்.

[தோழி கழறினதைக் கேட்ட தலைவி அதனை ஊரின்மேல்
வைத்துக்கூறி மனமிரங்கல்.]

மண்டூர் திரைவையை சூழ்தஞ்சை வாணற்கு வண்புவியுஞ்
செண்டுங் கொடுத்தகல் செம்பியர் போலன்பர் சென்றுழிமுள்
இண்டுங் கழையும் பயிலும்வெங் கானியல் கேட்டுமிந்நோய
கண்டுங் கலங்கல்செல் லாதிந்த வூரெற் கழறனன்றே.

## வருவர்மீண்டெனப்பாங்கிவலித்தல்.

[தலைமகளது வருத்தங்கண்ட தோழி தலைவன் சென்ற
காட்டில் அவற்கு அன்புறுத்தத்தக்கன உளவாக
லின் அவற்றைக்கண்டு மீண்டு வருவனெனத்
தலைவிக்குத் துணிவுதோன்றக் கூறல்.]

தேர்த்தானை வாணன்றென் மாறைமின் னேயஞ்சல் செம்புருக்கி
வார்த்தா லனைய வழிநெடும் பாலை மடப்பெடைநோய
பார்த்தா தவந்தணி பாதவ மின்மையிற் பைஞ்சிறகாற்
போர்த்தாலு மஞ்ஞைகண் டும்போவ ரோநம் புரவலரே.

## பருவங்கண்டுபெருமகள் புலம்பல்.

[தலைமகன் மீண்டு வருதற்குக்குறித்த காலம் வந்துவிட்டது;
அவன் வரவில்லை என்று தலைவி புலம்பல்.]

மிகவும் பரந்த கரியகண் ணீர்செங்கை வெள்வளைபோல்
உகவுந் துறந்தவ ருன்னல ராலுறை கார்பொழிய
மகவுந் துணையுங் கலைதழு வுந்தஞ்சை வாணன்வெற்பில்
அகவும் பெடைமயி லுந்தமி யேனெங்ங னாற்றுவனே.

### இதுவௌவம்பென்றல்.

[காலங்கண்டு புலம்பிய தலைவிக்குப் பாங்கி இது காலம் அன்று வம்பென்று அவளை ஆற்றுவித்தல்காரணமாகக் காலமறைத்துக் கூறுதல். வம்பு - நிலையில்லது.]

தனஞ்சேர்ந்த வஞ்சிநின் சாயல்கண் டஞ்சித் தனித்தனிபோய
வனஞ்சேர்ந் தயராத மயில்களெல் லாநதஞ்சை வாணன்வெற்பிற
கனஞ்சேர்ந் தலர்துளி காலுமுன் னேவம்பு காலுமெனனு
இனஞ்சேர்ந் தகவின நாந்தனி வாடி யிருந்தல்கண்டே.

### தலைவிமறுத்தல்.

[காலம் மறைத்துரைத்த தோழியை இது வம்பன்று மெய்யான காலமே என்று தலைவி மறுத்துரைத்தல்.]

வாவித் தளையன்ன மேதஞ்சை வாணன் வரையகத்தெல்
பாவித் தனிநெஞ்சு பாரத்தஞ்சு மேகண் பயின்றகண்ணா
ஆவித் தளமயில் கோபங்கொள் ளாவரைத் தோன்றிடைச்சோ
தாவித் தகந்தள ரும்மணி காலு மராவென்னவே.

### அவர்தூதாகிவந்தடைந்ததிப்பொழுதெனத்துணைவிசாற்றல்.

[தலைவி மறுத்துரைத்ததுகேட்ட தோழி இக்காலம் வம்பன்றாயின், தலைவன்விடுத்த தூதாய அவன் வரவுணர்த்த முன்வந்தது, இனி அவன் வருவனென்று வற்புறுத்திக்கூறல்.]

இன்னே வருவர்நின காதல ரேதில ரேங்கவினிக்
கொன்னே யிரங்கி வருநதல்கண் டாயகொற்ற நேமிவிநதை
மன்னே யெனவநத வாணன்றென் மாறை வரவுணாதத
முன்னே நடநதன காண்கடுங் கால முகிலினமே.

### இதுவுமது.

கடுங்கதிர் நல்கூரக் கார்செல்வ மெய்த
நெடுங்காடு நேர்சினை யீனக்—கொடுங்குழாய
இன்னே வருவர் நமரென் றெழில்வான
மின்னு மவர்தூ துரைத்து. **கார்நாற்பது.**

### தலைமகளாற்றல்.

[தோழி வற்புறுத்திக் கூறக்கேட்ட தலைமகள் தலைவன் வருவானென்று ஆற்றி நெஞ்சொடுகூறல்.]

இன்புற்ற காலத் திருவர்க்கு மொன்றுயி ரென்றுசொன்னூர்
அன்புற்ற காதல ராதலி னுலகன் றுரெனநாங்

துன்புற்ற காலத் தவரு முருரல்லர் தோழிசொல்லும்
வன்புறற காரளிக் குரதஞ்சை வாணன்றென் மாறையிலே.

## அவனவட்புலம்பல்.

[தலைமகனை பிரிந்து சென்றவிடத்துத் தனித்துறையமாட்டாளாய்த்
தலைவியை நினைத்துப்புலம்பல்.]

வளைபடு முத்தம் பாதவர் பகருங்
கடல்கெழு கொண்கன காதன் மடமகள்
கெடலருந துயர நலகிப
படலின் பாயல் வவ்வி யோளே. ஐங்குறுநூறு.

## தலைவன்பாகனொடுசொல்லல்.

[பொருள்செய்து மீண்டுவருந தலைமகன் தலைமகளைக் கடிதிற்
சென்று கூடல்வேண்டித் தேரை விரைந்து
கடாவுமாறு கூறல்.]

வன்மா முடுக வலவதிண் டேரினி வாணன்றஞ்சைக்
கென்மா னுறுநெஞ்சின் முன்செல நாகிள வேறுபுல்லிப்
பொனமா னணியும் பிரிநதிருந தாரும் புலம்பமன்றிற
சென்மாலை யநதிகண் டாறறரி யாளென் றிருநதிழையே.

## தலைமகன்மேகத்தொடுசொல்லல்.

[மீண்டுவருந் தலைமகன் மேகத்தை நோக்கித்தன்
தூதாயச்சென்று தலைவிக்குத் தன்வர
வுணர்த்துமாறு வேண்டல்.]

வேண்டிய பொருளைத் தரும்பொருட்போயமுற்றிமீண்டவென்றேர்
தூண்டிய பரிமுன றுனைமுகில் சாள்சென்று சொல்லுமிது
ஈண்டுங் கொடிமதில் சூழ்தஞ்சை வாணனைச் சேரலர்போல்
[illegible] பசலைமெய் போர்த்திருப பார்தமக் கென்வரவே.

## [illegible]பாங்கிவலம்புரிகேட்டு அவன்வரவறிவுறுத்தல்.

[மீண்டுவருந் தலைமகனது வலம்புரியோசை கேட்ட தோழி
உவகையொடுசென்று தலைமகளுக் கவன்வரவறி
வுறுத்துதல். வலம்புரி - சங்கு.]

பொருகின்ற செங்கயல் போல்விழி யாய்பண்டு போயநின்கைக்
குருகின்ற ணிந்திறை கொள்வது காண்கநங் கொண்கர்பொற்றேர்
தருகின்ற சங்கந் தருவன்ன வாணன் றமிழ்த்தஞ்சைவாய
வருகின்ற தென்றுமுன் னேயோகை கூறும் வலம்புரியே.

### வலம்புரிகிழத்திவாழ்த்தல்.

[தலைமகனது வரவுணர்த்திய வலம்புரியைத் தலைவி வாழ்த்தல்.]

*மால்வண் டெனமன்னி வாணன்றென் மாறைமன் னனபுகழே*
*போல்வண் டமிழ்மன்னர் போற்ற விளங்குக பொன்கொழிக்குங்*
*கால்வண்டல் வையைக் கரைமல்கு மல்லிகைக் கான்முகையின*
*மேல்வண் டிருந்தது போற்கரு மாமுக வெண்சங்கமே.*

### வந்துழிநினைத்தமைவினாதல்.

[மீண்டுவந்த தலைமகனை நீர் பொருள்காரணமாகப்
பிரிந்து சென்றவிடத்தில் எம்மை நினைந்தும்
அறிதிரோ என்று தோழி வினாவல்.]

*நினையீர் பொருட்குப் பிரிந்தய னாட்டுழி நின்றுழிவேள்*
*அனையீர் நினைந்து மறிதிர்கொ லோவஞ் சொலாலறிவோர்*
*வனையீ ரிதழ்க்கண்ணி வாணன்றென் மாறையை வாழ்த்தலர்போல*
*நனையீ ரிதழ்க்கண்வை காவெவ்வ நோயுற்ற நவ்வியையே.*

### தலைமகனினைத்தமைசெப்பல்.

[நினைத்தமை வினாவிய தோழிக்கு நான் உங்களை ஒருபோதும்
மறந்தறியேன் என்று தலைவன் கூறல்.]

*கானெடுங் குன்றங் கடந்துசென் றேனொரு காலுமைதோய்*
*மானெடுங் கண்ணி மறந்தறி யேன்வண்கை வாணன்றஞ்சை*
*நீனெடும் பெண்ணைக் குரும்பையுஞ் சூது நெருங்குகொங்கைத்*
*தேனெடுங் கண்ணிமென் பூங்குழன் மாதர் திருமுகமே.*

### தலைமகளையாற்றுவித்திருந்தமைபாங்கிகூறல்.

[தலைமகன் பிரிந்துபோயின காலத்துத் தலைமகளைத் தான்
ஆற்றியிருந்த அருமையைத் தோழி அவற்குக் கூறல்.]

*உயரா மலகத் தருங்கனி நீர்நசைக் குஞ்சுரம்போய்*
*வியரா மலில்லின் விடுத்தகன் றாளைமென் பூஞ்சிலம்பா*
*அயரா மலஞ்சலென் றாற்றுவித் தேனிவ் வவனியெல்லாம்*
*மயரா மல்வந்த பிரான்றஞ்சை வாணன்றென் மாறையிலே.* (௫௩)

## களவியல் முற்றிற்று.



# வரைவியல்.



வரைவின் இலக்கணங் கூறுதலால் இவ்வியல் வரைவியல் என்னும் பெயர்த்தாயிற்று. வரைவு - வதுவை. இயல் - இலக்கணம்.

[வரைவு.]

**கஎ0. வரைவெனப் படுவ துரவோன் கிழத்தியைக்
குரவர் முதலோர் கொடுப்பவுங்கொடாமையுங்
கரணமொடு புணரக் கடியயர்ந்து கொளலே.**

இ - ள். வரைவு என்று சொல்லப்படுவது தலைவன் தலைவியைக் குரவர் முதலாயினர் உடன்பட்டுக் கொடுப்ப மணம்புரிந்து கொள்ளுதலும் கொடாமை மணம்புரிந்துகொள்ளுதலுமாம் எ - று

உரவோன் - தலைமகன். குரவர்முதலோர் — தாய்தந்தைமுதலியோர். கரணம் - வேள்விச்சடங்கு. புணர - பொருந்த. கடியயாதல — விவாகஞ்செய்தல். (க)

[வரைவுக்குரியகிளவிகள்]

**கஎக. வரைவு மலிவே யறத்தொடு நிலையென்
றுரையமை யிரண்டும் வரைவிற் குரிய
கிளவித் தொகையெனக் கிளந்தனர் புலவர்.**

இ - ள். வரைவுமலிவும், அறத்தொடுநிலையும் என்று நூல்களுள்ளே சொல்லுதலமைந்த இரண்டும் வரைவிற்குரிய கிளவிதொகை என்று சொல்லினர் புலவர் எ - று.

வரைவு மலிதலாவது வரைவுதொடங்கி நடக்கும் முயறசி மிகுதல். (உ)

---

## க. வரைவுமலிதல்.

**கஎஉ. வரைவு முயல்வுணர்த்தல் வரைவெதிர் வுணர்த்தல்
வரைவறிந்து மகிழ்தல் பராவல்கண் டுவத்தலென்
றொருநால் வகைத்தே வரைவு மலிதல்.**

இ - ள். வரைவுமுயல் வுணர்த்தல் முதலியனவாக வரைவும லிதல் நான்குவகையுடையதாகும் எ - று.

மலிதல் - மிகுதல். (ரு)

[வரைவுமலிதலின்விரி.]

கஎரு. காதலன் முலைவிலை விடுத்தமை பாங்கி
காதலிக் குரைத்தலுங் காதலி நற்றாய்
உள்ள மகிழ்ச்சி யுள்ளலும் பாங்கி
தமர்வரை வெதிர்ந்தமை தலைவிக் குரைத்தலும்
அவளுவகை யாற்று துளத்தொடு கிளத்தலுந்
தலைவனைப் பாங்கி வாழ்த்தலுந் தலைவி
மணப்பொருட் டாக வணங்கைப் பராநிலை
காட்டலுங் கண்டோன் மகிழ்வுமென் றீட்டிய
இருமூன் றுமொன்றும் வரைவு மலிதற்காம்
விரியென விளம்பினர் மெய்யுணர்ந் தோரே.

இ - ள். காதலன் முலைவிலை விடுத்தமை பாங்கி காதலிக்கு ரைத்தல் முதலாக இங்கே சொல்லப்பட்ட ஏழும் வரைவுமலித லின்விரி என்று கூறினா மெய்யுணர்ந்தோர் எ - று.

இவற்றுள்ளே காதலன் முலைவிலைவிடுத்தமை பாங்கி காத லிக்குரைத்தல், தலைவி மணப்பொருட்டாக அணங்கைபபராநிலை காட்டல் என்னும் இரண்டும் வரைவுமுயல்வுணாத்தற்குரியன தமர் வரைவெதிர்ந்தமை தலைவிக்குப் பாங்கியுரைத்தல் எனபது வரைவெதிர்வுணர்த்தற்குரியது. தலைவி நற்றாயுள்ள மகிழச்சியுள ளல், உவகையாற்றுதுளத்தொடு கிளத்தல், தலைவனைப பாங்கிவா ழ்த்தல் என்னும் மூன்றும் வரைவறிநது மகிழ்தற்குரியன. பரா நிலை கண்டோன் மகிழவு பராவல்கண்டுவத்தலுக் குரியது.

## உதாரணம்.

### காதலன்முலைவிலைவிடுத்தமைபாங்கிகாதலிக்குரைத்தல்.

[காதலர் நின்னை வரைந்துகொள்ள நினக்கு முலைவிலை வர விடுத்தனர்; இனி நீ வருந்தாதொழிவாயாகவெனத் தோழி தலைவிக்குக் கூறல்.]

தொலைவிலை யாகிய பல்பொருள் காதலர் சூதமர்நின்
முலைவிலை யாக முகந்தளித் தார்முனை வேந்தர் தம்மைத

தலைவிலை யாகத் திறைகொண்ட வாணன் றமிழ்த்தஞ்சைவாய
உலைவிலை யாகுக பொன்வண்ண மாறுக வொண்ணுதலே.

## காதலிநற்றயுள்ளமகிழ்ச்சியுள்ளல்.

[தலைவன் வரைவொடு வந்தமை கண்டு நற்றாய் மகிழுமென்று
தலைவி மனத்தில் நினைத்தல். உள்ளல் - நினைத்தல்.]

கயமா மலரெனுங் கண்ணிணை வண்டெனுங் காளைபல்புள்
இயமா மணம்புண ரீர்ந்துறை நாட ரெதிர்ந்தவாமேல்
வயமா நடாத்திய வாணன்றென் மாறை வரைகுவரேல்
நயமா மணவணி கண்டியாயு மின்புறு நம்மினுமே.

## தமர்வரைவெதிர்ந்தமைதலைவிக்குப்பாங்கியுரைத்தல்.

[வரைவொடு வந்த தலைவனைத் தமர் ஏற்றுக்கொண்ட
மையைத் தோழி தலைவிக்குரைத்தல்.]

மணிப்பா விகைமுத்தம் வைத்தாங் கடம்பலர் வார்திரைதூய
அணிப்பாய துவலை யரும்புந் துறைவர்க் கணியெதிர்ந்து
பணிப்பா சிழையல்குல் வெண்ணகை யாயநமர் பாரநினைஞேய
தணிப்பான் முரசறைந் தார்தஞ்சை வாணன் றமிழ்நிலத்தே.

## தலைமகளுவகையாற்றுளத்தொடுகிளத்தல்.

[தமர் வரைவுடம்பட்டமைகேட்ட தலைவி அடங்காமகிழ்ச்சி
யுற்று நெஞ்சொடுகிளத்தல்.]

சோகா குலமெய்தல் காண்டுநெஞ் சேநந் துறைவரெனும
நீகா னுடன்பள்ளி நீள்வங்க மேறி நிலம்புரக்கும்
மாகா விரியன்ன வாணன்றென் மாறைமன் னன்பகையும்
ஏகா விருட்கங்கு லாங்கடற காலை யெனுங்கரையே.

## தலைமகனைப் பாங்கி வாழ்த்தல்.

[வரைவொடுவந்த தலைமகனை எதிர்ப்பட்டுத் தோழி வாழ்த்தல்.]

மாரியஞ் சுங்கொடை வாணன்றென் மாறையில் வாழிவண்டார்
வேரியந் தொங்கல் விரைகமழ் மார்ப விடாதவம்பற்
சேரியம் பொய்கைத் துறையலர் வாடுஞ் செவ்விமணத்
தாரியஞ் சங்கதி ரக்காட்டு நீயன்று சூட்டலரே.

### அணங்கைப்பராநிலைகாட்டல்.

[தலைவிமணமமுற்றுமாறு தெயவத்தைத்துதித்துநிறகும்நிலை யைத் தோழி தலைவற்குக் காட்டல்.]

உரவிய பெருங்கலித் துன்பங்கள் போயமுத லூழியின்பம்
வரவிய படிதன்னை வாழவித்த வாணன்றென மாறையன்னாள்
புரவிப் புனைநெடுந் தேரண்ண லேநின் பொருட்டணங்கைய
பரவிய பரவிநின் றேவரம் வேண்டுதல் பார்ததருளே.

### பராநிலைகண்ட தலைமகன்மகிழ்தல்.

[தலைவி மணங்காரணமாகத் தெயவத்தைத் துதித்து நிறகும் நிலையைக்கண்ட தலைமகன் மகிழுதல்.]

இவவித் தகமிவட் கெவ்வண மெயதிய தெவ்வுலகும்
வவ்வித் திகழ்புகழ் வாணன்றென மாறை மணபபொருட்டால்
நவ்விக தொகையின நாணுமென் றேக்கி நறைபுகையாச
செவவித தகைமலர் தூயத்தெய்வம் வாழ்த்துந் திருத்தசவே. (ச)

### [அறத்தொடுநிலை]

கஎச. முன்னிலை முன்னிலைப் புறமொழி யென்றாங்
கன்ன விருவகைத் தறத்தொடு நிலையே.

இ - ள். அறத்தொடு நிலை முன்னிலைமொழியும், முனனிலைட புறமொழியும என்று சொலலப்பட்ட அவ்விருவகையுடையதா கும் எ - று.

அறத்தொடுநிலையாவது களவை முறையேவெளிபபடுத்தல. (ரு)

### [அறத்தொடுநிலையின்விரி.]

கஎரு. கையறு தோழி கண்ணீர் துடைத்துழிக்
கலுழ்தற் காரணங் கூறலுந் தலைவன்
தெய்வங் காட்டித் தெளிப்பத் தெளிந்தமை
எய்தக் கூறலு மிகந்தமை யியம்பலும
இயற்பழித் துரைத்துழி யியற்பட மொழிதலுந
தெய்வம்பொறைகொளச்செல்குவமென்றலும்
இல்வயிற் செறித்தமை சொல்லலுஞ் செவிலி
கனையிரு ளவன்வரக் கண்டமை கூறலும்
எனமுறை யியம்பிய வேழும் புனையிழைத்
தலைவி யறத்தொடு நிலைதனக் குரிய.

இ - ள். கையறுதோழி கண்ணீர் துடைத்துழிக் கலுழ்தற் காரணங் கூறல் முதலிய ஏழும் தலைவியறத்தொடு நிலைக்குரியன வாகும் எ - று.

கையறு தோழி கண்ணீர் துடைத்தலும், இயற்பழித்தலை சலும அனுவாதம் பற்றிக்கொள்ளப்படும்.

## உதாரணம்.

### கையறுதோழிகண்ணீர்துடைத்தல்.

[தலைவன் பிரிந்துழித் தலைவியை ஆற்றிச் செயலற்ற தோழி யாவ அழுகின்றாயென்று அவளழுத கண்ணீரைத் துடைத்தல்.]

அயிரார் திரைவந்துன வண்டலம் பாவை யழித்தனவோ
செயிராத வன்னை செயிர்த்தன ளோசெறி நாரைநிண்போர்
வயிரா நரலும வயற்றஞ்சை வாணன்றென் மாறையிலென்
உயிரா கியதைய னீகலுழ வாவென்ன னுளங்குழைந்தே.

### தலைவிகலுழ்தற்காரணங்கூறல்.

[ஏன் அழுகின்றாயென்று கேட்ட தோழிக்குத் தலைவி தானழுதற்குக் காரணங் கூறல்.]

தாரணி கொண்ட விருதோ ளொருவர் தனித்துழியென்
வாரணி கொங்கை மணந்துசென் றார்தஞ்சை வாணனென்னூர்
தேரணி வென்ற செழும்புகர் வேலவிழித் தேனினஞ்சூழ
காரணி மென்குழ லாயது வேகலுழ காரணமே.

### தலைவன்தெய்வங்காட்டித்தெளிப்பத்தெளிந் தமையெய்தக்கூறல்.

[கலுழ்தற்காரணங் கூறிய தலைவி தலைவன் பிரியேனென்று தெய்வ முன்னாகச் சூளுரைத்ததை நம்பினே னென்று தோழிக்குரைத்தல்.]

துதித்தே னணங்கொடு சூளுமுற் றேனென்ற சொல்லைமெய்யா
மதித்தே னயர்ந்து மதியிலி யேன்றஞ்சை வாணன்வையை
நதித்தே னினம்புணர் மாதர்கண் போல நகைக்குநெய்தல்
பொதித்தே னுகர்ந்தக லுங்கழிக் கானற் புலம்பர்வந்தே.

### தலைவனிகந்தமையியம்பல்.

[தலைவி பின்னரும் தலைவன் முன்சொன்ன சொற்றவறிப பிரிந்தானென்று வருந்திக்கூறல்.]

வரியோல வண்டலை தண்டலை சூழ்தஞ்சை வாணன்வண்மைக்
குரியோ னுயர்வையை யொண்டுறை வாயுர வோர்தெளித்துங்

கரியோர் பிறரில்லை யென்றகன் ஞாலிக் காரிகையாய
பெரியோர் மொழிபிற ழாரென்று தேறுதல் பேதைமையே.

### பாங்கியயற்பழித்துரைத்தல்.

[தலைவன் தனனை இகழ்ந்தமை தலைவி கூறக்கேட்ட தோழி அவனுடைய தகுதியைப்பழித்துரைத்தல்.]

மழவே துறந்து மறந்தவர் போறறஞ்சை வாணன்வென்றி
முழவேய முறநீர் முழயகுருங் சானன முழுதுலகும
தொழவே தகுந்தெய்வ நோக்கிச்சென் லேனென்று சொல்லியுநீ
அழவே துறந்தன ரேனலனா நல்லரவ வாடவரே.

### தலைமகளியற்படமொழிதல்.

[தோழி தலைவனை இயறபழித்தமை பொறுத தலைமகள அவன் தகுதியுடையவன என்பது பொருந்தக் கூறல்.]

மாகப் புயன்மண்ணில் வந்தன்ன வாணன்றென் மாறைமுந்நீா
நாகப புகர்ச்செயய புள்ளிப்பைங் கான்ஞெண்டு நாகிளந்தன்ன
பூகக் குளிர்நிழற் பேடையொ டாடும் புலம்பரின்ஞர்
ஆகக் கருதினல் லாயினி யாரினி யாருளரே.

### தெய்வம்பொறைகொளச்செல்குவமென்றல்.

[தலைவன் சுட்டிச் சூளுற்ற தெய்வத்தைப் பொறுமைகொள் ளும்படி வேண்டறகு இருவேமும் போவேமென்று தலைவி பாங்கிக்குக்கூறல்.]

மாதங்க நல்குங்கை வாணன்றென் மாறைவை யைத்துறைவா
ஏதம் பயநதில ரெங்கட்கு நீயெம் மிகந்ததனுற்
கோதம படாதி கொடுந்தெய்வ மேயென்று கூர்பலிதூயப்
பாதம் பரவநல் லாயிரு வேமும் படர்குவமே.

### இல்வயிற்செறித்தமைசொல்லல்.

[தெய்வம் பொறைகொளச் செல்குவமென்ற தலைவி புறம்போக வொட்டாது நற்றாய் தன்னை இற்செறித்தமை கூறிவருந்தல்.]

தன்போ லுலகம் புரக்கின்ற வாணன் றமிழ்த்தஞ்சையார்
மன்போ லெவர்க்கும் வழங்கியுண் ணுதவர் வைத்திழக்கும்
பொன்போ லிறுகப் பொதிந்துகொண்டாளன்னை பூவையென்மேல்
அன்போ வயன்மட வாரலர் தூற்றிய வாறுகண்டே.

## செவிலி கனையிருளவன்வரக்கண்டமையியம்பல்.

[தலைவன் இரவுக்குறிக்கண் வந்தமை செவிலி கண்டுளா ளாகலான் இனி நாம் அறத்தொடுநிற்றல்வேண்டு மென்பதுபடத் தலைவி தோழிக்குக் கூறல்.]

வெங்கார் முகவெம புருவமின னேயன்னை மேலொருநாள்
எங்கா தலிரு ளிடைதல்கண டாளிந்த வேழுலகும்
மங்காமல வந்தருள் வாணன்றென மாறையன் டானமஞ்சச்
சங்காழி கொணடெறி யுங்கணடல வேலிடந் தண்டுறைக்கே. (௬)

[இதுவுமது.]

௧௭௬. எறிவளை வேற்றுமைக் கேது வினவினும்
வெறிவிலக் கியவழி வினவினும் பாங்கி
பூவே புனலே களிறே யென்றிவை
ஏது வாகத் தலைப்பா டியம்பும்.

இ - ள். செவிலி தலைமகளின் வேறுபாட்டிற்குக் காரணம வினவிய இடத்தும், தான வெறிவிலக்கிய காரணம் வினவிய இடத்தும், பூவும், புனலும், களிறும் எனப்பட்ட இவைகாரண மாகப பாங்கி அவளுக்குப் புணர்ச்சியினை அறிவிப்பாள். எ - று.

எறிவளை - தலைவி; அன்மொழித்தொகை. வழி - காரணம். தலைப்பாடு - தலைப்படுதல், புணர்ச்சி. வேற்றுமைக்கேது வினவுதலும், வெறிவிலக்கலும், விலக்கியவழி வினவுதலும் அநுவாதத்தாற் கொள்ளப்படும்.

### உதாரணம்.

## செவிலி தலைவியின் வேற்றுமைக்கேது பாங்கியை வினவுதல்.

[தலைவனை எதிர்ப்படாது இடையீடு பட்டமையாலே தலைமகளிடத்துத் தோன்றிய வேறுபாடு கண்டு இவ்வேறுபாடு இவளுக் கெதனுன் ஆயிற்றென்று செவிலி தோழியை வினுதல்.]

பொன்னுற்ற கொங்கையு முத்துற்ற கண்ணுமிப் போதுகண்டேன்
பன்னுற்ற சொல்லுமின பாலுங்கொள் ளாள்பதி னாலுலகும்
மன்னுற்ற வண்புகழ் வாணன்றென் மாறையென் மானனையாட்
கென்னுற்ற தென்றறி யேன்புனங் காவ லிருந்தபின்னே.

## வெறிவிலக்கல்.

[தலைமகண் மெலிவு தெய்வத்தாலாயதென்று அறிவார் சொல்லைக் கேட்டு அதற்குப் பரிகாரமாக நற்றாய வெறியாட்டெடுத்துக் கொண்டவிடத்து வெறியாடிற றலைவிக்குக் கறப்பழி வாமென்று தோழி வெறியாடுதலை விலக்கல்.]

அறியா மையினென்று கேட்கலுற் றேனும்மை யாவதொன் றுங்
குறியா மறியுயிர் கொள்ளவென் றேருரு திப்பலிகூர்
வெறியா லிவளுயிர் மீடகவென் றேவெனறி வேல்வலத்தார்
எறியா மணையில்வந் தீர்தஞ்சை வாணன் சிலம்பினின்றே.

## விலக்கியவழி செவிலி பாங்கியை வினவுதல்.

[நீ வெறிவிலக்கியதற்குக் காரணமென்னோ வென்று செவிலி பாங்கியை வினவுதல்.]

மணைகுன்ற வந்த கலியினை மாற்றிய வாணன்றஞ்சை
யணைகுன்ற மங்கையர் முன்னர்மின னேயுமை யாண்மானைப்
பணைகுனற வென்றசொல வள்ளிதன கோனைப்பைந தாரயிலான
வெண்குன் றெறிதசெவ் வேளையிவ் வாறென் விளம்புதியே.

## பூத்தருபுணர்ச்சி.

[வெறிவிலக்கியதறகுக் காரணங்கேட்ட செவிலிக்கு நினமகளும யானும சோலையில் விளையாடியகாலையில் ஒரு தோன்றல நின மகளுக்கு நீலைபூக் கொடுத்துபபோயினன. இஃது அறியாக காலத்து நிகழ்ந்தது. அதனை இன்று நின்மகள் நெஞ்சிற கொண்டு மெலியாநின்றாள். இது யானறிந்தது என்று தோழி அறத்தொடுநிறறல். மேல்வரும் இரண்டு துறைக்கும் இவ்வாறியைய உரைத்துக்கொள்க.]

போருறை திக்கணை போலுநின் கண்கண்டு போதவஞ்சி
நீருறை நீலமு நீயுநண் பாகென்று நின்மகட்கோர்
தாருறை தோளவர் தநதனர் வாணன் றமிழ்த்தஞ்சைசூழ்
காருறை சோலையில் யாம்விளை யாடிய காலையிலே.

## இதுவுமது.

தந்தார்க்கே யாமற் றடமென்றே னின்னநாள்
வந்தார்க்கே யாமென்பார் வாய்க்காண்பாம்—வந்தார்க்கே

தாவா விளமலர்த் தண்கழிக் கானல்வாயப்
பூவா விளஞாழற போது.

### புனறருபுணர்ச்சி.

ஒழிதோற் றியசொல்ல லுன்மக ளோதிக் குடைந்தகொண்டல்
பொழிதோற் றிரளருவி வந்தசெங் கீருநதிப் பொற்பினுக்கோர்
சுழிதோற றிடும்பகை தீர்க்கின்ற போதொரு தோன்றலுமவ்
வழிதோற்றி யாடுத் தான்றஞ்சை வாணன்றென வையையிலே.

### களிறுதருபுணர்ச்சி.

மண்ணலை யாமல் வளர்க்கின்ற வாணன்றென் மாறைவெற்பின்
அண்ணலை யாயிழை பாகனென் றஞ்சின மஞ்சனந்தோய்
கண்ணலை நீரிட்ட பாகமு மேல்வந்த கைக்களிற்றின
புண்ணலை நீரவல பாகமுந் தோயப் பொருதவனே.

### இதுவுமது.

சுள்ளி சுனைநீலஞ் சோபா லிகைசெயலை
அள்ளி யளகத்து மேலாய்ந்து—தெள்ளி
இதணாற் கடியொடுங்கா வீர்ங்கடா யானை
உதணாற் கடிந்தா னுளன். **திணைமாலை நூற்றைம்பது.**

சோபாலிகை - வெண்ணொச்சி. இம்மூவகைப் புணர்ச்சியுள் ஒன்றான் அறத்தொடுநிற்றல் அமையும் எனக்கொள்க. (எ)

### [இதுவுமது]

கஎஎ. மின்னிடை வேற்றுமை கண்டுதாய் வினவுழி
முன்னிலை மொழியான் மொழியுஞ் செவிலி.

இ - ள். நற்றாய் தலைமகளின் வேறுபாடு கண்டு செவிலியை வினவும்போது செவிலி முன்னிலை மொழியானே சொல்லுவாள் எ - று.

மின்னிடை - தலைவி; அன்மொழித்தொகை. வேற்றுமை - வேறுபாடு. வேற்றுமைகண்டு தாய வினதலும் அநுவாதத்தாற் கொள்ளபபடும்.

### உதாரணம்.

### தலைமகள் வேற்றுமைகண்டு நற்றாய் செவிலியை வினதல்.

தண்டார் தழுவிய வேலண்ணல் வாணன்றென் றஞ்சைவெற்பில்
வண்டார் குழலிதன் வண்ணமுங் கண்ணும் வடிவுமுன்னாட்

கண்டா ரறியும் படியன வேயல்ல காரணமொன்
றுண்டா லுயிரனை யாயயி ராம லுரையெனக்கே.

## செவிலி நற்றாய்க்கு முன்னிலைமொழியான்மொழிதல்.

[செவிலி நற்றாய்க்குக் களவொழுக்கம் நிகழ்ந்தமை குறிப்பா னன்றி வெளிப்படையாற் கூறுதல்.]

மலைவந்த தோவெனும் வாரண வாணன்றென் மாறைமதிச்
சிலைவந்த தோவெனு நன்னுத லாயொரு செல்வரிங்கோர்
கலைவந்த தோவென வந்து வினவிநங் காரிகைக்கு
முலைவந்த தோவில்லை யோவென்னு நாளின் முயங்கினரே. (அ)

## [இதுவுமது]

களஅ. என்றுட னியம்பிய வெல்லாங் களவியல்
நின்றுழி யறத்தொடு நிற்றலின் விரியே.

இ - ள். என்று இவ்வாறு சேரக்கூறியவையெல்லாம் களவொழுக்கின் நிற்கும்போது அறத்தொடுநிற்றலின் விரிவாகும் எ - று. (கூ)

## [களவுவெளிப்படற்குரியகிளவி.]

களகூ. போக்கே கற்பொடு புணர்ந்த கவ்வை
மீட்சி யென்றாங்கு விளம்பிய மூன்றும்
வெளிப்படைக் கிளவியின் வழிப்படு தொகையே.

இ - ள். உடன்போக்கும், கற்பொடு புணர்ந்த கவ்வையும், மீட்சியும் என்று சொல்லப்பட்டமூன்றும் களவுவெளிப்பாட்டிற குரிய கிளவியின் தொகையாகும் எ - று. (கo)

## [உடன்போக்கு.]

கஅo. போக்கறி வுறுத்தல் போக்குடன் படாமை
போக்குடன் படுத்தல் போக்குடன் படுதல்
போக்கல் விலக்கல் புகழ்ந்த றேற்றலென்
றியாப்பமை யுடன்போக் கிருநான்கு வகைத்தே.

இ - ள். போக்கறிவுறுத்தல் முதலாக உடன்போக்கு எட்டு வகையினையுடைத்து எ - று.

யாப்பு - இயைபு. (கக)

[உடன்போக்குவிரி.]

கஅக். பாங்கி தலைமகற் குடன்போக் குரைத்தலும்
ஆங்கவன் மறுத்தலு மவளுடன் படுத்தலுந்
தலைவன் போக்குடன் படுதலும் பாங்கி
தலைவிக் குடன்போக் குரைத்தலுந் தலைவி
நாணழி பிரங்கலுங் கற்பு மேம்பாடு
பூண்டுலைப் பாங்கி புகறலுந் தலைவி
ஒருப்பட் டெழுதலும் விருப்புடைப் பாங்கி
சுரத்தியல் புரைத்துழிச் சொல்லலும் பாங்கி
கையடை கொடுத்தலும் வைகிருள் விடுத்தலும்
அவன்சுரத் துய்த்தலு மசைவறிந் திருத்தலும்
உவந்தலர் சூட்டி யுண்மகிழ்ந் துரைத்தலுங்
கண்டோ ரயிர்த்தலுங் காதலின் விலக்கலுந்
தம்பதி யணிமை சாற்றலுந் தலைவன்
தன்பதி யடைந்தமை தலைவிக் குணர்த்தலும்
என்றிவை யொன்பதிற் றிருவகைக் கிளவியும்
ஒன்றிய வன்பி னுடன்போக்கு விரியே.

இ - ள். பாங்கி தலைமகற்குடன்போக்குரைத்தல் முத லாக இங்கே சொல்லப்பட்ட பதினெட்டும் உடன்போக்கின் விரி யாகும் எ - று.

உடன்போக்கு - உடன்போதல். நாணழிபிரங்கல் - தலைம கள் நாணழிதற்கு மனமிரங்குதல். ஒருப்படுதல் - உடன்படுதல். கையடை - அடைக்கலம். வைகிருள் - தங்கிய இருள். அசைவு - வருத்தம்.

இவற்றுள்ளே பாங்கி தலைமகற்குடன்போக்குரைத்தல், பா ங்கி தலைவிக்குடன்போக்குரைத்தல் என்னும் இரண்டும் போக்கறி வுறுத்தற்குரியன. தலைவன் மறுத்தல், தலைவி நாணழிபிரங்கல் என்னும் இரண்டும் போக்குடன்படாமைக்குரியன. பாங்கி தலை வனையுடன்படுத்தல், கற்பு மேம்பாடு கூறல் என்னும் இரண்டும் போக்குடன்படுத்தற்குரியன. தலைவன் போக்குடன்படுதல், தலை வியொருப்பட்டெழுதல், பாங்கி சுரத்தியல்புரைத்துழிச் சொல் லல் என்னும் மூன்றும் போக்குடன்படுதற்குரியன. பாங்கி கைய டைகொடுத்தல், வைகிருள்விடுத்தல், தலைமகன் தலைவியைச் சுரத் துய்த்தல் என்னும் மூன்றும் போக்கற்குரியன. தலைவன் தலை வியின் அசைவறிந்திருத்தல், கண்டோர் காதலின் விலக்கல் என்

னும் இரண்டும் விலக்கற்குரியன. தலைவன் தலைவியையுவந்தலர் சூட்டி யுண்மகிழ்ந்துரைத்தல், கண்டோரயிர்த்தல் எனனும இரண்டும் புகழ்தற்குரியன. கண்டோர் தம்பதியணிமைசாற்றல், தலைவன் தன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தல் என்னும் இரண்டும் தேற்றற்குரியன.

### உதாரணம்.

### பாங்கிதலைவற்குடன்போக்குரைத்தல்.

[எம்மையர் நீ வரைந்துகொள்ளுதற்குடன்படார், ஆதலான நீ
தலைவியை உடன கொண்டு போவென்று பாங்கி
தலைவறகுரைத்தல.]

மைந்நீர் நெடுங்கண் மடந்தை யுடன்றஞ்சை வாணன்வெற்பா
செந்நீர் விழவணி நின்னகர்க் கேகொண்டு சேர்ந்தருண்மற
றிந்நீர்மை யல்லதொ ராறுமின் றுலிங்கெம் மையரென்றுன
முந்நீ ருலகுங்கொள் ளார்விலை யாக முலையினுக்கே.

### தலைவனுடன்போக்குமறுத்தல்.

[தலைமகன் தலைமகளை உடன்கொண்டுபோத
லருமை கூறி மறுத்தல்.]

பாரோ முலைவிலை யென்பர்நின் கேளிரென் பல்கிளைவாழ்
ஊரோ வணியதன் றெண்டொடி யாயவிந்தை யுண்கணகளோ
தாரோ வளரும் புயன்றஞ்சை வாணன் றரியலர்போல்
யாரோ தனிநடப் பாரருங் கான மிவளுடனே.

### பாங்கிதலைவனையுடன்படுத்தல்.

[பாங்கி தலைமகளது தஞ்சமின்மை கூறித
தலைமகனைப் போக்குடன்படுததல்.]

சுருளேய் குழலுஞ் சுணங்கேய் முலையுஞ் சுமந்துகற்புப
பொருளே யெனச்சுரம் போதுமப் போது புகழ்வெயிலான
மருளேய கலியிருண் மாற்றிய வாணன்றென் மாறையிலின்
அருளே யொழியவுண் டோநிழ லாவ தணங்கினுக்கே.

### தலைவன் போக்குடன்படுதல்.

நஞ்சோ வழலோ வெனுஞ்சுர மோசெல்ல நாடியவென்
நெஞ்சோ கொடியது நேரிழை யாய்நிழன் மாமதியோ
மஞ்சோ தவழ்மதில் சூழ்தஞ்சை வாணன் வரையிலவம்
பஞ்சோ வனிச்சங்கொ லோவெனுஞ் சீறடிப் பைந்தொடிக்கே.

## பாங்கிதலைவிக்குடன்போக்குரைத்தல்.

[தலைமகனைப் போக்குடன்படுத்திய தோழி தலைவியிடம் சென்று தலைமகன் நினைவு உன்னை உடன்கொண்டுபோவதா யிருந்ததென்று கூறுதல்.]

பாலன்ன பாயற் பகையெனுஞ் சீறடி பட்டுருவும்
வேலன்ன கூர்ங்கண் மிதிக்குங்கொ லென்றனர் மேதினிக்கு
மாலன்ன வாணனறென மாறைநன் னாட்டு வயலுகளுஞ்
சேலன்ன வாள்விழி யாயதெரி யாதன்பா சிந்தனையே.

## தலைவிநாணழிபிரங்கல்.

[தலைவனோடு உடன்போகிற பெண்களுக்குச் சிறந்த நாணழியுமென்று தலைவி இரங்கல்.]

மறவாகை வேல்வண்கை வாணனை மாறையர் மன்னனைத்தம்
உறவாக வெண்ணி யுறுதவர் போலுயி ரோம்பியென்றுந
துறவாத நாணந் துறப்பது வேண்டலிற் றொல்லுலகிற்
பிறவா தொழிதலன் றேயொரு காலமும் பெண்பிறப்பே.

## பாங்கி கற்பின்மேம்பாடு கூறல்.

[பெண்களுக்கு நாணினும் கற்புச் சிறந்ததென்று உலகியல கூறிப் பாங்கி தலைவியைப் போக்குடன்படுத்தல்]

செந்நாண் மலரிற் றிருவன்ன கோலத் தெரிவையர்க்கு
மெய்ந்நா ணுயிரினு மிக்கதென் றால்விர வாவரசர்
தந்நாண முறைமை தவிர்த்தருள் வாணன் றமிழ்த்தஞ்சைநா—
டந்நா ணமுமட வாய்கற்பு நோக்க வழுகிதன்றே.

## தலைவியொருப்பட்டெழுதல்.

[பாங்கி கற்பின்மேம்பாடுரைக்கக்கேட்ட தலைவி தலைவ னோடு போக்கொருப்படுதல்.]

பலரே சுமந்த வுரைகளுந் தாயர்தம் பார்வைகளுஞ்
சிலரே சுமந்து திரியவல் லார்செய்ய செண்பகநாண்
மலரே சுமந்த வயற்றஞ்சை வாணனை வாழ்த்தலர்போல்
அலரே சுமந்து சுமந்திந்த வூர்நின் றழுங்குகவே.

## பாங்கி சுரத்தியல்புரைத்துழித் தலைவிசொல்லல்.

[தலைவி சுரத்தியல்புகேட்டு மனமழுங்காது தான் உடன்போக்குத் துணிந்தமை கூறல்.]

செல்லிற் கொடிய களிற்றிகல் வாணன்றென் மாறைமன்னன்
வில்லிற் கொடிய புருவமின் னேயென் விளம்புதிநீ

சொல்லிற் கொடியநம் மன்னையைப் போல்பவர் சூழ்ந்திருக்கும்
இல்லிற் கொடியகொல் லோசெல்லு நாட்டவ் விருஞ்சுரமே.

## இதுவுமது.

கடக்கருங் கானத்துக் காளைபின் றானை
நடக்கவும் வல்லையோ வென்றி—சுடர்த்தொடி
பெற்றா ளொருவன் பெருங்குதிரை யர்நிலையே
கற்றா னஃதூரு மாறு.

## பாங்கிகையடைகொடுத்தல்.

[பாங்கி தலைமகனைத் தலைமகளிடம் கொண்டுசென்று கையிற
கொடுத்து ஓம்படை கூறல். கையடை - கையிலடுத்தல்.]

பறந்திருந் தும்பர் பதைப்பப் படரும் புரங்கரப்பச்
சிறந்தெரி யாடிதென் றில்லையன் னாடிறத் தூச்சிலம்பா
அறந்திருந் துன்னரு ளும்பிறி தாயி னருமறையின்
திறந்திரிந் தார்கலி யும்முற்றும் வற்றுமிச் சேணிலத்தே.

திருக்கோவை.

## இதுவுமது.

இவளே நின்னல திலளே யாயும
குவளை யுண்க ணிவள திலளே
யானு மாயிடை யேனே
மாமலை நாட மறவா திமே. குறுந்தொகை.

## பாங்கிவைகிருள்விடுத்தல்.

[பாங்கி இடையாமத்திலே தலைவனையும் தலைவியையுட
வழிவிடுத்துரைத்தல்.]

பொழிநான மன்றலம் பூங்குழ னீங்கள் புணர்ந்துசெல்லும
வழிநாடி நும்பின் வருகுவல் யானறஞ்சை வாணனவையைச
சுழிநாணு முந்நின் றொல்கிளைக் கேற்பன சொல்லியின்று
மொழிநா வடங்க மொழிந்தய லாரை முகங்கவிழ்த்தே.

## தலைவன் தலைவியைச் சுரத்துய்த்தல்.

[தலைவன் தலைவியைக் காட்டிடத்து மெல்லக்
கொண்டுபோகல்.]

தளிபோற் கொடையயில் சந்திர வாணன் றமிழ்த்தஞ்சையான்
அளிபோற் குளிர்ந்த விளமரக் காவு மவன்புகழின்

ஒளிபோல் விளங்கிய வெண்மணல் யாறு முவந்துகண்டு
நளிபோ தவிழ்குழ லாயமெல்ல மெல்ல நடந்தருளே.

### தலைமகன் தலைவியசைவறிந்திருத்தல்.

[தலைமகன் தலைமகளோடு அவளது வழிவருத்தந்தீர ஒரு சோலையிலே தங்குதல். அசைவு - வருத்தம்.]

வரமாவை வேற்படை வாணன்றென் மாறை வணங்கலர்கள்
புரமான வல்லழல் பொங்குவெங் கானிற் பொருந்தியகூர்
அரமான கல்லுன் னடிமல ராற்றல வாதலினுஞ்
சுரமாறு மெல்லைநல் லாயிருப் பாமிந்தச் சோலையிலே.

### உவந்தலர்சூட்டியுண்மகிழ்ந்துரைத்தல்.

[சோலையிலே தங்கி வழிவருத்தந்தீர்ந்து தலைமகன் தலைமகளுக்கு மலர்பறித்துச் சூட்டி மனமகிழ்ந்து கூறுதல்.]

அடிமலர் போற்றவும் போற்றியன் பாலிவ ளாயமுடிக்கியான்
கடிமலர் சூட்டவுங் காட்டிய தாறுகளவர் காயந்தெறியுந்
துடிமலர்ச் சீர்க்கெதிர் கூகை யிரட்டுஞ் சுரத்திடையோர்
வடிமலர் வேற்படை யான்வாணன் மாறையென் மாதவமே.

### கண்டோரயிர்த்தல்.

[தலைவனையுந் தலைவியையும் சுரத்திடைக்கண்டோர் அவர்கள வடிவின் மேன்மையால் தேவரோ மானுடரோ என்று ஐயமுற்றுக் கூறுதல். அயிர்த்தல் - ஐயமுறல்.]

சையத் திரள்புயன் சந்திர வாணன் றனிபுரக்கும்
வையத் துறைகின்ற மானுட ரோவன்றி வானவரோ
நையப் படுமழல் வெஞ்சுரத் தூடு நடந்தவரென்
றையப் படுவதல் லாலுண்மை சால வறிவரிதே.

### கண்டோர்காதலின்விலக்கல்.

[அவர்களைச் சுரத்திடைக் கண்டோர் பொழுதுபோயிற்று; இவ்வழி இனிப்போகவொண்ணாதென விலக்கிக் கூறுதல்.]

மாலுந் திருவு மெனவரு வீர்தஞ்சை வாணன்றெவ்வூர்
போலுஞ் சுரமினிப் போகவொண் ணாது பொருப்படைந்தான்
ஆலும் புரவி யருக்கனிக் கங்கு லடற்கடமான்
பாலுந் தசையுமுண் டேதங்கு வீரெங்கள் பாடியிலே.

* வரமாமை என்று பாடங்கொள்வாருமுளர்.

### கண்டோர்தம்பதியணிமைசாற்றல்.

[இனிச்சிறிது நெறிசென்று அக்குன்றமிரண்டையுங் கடந்தால் நமது பதிவிளங்கித் தோன்றுநிற்கும்; கடிதுசெல்லுமின் என அவ்விருவரையுங் கண்டோர் அவர் நகரணிமை கூறுநிற்றல்.]

தொடங்கும் பிறைநுதற் றோகையு நீயுமுன் றோன்றுகின்ற
கடங்குன் றிரண்டுங் கடந்துசென் றற்கம லத்தடமுங்
கிடங்கும் புரிசையுஞ் சூழ்ந்தெதிர் தோன்றுங் கிளைத்தபைந்தார்த்
தடங்குங் குமநெடுந் தோள்வாணன் மாறையுந் தஞ்சையுமே.

### தலைவன்தன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தல்.

[பதியணிமைகேட்டுப் பரிவொடுகொண்டு செல்லாநின்ற தலைமகன் தலைமகளுக்குத் தனதுநகர் காட்டாநிற்றல்.]

சந்தனந் தோய்ந்து தயங்குமுத் தாரந் தரித்துவிம்மும்
நந்தனந் தாங்கி நடுங்கிடை போல நடைநடுங்கனே
நொந்தனங் காலென்று நோவல்பொன் னேயொரு நோவுமின்றி
வந்தனங் காணிது காண்வாணன் மாறை வளநகரே. (கஉ)

### [கற்பொடுபுணர்ந்தகவ்வை.]

கஅ௨. செவிலி புலம்ப னற்றாய் புலம்பல்
கவன்மனை மருட்சி கண்டோ ரிரக்கம்
செவிலிபின் றேடிச் சேறலென் றாங்குக்
கற்பொடு புணர்ந்த கௌவையை வகைத்தே.

இ - ள். 'செவிலி புலம்பல், நற்றாய் புலம்பல், மனைமருட்சி, கண்டோரிரக்கம், செவிலி பின் தேடிச்சேறல் எனக்கற்பொடு புணர்ந்தகவ்வை ஐந்து வகையுடையதாகும் எ - று.

புலம்பல் - வருந்திக்கூறல். மனைமருட்சி-மனையின்கணிருந்து நற்றாய் வருந்துதல். கற்பொடுபுணர்ந்த கவ்வை - தலைவிகற்பொடு புணர்ந்தமை பலரும் அறிதற்குக் காரணமான அலர். கவ்வை - அலர், வெளிப்பாடு. (கங)

### [கற்பொடுபுணர்ந்த கவ்வையின்விரி.]
### [செவிலிபுலம்பல்.]

கஅங. வினவிய பாங்கியி னுணர்ந்த காலை
இனைய லென்போர்க் கெதிரழிந்து மொழிதலுந்
தன்னறி வின்மை தன்னொடு நொந்துரைத்தலுந்

தெய்வம் வாழ்த்தலு மிவ்விரு மூன்றும்
இலங்கிழைச் செவிலி புலம்புதற் குரிய.

இ - ள் வினவியபாங்கியினுணர்ந்தகாலை இனையலென்போர்க்கு எதிரழிந்து மொழிதல் முதலாகச் சொல்லப்பட்ட மூன்றும் செவிலித்தாய புலம்பற்குரியனவாகும் எ - று.

இனையல் என்போர் - வருந்தாதே என்று தேற்றுவோர். செவிலி பாங்கியை வினவுதல் முதலியனவும் அநுவாதத்தாற் கொள்ளப்படும்.

## உதாரணம்.

### செவிலிபாங்கியைவினுதல்.

[இருவரையும் வழிப்படுத்திவந்து கவலாநின்ற தோழியை நாமெல்லாம் புலம்ப நம்மாது எங்கேபோயினள்? நான அறியச் சொல்வாயாக எனச் செவிலிவினுதல்.]

நலம்புனை யாயமு நீயுநற் றாயொடு நானுநன்பொற
சிலம்புயர் சோலையுஞ் சிற்றிலும் பேரிலுந் தெண்டிரைமேல
வலம்புரி யூர்வயல் சூழ்தஞ்சை வாணனை வாழ்த்தலர்போற்
புலம்புற மாதரெங் கேமக ளேதனி போயினளே.

### பாங்கிசெவிலிக்குணர்த்தல்.

[வினவிய செவிலிக்கு நங்கேளிர் மணம் மறுத்தார்; அதனை நின்மகள் அவன்பின்னே சென்றாள் என உடன போக்குணர்த்தல்.]

வெறுத்தா ரொறுத்துரை மேலுநங் கேளிர் விழைதலின்றி
மறுத்தா ரவற்கு மணமத னாறறஞ்சை வாணர்பிரான்
கறுத்தார் புரத்து நடந்தனள் காளைபின் காமர்கற்பாற
பொறுத்தா ளழற்சுரந் தன்னையன் னையநின் பொலங்கொடியே.

### இனையலென்போர்க்கெதிரழிந்துமொழிதல்.

[உடன்போக்குணர்ந்து வருந்திய செவிலி நான் இவளைப்பரிவொடுவளர்த்தது என்னை இவள் இவ்வாறுவிட்டு நீங்குதற்கோவெனத் தன்னைவருந்தலென்று தேற்றுவாரோடு நொந்துகூறல்.]

மாறா வளவயல் சூழ்தஞ்சை வாணன்றென் மாறையென்கண்
ஆறா வருந்துய ராற்றுகின் றீரறி வேகொளுத்தி

ஊறு வனகடிந் தென்மூலை யூறமிர் தூட்டியின்சொற்
கூறு வளர்த்ததற் கோவென்னை நீத்ததென் கோல்வளையே.

### தன்னறிவின்மைதன்னைநொந்துரைத்தல்.

[எதிரழிந்து மொழியாநின்ற செவிலி அவள் முன்பே நாளைக்
காளையின் போவலென்று குறிப்பாலறிவித்தாள்; அத
னைப பேதையேன் அப்போதே அறியப்பெற்றிலே
னென்று இரங்காநிற்றல்.]

வழியா வரும்பெரு நீர்த்தஞ்சை வாணனை வாழ்த்தலர்போற்
கழியாத வன்புடைக் காளையின் ஞாலக கலந்துகொண்டல்
பொழியாத வெஞ்சுரம் போகுவல் யானென்று போங்குறிப்பால்
ஒழியாதென் முன்புசொன்னாள்பேதையேனொன்றுமோர்ந்திலனே

### இதுவுமது.

முலைக்கண்ணு முத்தும் முழுமெய்யும் புல்லும்
இலக்கணம் யாது மறியேன—கலைக்கணாம்
வேங்கை வெரூஉநெறி செல்லியல் போலுமென்
பூம்பாவை செயத குறி.

### தெய்வம்வாழ்த்தல்.

[செவிலி உடன்போகிய தலைமகளைத் திரும்பிவரும்படி
செயயுமாறு கடவுட்பராவுதல்.]

இணங்கிப் புவனத் தெவருமில் லாவென் னிளங்கொடியால்
உணங்கிக் கழித லொழியவென் பால்வர வுன்னையன்பால்
வணங்கிப் பலமுறை வாழ்த்துகின றேன்றஞ்சைவாணன்றெவ்வை
அணங்கித் திரள்புயத் தான்மல யாசலத் தாரணங்கே. (கச)

### [நற்றாய்புலம்பல்.]

**கஅச. செவிலி யறத்தொடு நிற்றலிற் கவலையில்**
**பாங்கி தன்னொடும் பாங்கியர் தம்மொடும்**
**அயலார் தம்மொடும் பயிலிடந் தன்னொடுந்**
**தாங்கல ளாகிச் சாற்றிய வெல்லாம்**
**பூங்கொடி நற்றாய் புலம்பற் குரிய.**

இ - ள். செவிலியறத்தொடு நிற்றலிற கவலையில் பாங்கி தன்னொடு புலம்பல் முதலியனவாகச் சொல்லப்பட்டன எல்லாம் தலைவியின் நற்றாய் புலம்புதற்குரியனவாகும் எ - று.

அறத்தொடு நிற்றலும் அநுவாதத்தாற் கொள்ளப்படும்.

உதாரணம்.

### செவிலி நற்றாய்க்கறத்தொடுநிற்றல்.

[செவிலி கற்புமுதிர்வுதோன்றத் தலைமகள் தலைவனுடன் போனமையை நற்றாயக்குக் கூறல்.]

*சகநல்க வந்தருள் சந்திர வாணன்றென் றஞ்சைநல்லாய்*
*முகநல்க நகைநி முலைகொடுத் தாரின்முத் தங்கொடுத்தார்*
*மிகநல்ல ரென்பது மன்பதை தேர விடலைபின்னே*
*மகநல்கு மந்தியங் கானடந் தாளுன் மடநதையின்றே.*

### நற்றாய்பாங்கியோடுபுலம்பல்.

[தலைமகள் களவொழுக்கத்தை அவள் உடன்போக்குத்துணிய முன்னரே அறிவித்திலையே யென்று நற்றாய தோழியோடு நொந்து கூறல்.]

*முன்னே யிதனை மொழிந்தனை யேனுந்தை முந்தைமணம்*
*பின்னேய் குழலி பெருளல்ல ளேபிற மூரதேவர்க்குந*
*தன்னேயம் வைத்தரு ளுந்தஞ்சை வாணன் றமிழ்ச்சிலம்பிற்*
*பொன்னே யனையநல் லாயவ மேசுரம் போக்கினையே.*

### பாங்கியழுங்கல்கண்டு நற்றாய்புலம்பல்.

[தலைமகள் பிரிவாற்றாது தோழிவருந்தல் கண்டு நற்றாய்புலம்பல்.]

*இல்லுங் கழங்கா டிடங்களு நோக்கி யிரங்கல்வம்பும் [ஞர்*
*வல்லும் பொருங்கொங்கை மங்கைநல் லாய்தஞ்சை வாணனென்*
*புல்லுந் துணைவியர் போல்வினை யேன்பெற்ற பூவையன்னாள்*
*செல்லுஞ் சுரத்தழ லன்றுன்கண் ணீரெற் றெறுகின்றதே.*

### பாங்கியர்தம்மொடுநற்றாய்புலம்பல்.

[தோழியர் துயர்கண்டு நற்றாய் புலம்பல்.]

*நேயம் புணைதுணை யாகவெங் கானக நீந்தவெண்ணி*
*ஆயம் புலம்ப வகன்றன ளோகல் லகங்குழைய*
*மாயம் புகலொரு காளைபின் வாணன்றென் மாறையன்னி*
*சேயம் புயமலர் போலடி நோவவென் சில்வளையே.*

### அயலார்தம்மொடுநற்றாய்புலம்பல்.

[அயலாரைக்கண்டு நற்றாய் புலம்பல்.]

*மேனாள் வரங்கிடந் தென்போல் வருந்தி மிகவுமெய்ந்நொந்*
*தீனா தவர்துன்ப மெய்துவ ரோவிமை யோருலகக்*

தாணுண நீடு மதிற்றஞ்சை வாணன் றமிழ்ச்சிலம்பின்
மாணுர் விழியனை யாள்விளை யாடிய வண்டல்கண்டே.

## பயிலிடந்தன்றேடுபுலம்பல்.

[தலைமகள் விளையாட்டிடங்களைக்கண்டு அவளை நினை
ந்து நற்றாய் புலம்பல்.]

செயலைத் தருவின் றிருநிழ லேபெருஞ் சிற்றில்லமே
வயலைக் கொடிநொச்சி பண்டப மேதஞ்சை வாணனென்னுர்
இயலைத் தனித்தனி தந்தன ளோநமக் கின்றிதன்றே
கயலைப பொருதகண் ணுண்மேலும் வாழ்விக்குங் கட்டளையே.

## இதுவுமது.

கொன்றாய் குருந்தே கொடிமுல்லாய வாடினீர்
நின்றீ ரறிந்தே னெடுங்கண்ணுள்—சென்றுளுக் [ரைத்தாண்
கென்னுரைத்தீர்க் கென்னுரைத்தாட் கென்னுரைத்தீர்க் கென்னு
மின்னுரைத்த பூண்முலையாள் விட்டு. திணைமாலை. (கரு)

## [மனைமருட்சி.]

கஅ௫. நிமித்தம் போற்றலுஞ் சுரந்தணி வித்தலுந்
தன்மகண் மென்மைத் தன்மைக் கிரங்கலும்
இளமைத் தன்மைக் குளமெலிந் திரங்கலும
அச்சத் தன்மைக் கச்சமுற் றிரங்கலும்
எனவிவை யைந்து மனைமருட்சிக் குரிய.

இ - ள் நிமித்தம் போற்றல் முதலிய ஐந்தும் மனைமருட்சிக் குரியனவாகும் எ - று.

மருட்சி - மயங்குதல்.

உதாரணம்.

## நிமித்தம்போற்றல்.

[யான்பெற்ற கொம்புபோல்வாளை இப்பொழுது வரும்
வண்ணம் நீ கரைந்தால், யான் நின்னை என் வழிபடு
கடவுளாகப் போற்றி அரிய பலியைத் தருவேன்;
நீ அவ்வாறு கரைவாயாக என நற்றாய்
கொடிக்குறி பாராநிற்றல்.]

வடியேய் புகர்முக வாள்வல வாணன்றென் மாறையுள்யான்
அடியே தொழுந்தெய்வ மாகநிற் பேணி யரும்பலியிப்

படியே தருகுவ லென்றுமின் னேயிப் பதியுவகைக்
கொடியே வரக்கரை நீகொடி யேன்பெற்ற கொம்பினையே.

### சுரந்தணிவித்தல்.

[தலைமகள் போன சுரத்தின்வெம்மை தணியுமாறு நற்றாய்
வேண்டுதல். சுரம் - பாலைநிலம்.]

வெஞ்சுர நாடு வியன்சுர லோகமும் வெங்கருங்கான்
அஞ்சுர தாரு வனங்களு மாகாவகிற் புகைபோன்
மஞ்சுர வாடக மாமதில் சூழ்தஞ்சை வாணன்வெற்பிற்
பஞ்சுர மாகு மொழிச்சுரு ளோதியென் பைந்தொடிக்கே.

### தன்மகளின்மென்மைத்தன்மைக்கிரங்கல்.

[செம்பஞ்சூட்டினும் ஆற்றாது வருந்துமடிகள் இன்று பரல்செறி
ந்த காட்டினகண் நடக்க எவ்வாறாற்றுமெனத் தலைமகள்
மென்மைத்தன்மை நினைந்து நற்றாயிரங்காநிற்றல்.]

அரக்காம்ப லூறும்வா யம்மருங்குற் கன்னே
பரற்கான மாற்றின கொல்லோ—வரக்காந்த
பஞ்சிகொண் டூட்டினும் பையெனப் பையெனவென்
றஞ்சியபின் வாங்கு மடி.

### இளமைத்தன்மைக்கிரங்கல்.

[நற்றாய் தலைவி இளமைத்தன்மை நினைந்திரங்காநிற்றல.]

இரும்பா மனங்கொண்ட வாறென்னை நீதன்னை யேத்தியென்றும்
வரும்பா வலர்க்கருள் வாணன்றென் மாறை வளவயலிற
கரும்பார மொழியா யழலென்று கண்ணீர் துடைத்தணைத்துன்
அரும்பா முலைசெயய வாயபபசும் பாவைக் களிக்குமின்னே.

### அச்சத்தன்மைக்கச்சமுற்றிரங்கல்.

[நற்றாய தலைவிக்கியல்பாகிய அச்சமிகுதியை
நினைந்து இரங்காநிற்றல்.]

நாண்மா தவிமலர் நாறிருங் கூந்த னடந்தவழிக்
கோண்மா குமிறுங் கொடுங்குரல் கேட்டொறுங் கூர்ங்கணையால்
வாண்மா முனைவென்ற வாணன்றென் மாறை மணிவரைவேயத்
தோண்மான்வெருவுங்கொல்லோவென்றெஞருயிர்சோர்கின்றதே.

### [கண்டோரிரக்கம்.]

கஅசுா. ஆயமுந் தாயு மழுங்கக் கண்டோர்
காதலி னிரங்கல் கண்டோ ரிரக்கம்.

இ - ள். ஆயத்தாரும் தலைவியின் நற்றாயும் அழுங்குமாறு கண்டவர் அன்பினால் இரங்குதல் கண்டோரிரக்கமாகும் எ - று.

கண்டோரிரக்கம் - கண்டோர் இரங்கிக்கூறல்.

உதாரணம்.

*நொந்துங் கலுழ்ந்துந் துணைவிய ராற்றலர் நோக்கொடின்சொற*
*றந்துங் கவையுந தணநதுசென ருளனைத் தாள்பணியார்*
*மைந்துங் கதமுங் கடிந்தருள் வாணன்றென மாறையன்னாள்*
*டைந்துங் கழங்குமெல் லாங்கண்டு வாடும் பயந்தவளே.* (கஎ)

[செவிலிபின்தேடிச்சேறல்.]

கஅஎ. ஆற்றுத் தாயைத் தேற்றலு மாற்றிடை
முக்கோற் பகவரை வினாதலு மிக்கோர்
ஏதுக் காட்டலு மெயிற்றியொடு புலம்பலுங்
குரவொடு புலப்பலுஞ் சுவடுகண் டிரங்கலுங்
கலந்துடன் வருவோர்க் கண்டுகேட் டலுமவர்
புலம்ப றேற்றலும் புதல்வியைக் காணாது
கவலைகூர் தலுமெனு மிவையொன் பானுஞ்
செவிலிபின் றேடிச் சேறற் குரிய.

இ - ள். ஆற்றாத்தாயைத் தேற்றல் முதலிய ஒன்பதும் செவிலிபின் தேடிச் சேறலுக்குரியனவாகும் எ - று.

உதாரணம்.

சேவிலியாற்றுத்தாயைத்தேற்றல்.

[தலைமகள் பிரிவாற்றாது வருந்துகின்ற நற்றாயை நீ வருநதவேண்டா; யான் அவள் சென்றவிடம் சென்று அவளை இன்றே தருவேன் எனச் செவிலி தேற்றாநிற்றல்.]

*நன்றே யிதென்று முகமுக நோக்கி நகைநகையா*
*மன்றே யலர்சொல்லு மாதர்முன் னேதஞ்சை வாணன்றெல்சீர்*
*சென்றே பரந்த திசைகளெல் லாஞ்சென்று தேர்ந்தணங்கை*
*இன்றே தருவனன் னேவருந் தாதிங் கிருந்தருளே.*

ஆற்றிடைமுக்கோற்பகவரைவினுதல்.

[நற்றாயைத் தேற்றி, உடன்போய தலைவியைத் தேடிச்சென்ற செவிலி இடைவழியிலே முக்கோற்பகவரைக் கண்டு என்

மகள் ஒருகாளைபின் போயினள்; அவளைக்கண்டிரோ
என வினவாநிற்றல். ஆறு - வழி. முக்கோற்
பகவர் - திரிதண்டத்தையுடைய அந்தணர்.]

ஒருவெண் குடையிரு நீழன்முக் கோல்கொண் டொழுக்கத்தினல்
வருவெங் களரியைந் தாறுசெல் வீரரு ளீரெழுபார்
மருவெண் டிசைபுகழ் வாணன்றென் மாறையென் வஞ்சிபன்னாள்
பொருவெஞ் சுடரிலை வேலொரு காளைபின் போயினளே.

## மிக்கோரேதுக்காட்டல்.

[அவ்வாறு வினவிய செவிலிக்கு முக்கோற்பகவர் என் மகள்
ஒருகாளை பின் போயினளென்று வருந்தாதொழி; மகளிர்
இருமுதுகுரவரினுஞ் சிறந்த நாயகனை அடைதல் உல
கியல்பெனக் காரணங்காட்டிக் கூறுநிற்றல்.
மிக்கோர் - பெரியோர். ஏது - காரணம்.]

இயங்கா வனமென் மகளொரு காளைபின் னேகினளென்
றுயங்கா தொழியவ் வுலகியல் பாலுவை வும்புயமேய்
வயங்கா டகமதில் சூழ்தஞ்சை வாணன் மணங்கமழ்தார்
புயங்காதல் கொண்டணை தாளய ளார்தந்த பூமகளே.

## செவிலியெயிற்றியோடுபுலம்பல்.

[மிக்கோர் ஏதுக்காட்டித் தேற்றவுந் தேறாது செல்லுஞ்
செவிலி வழியிடை ஓரெயிற்றியைக்கண்டு என் மகள்
போனவழி கூறுயோ என இரங்காநிற்றல்.
எயிற்றி - பாலைநிலப்பெண்.]

செருமக ளேயும் புயத்தய லான்பின் செலவிடுத்தென்
ஒருமக ளேயென் றனையயிர்த் தேன்புனை யோவியம்போல
வருமக ளேதஞ்சை வாணனெ ன்ளார் துன்னும் வன்சுரத்தோர்
அருமக ளேயுரை யாயவள் போன வதரெனக்கே.

## செவிலிகுரவோடுபுலம்பல்.

[எயிற்றியை வினவிச் செல்லாநின்றவள் என்மகள் ஏதிலன்பின்
னே தனியே செல்லல் கண்டும் இது நினக்குத் தகாதென்று
கூறுத நீ மிகவுங் கொடியையெனக் குரவொடு
புலந்து கூறுநிற்றல். குரவு - குராமரம்.]

இரவேய் குழலியிவ் வேதிலன் பின்செல்ல லென்றுசொல்லாக்
குரவே யறவுங் கொடியைகண் டாய் * கொடித் தேர்கனகந்

* கொடிக்கோகனகம் என்பதும் பாடம்.

# அகப்பொருள் விளக்கம்.

நரவே யெனவந்த சந்திர வாணன் றரியலர்போஞ்
சுரமே யழல்வழி யேதனிப் போனவென் றோகையையே.

## இதுவுமது.

தான்றாயாக் கோங்கந் தளர்ந்து முலைகொடுப்ப
ஈன்றாய்நீ பாவை யிருங்குரவே—ஈன்றாண்
மொழிகாட்டா யாயினு முள்ளெயிற்றாள் சென்ற
வழிகாட்டா யீதென்று வந்து. **திணைமாலைநூற்றைம்பது.**

## செவிலிசுவடுகண்டிரங்கல்.

[குரவொடு புலந்து செல்லாநின்றவள் சுரத்தின்கண்ணே
தலைவியது அடிச்சுவடுகண்டு இரங்கி நிற்றல். சுவடு - நிலத
திலே காலழுந்தியதனாலாயகுறி.]

தொடுசிலைக் கானவ ரோடிய வேற்றுச் சுவடுவையே
அடுசிலைக் காளை யடியவை யேயறிந் தோரறிய
இடுசிலைப் பார்புரக் குந்தஞ்சை வாண ணிசைச்குருகப்
டடுசிலைப் பாவை பதமிவை யேவண்டு பாடுகவே.

## கலந்துடன்வருவோர்க்கண்டுகேட்டல்.

[சுவடுகண்டிரங்கிச் செல்லாநின்றவள் தலைவனுந் தலைவியும்
போலக் கலந்து வருவோர் இருவரைக்கண்டு என் மகளும்
ஒரு செல்வனும் உங்களைப்போல வனபபெயதிக் காட்
டிடைச் செல்லக்கண்டிரோவெனக் கேளாநிற்றல்.]

யானகம் போத வருந்தநும் போல்வனப் பெயதிவெயய
கானகம் போயினர் கண்டனி ரோகறப காடவிசூழ்
வானகம் போர்பயில வானவற் கீநதருள் வாணனறஞ்சைத
தேனகம் போருக மாதனை யாளுமோர் செல்வனுமே.

## கலந்துடன்வருவோர்புலம்பறேற்றல்.

[அவ்வாறு வினவப்பட்டவர் அவ்விருவரும் இத்துணை ஒரிடுகக
ணின்றித் தஞ்சையைச் சென்றணைவர்; நீ புலம்பற்க
எனச் செவிலியைத் தேற்றல்.]

யான்கண்ட வண்ணலு மெண்ணருங் காதலி னேகியவென்
மான்கண் டனகண் மயில்கண்ட மாதரு மாதருமந்
தான்கண்ட தண்ணளிச் சந்திர வாணன் றரியலர்போங்
கான்கண்ட மெய்குளி ரப்பொய்கை சூழ்தஞ்சை காண்பர்களே.

## புதல்வியைக்காணாதுகவலைகூர்தல்.

[அது கேட்ட செவிலி இனித் தலைவியைக் காட்டிடைக் காண லரிதெனத் துன்பமிகுந்து கூறுநிற்றல்.]

நாணினுந் தாரணி கற்புநன் றென்று நயந்து முத்தம்
பூணினும் பாரமி தென்னுமென் பொன்னையிப் போதெனக்குச்
சேணினுஞ் சார்புகழ் வாணன்றென் மாறைமன் சேரலரைக்
காணினுங் காணவந் தோவரி தாலிந்தக் கானிடையே.

### இதுவுமது.

காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந் தனவே
அகலிரு விசும்பின் மீனினும் பலரே
மன்ற விவ்வுல கத்துப் பிறரே. குறுந்தொகை. (கஅ)

### [இதுவுமது]

**கஅஅ. முற்பட மொழிந்த முறையெழு மூன்றுங்**
**கற்பொடு புணர்ந்த கவ்வையின் விரியே.**

இ - ள். "வினவிய பாங்கியின்" என்ற சூத்திரத்திற்றொட ங்கி முன்னரே சொல்லப்பட்ட இருபத்தொன்றும் கற்பொடுபுண ர்ந்த கவ்வையின் விரியாகும் எ - று. (சகூ)

### [மீட்சி]

**கஅகூ. தெளித்தன் மகிழ்ச்சி வினுதல் செப்பலென**
**வெளிப்பட வுரைத்த மீட்சிநால் வகைத்தே.**

இ - ள். மீட்சி என்பது தெளித்தல் முதலிய நால்வகையினை யுடையதாகும் எ - று.

தெளித்தல் - தேற்றுதல். செப்பல் - உத்தரங்கூறல். மீட்சி - மீண்டுவருதல். (உ௦)

### [மீட்சிவிரி.]

**கசூ௦. தலைவிசே ணகன்றமை செவிலிதாய்க் குரைத்தலுந்**
**தலைவன் றம்மூர் சார்ந்தமை சாற்றலுந்**
**தலைவி முன்செல்வோர் தம்மொடு தாம்வரல்**
**பாங்கியர்க் குணர்த்தி விடுத்தலு மாங்கவர்**
**பாங்கியர்க் குரைத்தலு மாங்கவர் கேட்டு**
**நற்றாய்க் குரைத்தலு நற்றாய் கேட்டவன்**

உளங்கொள வேலனை விறுதலு மெனவுடன்
விளம்பிரு மூன்று மீட்சியின் விரியே.

இ - ள். தலைவி சேணகன்றமை செவிலிதாய்க் குரைத்தல் முதலிய ஆறும் மீட்சியின் விரியாகும் எ - று.

இவற்றுள்ளே தலைவி சேணகன்றமை செவிலிதாய்க்குரைத்தல், தலைவன் தம்மூர் சார்ந்தமைசாற்றல் என்னும் இரண்டும் தெளித்தற்குரியன. தலைவிமுன் செல்வோர் தம்மொடு தான்வரல் பாங்கியர்க்குணர்த்தி விடுத்தல், பாங்கியர் நற்றாயக்குரைர்த்தல், என்னும் இரண்டும் மகிழ்ச்சிக்குரியன. நற்றாய தலைமகனுளங் கொள வேலனை விறுதல் என்பது விறுதற்குரித்து. முன் சென்றோர் பாங்கியர்க்குரைத்தல் என்பது செப்பற்குரியது.

தலைவிசேணகன்றமைசெவிலி தாய்க்குரைத்தல்.

[சுரம்போய் மீண்ட செவிலி நற்றாய்க்குத் தலைவி தலைமகனூர் சென்றடைந்தமை கூறுநிற்றல். சேண் - தூரம்.]

ஏடார் மலர்க்குழல் வல்லியை யன்னையித் தீவினையேன்
நாடா விடமில்லை ஞாலத் தகவயி னன்கமலக்
காடார் பழனக் கழனிநன் னாடு கடந்துதன்னூர்
வாடா வளமனைக் கொண்டுசென் றானொரு வள்ளலின்றே.

தலைவன் தம்மூர்சார்ந்தமைசாற்றல்.

[புணர்ந்துபோய மீளாநிற்கையில் தலைவன் தலைமகளுக்கு அவளது ஊரடைந்தமை கூறுநிற்றல்.]

நினையா னெதிர்ப்பட்ட நீடிருங் குன்றிது நீகுடைந்த
சுனையா மதுமலர்ச் சோலைக ளாமுவை தூயவண்டன்
மனையா மிவையினி வாணன்றென் மாறையை வாழ்த்தலர்போல்
இனையா தெழுந்தருண் மானனை யாய்நம் மெழினகர்க்கே.

முன்செல்வோர்தம்மோடு தலைவிதாய்வரல்
பாங்கியர்க்குணர்த்திவிடுத்தல்.

[அவ்வாறு மீளாநின்ற தலைவி சுரத்திடை முன்னுறச் செல்வாரை எனது ஆயத்தார்க்கு எமது வரவினைச் சொல்லுவீரென்று கூறுநிற்றல்.]

புனையல ரேதிலர் காதலந் தாயர் பொறுமையிற்போய்
இனைதுயர் யாதொன்று மின்றிவெங் கானிகந் தியானுமம்பொன்
வனைகழ லானும் வருவதெல் லாஞ்சென்று வாணன்றஞ்சைத்
துணைவுட னேகுகின் றீர்சொல்லு வீரென் றுணைவியர்க்கே.

## முன்சென்றோர் பாங்கியர்க்குரைத்தல்.

[அவ்வாறு சுரத்திடைவேண்டப்பட்டுத் தலைவியூர்க்கு முன்சென்றோர் அவள் மீண்டுவருதலைத் தோழியர்க்குரைத்தல்.]

போதலர்ந் தல்லை முனியுமெல் லோதிப் புனையிழைதன்
காதலனை பின்வரக் கண்டனம் யாங்கண்டல் வேலிமுந்நீர்
மாதலந் தன்னிரு தோள்வைத்த வாணன்றென் மாறைவண்ணச்
சூதலந் தொல்கவிம் மித்திரண் மாமுலைத் தோகையரே.

## பாங்கியர்கேட்டு நற்றாய்க்குரைத்தல்.

[தலைவி மீண்டுவருதல் கேட்ட தோழியர் அதனை நற்றாயக்குக் கூறுநிற்றல.]

வாளேய் விழிநின மயிலனை யாடஞ்சை வாணன்வெற்பில்
வேளே யனைய விடலையின் னேசுர மீண்டினிநங்
கேளேய பதிவரு மென்னநல் லோர்சொல்லக் கேட்டனமிந்
நாளே யனையநன் னாளுள வோசென்ற நாளகளிலே.

## நற்றாய் தலைமகனுளங்கோளவேலனைவினுதல்.

[மகள் வருகின்றாளெனக் கேட்ட தாய நம்மனைக்கே வருமோ தன நெடுநகர்க்கே கொண்டுபோமோ எனத் தலைமகன் குறிப்பறிதறகு வேலனை வினவாநிறறல்.
வேலன - வெறியாட்டாளன.]

நனையாறை நனனகர் மனனவன் வாணன் செழுந்தஞ்சைசூழ
பொனமா திரத்தப புலனுணர் வீசுரம் போயவருவோன
னமானை டெனமனை யிறறரு மோதன்னை யீன்றநற்றாய
நாமா நகருடைக்கு மோசொல்லு வீரொன்று தானெனக்கே.(உக)

[மேற்கூறியவற்றுள் வரைவுக்குரிய கிளவிகள்.]

**கசுக. மடநதையை யுடன்போய் வரைந்து மீடற்கும் அவண்மனை வரைதற்குந் தன்மனை வரைதற்கும் இயைதலு முரிய செவிலிகூற் றொழித்தே.**

இ - ள். முற்சூத்திரத்திற் கூறப்பட்ட மீட்சிக்குரிய கிளவிகள ஆறனுள் செவிலி கூற்றாய தலைவி சேணகன்றமை செவிலிதாயக்குரைத்தல் என்னும் ஒன்றினையும் நீக்கி எஞ்சிய ஐந்தும் மடந்தையை உடன்போயத் தன்னூரிலே வரைந்து மீளுதற்கும் ஆங்கு வரையாது மீண்டுவநது அவளுடைய மனையிலாதல் தன்மனையிலாதல் வரைந்து கோடற்கும் இயைதலும் உரியனவாம் எ - று.

செவிலி கூற்றொழித்து இயைதலுமுரிய என்பதனால் செவிலி கூற்றொழியாமல் ஆறும் இயைதலும் உரிய என்பதும பெறப்படும். (உஉ)

[தன்மனைவரைதல்.]

௧௬௨. வினாதல் செப்பன் மேவலென் றிறைவன்
தனாதில் வரைத லொன்மூ வகைத்தே.

இ - ள். தலைமகன் தன்மனையின்கண்ணே வரைதலானது வினாதலும், செப்பலும், மேவலும் என்று மூவகையுடையதாகுமெ - று. (உ௩)

[தன்மனைவரைதலின்விரி.]

௧௬௩. பணிமொழி நற்றாய் மணனயர் வேட்கையிற்
செவிலியை வினாதலுஞ் செவிலிக் கிகுளை
வரைந்தமை யுரைத்தலும் வரைந்தமை செவிலி
நற்றாய்க் குரைத்தலு முற்றுந் திருவருந்
தலைவியில் வந்துழித் தலைவன் பாங்கிக் [றலுந்
கியான்வரைந் தமைநுமர்க் கியம்புசென் றென்
தானது முன்னே சாற்றிய துரைத்தலும்
என்னுமிவ் வைந்து மின்னிலை வேலோன்
மன்னிய தன்மனை வரைதலின் விரியே.

இ — ள். பணிமொழி நற்றாய் மணனயர்வேட்கையிற் செவிலியை வினாதல் முதலிய ஐந்தும் தலைமகன் தன்மனையினகண்ணே வரைதலின் விரியாகும் எ - று.

இவற்றுள்ளே மணனயர் வேட்கையிற் செவிலியைவினாதல ஒன்றும் வினாதற்குரியது; வரைந்தமை பாங்கி செவிலிக்குரைத்தல், வரைந்தமை செவிலி நற்றாயக்குரைத்தல்; பாங்கி தானது முனனே சாற்றியதுரைத்தல் என்னும் மூன்றும் செப்பற்குரியன; தலைமகன் வரைந்தமை நுமர்க்குச் சென்றியம்பு என்றல என்னும் ஒன்றும் மேவுதற்குரியது.

நற்றாய் மணனயர்வேட்கையிற் செவிலியைவினாதல்.

[உடன்போய் மீண்ட தலைமகன் தலைவியைத் தன்மனைக்குக்
கொண்டுசென்றானாக, நற்றாய் தன்மகளுக்குத் தம்மக
த்தே வதுவைசெய்ய வேண்டும் என்னும் விருப்
பினால், அவ்வாறு செய்யும்படி அவன்றாயைக்

கேட்போமோ எனச் செவிலியை
வினவாநிற்றல்.]

நாமாக மேவினு நம்மனைக் கேவந்து தண்சிலம்பார்
மாமா தினைமணஞ் செயவதற் கேமரு வார்கமலப்
பூமாது கேளவன் புகழ்த்தஞ்சை வாணன் பொருப்பிலினி
ஆமா றுயிரனை யாயசொல்வ மோவவ ரனனையர்க்கே.

இதுவுமது.

நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும்
எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்
சொல்லி னெவனோ மற்றே வெனவேன்
மையற விளங்கிய கழலடிப்
பொயவல் காளையை யீன்ற தாய்க்கே. ஐங்குறுநூறு.

செவிலிக்கிதோவரைந்தமையுரைத்தல்.

[தலைவன் தன்மனையிலே தலைவியை வதுவைசெயதமையைத்
தோழி செவிலிக் குரையாநிற்றல்.]

என்னு மியம்புவ தியாயக்கினி நாமன்னை யின்றுதம்மிற்
கொன்னுரு நித்திலக் கோதைநம் மாதைக் கொடிநெடுந்தேர்க்
கன்னுடர் மண்கொண்ட வாணன்றென் மாறையிற் காதலர்தாம்
நன்னுண் மணம்புணர்ந் தாரென்று தூதர் நவின்றனரே.

வரைந்தமைசெவிலிநற்றாய்க்குரைத்தல்.

[தலைவன் தலைவியை வதுவைசெயதமை தோழிசொல்லக்
கேட்ட செவிலி அதனை நற்றாயக்குக் கூறல்.]

எனைக்கே ளிருநின் றியறறவந் தேமண வின்பமெயதி
அனைக்கேண்மை நண்ணிய வண்ணலபின் னுகநம் மன்னையின்றிம்
பனைக்கே வருமென வருதுசொன் னார்தஞ்சை வாணன்வெறபிற
புனைக்கேழ் நனைக்கழு நீர்க்குழ லாய்சில தூதரின்னே.

தலைவன் பாங்கிக்கு யான்வரைந்தமைநுமர்க்
கியம்புசேன்றேன்றல்.

[தலைவன் தான் தலைவியை வதுவை செய்துகொண்டமையை
அவள் தமர்க்கறிவிப்பாயாக என்று
தோழியொடு கூறல்.]

கோபுரஞ் சோலை கொடிமதின் மாடங் குலாவிமையோர்
மாபுரம் போலுந்தென் மாறை வரோதயன் வாணன்வெற்பில்

நீபுரந் தேதந்த மாதையங் கியாம்வரை நீர்மைபொன்செய்
நூபுரஞ் சூழடி யாயசென் றுகூறு நுமர்தமக்கே.

**பாங்கிதானதுமுன்னேசாற்றியதுரைத்தல்.**

[அதுகேட்டபாங்கி தான் முன்னரே அவன் வரைந்து கொண்டமையை அறிவித்ததை உரைத்தல்.]

அன்னைக் கியம்பின ளுண்டகை யான்முன் னறிந்துதென்னன்
றன்னைப் பணிந்துகுற றேவல்செய யாது சமர்க்கெழுந்த
மன்னைப் புறங்கண்ட வாணனறென் மாறை வரையிலெங்கள்
பொன்னைப் புணர்ந்ததுநுங் கேண்முன்னர் நீபொன் புனைந்ததுவே.

[உடன்போய்வரைந்துமீளுதல்விரி.]

**கசுச. ஆதி யொன்றொழித் தல்லன நான்கும்**
**மாதினை யுடன்போய் வரைந்து மீடற்கும்**
**நீதியி னுரிய நினையுங் காலை.**

இ - ள். ஆராயுங்கால் முற்சூத்திரத்திலே முதற்கணுள்ள மணனயர்வேட்கையிற செவிலியைவினுதல் என்பதொன்றும ஒழித்து மற்றையனவாகிய செவிலிக்கிகுளை வரைந்தமையுரைத்தல் முதலிய நான்கும் உடன்போய் வரைந்து மீளுதற்கும் உரியன வாகும் எ - று. (உரு)

[ஒருவகைமீண்டுவரைதலின்விரி.]

**கசுரு. இருவ ரில்லிற்கு * மியைந்திடு பத்தும்**
**ஒருவகை மீண்டு வரைதலின் விரியே.**

இ - ள். முற்சூத்திரத்திலே சொல்லப்பட்டனவாகிய அவண்மனைவரைதல், தன்மனைவரைதல் என இருவரில்லிற்கும் இயைந்தகிளவிகளின்விரி பத்தும் ஒருவகையாக மீண்டுவரைதல் விரியாகும் எ - று.

அவை மீட்சிவிரியிலே தலைவன் தன்னூர் சார்ந்தமைசாற்றல் முதலிய ஐந்தும் தன்மனை வரைதலின்விரி ஐந்தும் என்க. (உசு)

[உடன்போக்கிடையீடு.]

**கசுசு. போக்கறி வுறுத்தல் வரவறி வுறுத்தல்**
**நீக்க மிரக்கமொடு மீட்சி யென்றாங்**
**குடன்போக் கிடையீ டொருநால் வகைத்தே.**

---

* இயைந்தபன்னொன்றும் என்று பாடங் கொள்வாருமுளர்.

இ - ள். உடன்போக்கிடையீடு போக்கறிவுறுத்தலும், வரவறிவுறுத்தலும், நீக்கமும், இரக்கமொடு மீளுதலும் என நான்கு வகையுடையதாகும் ௭ - று.

நீக்கம் - நீங்குதல். இரக்கம் - இரங்குதல். இடையீடு - இடைவிடல். (உ௬)

[உடன்போக்கிடையீட்டுவிரி.]

கககஎ. நீங்குங் கிழத்தி பாங்கியர் தமக்குத்
தன்செல வுணர்த்தி விடுத்தலுந் தலைமகள்
தன்செல வீன்றாட் குணர்த்தி விடுத்தலும்
ஈன்றாட் கந்தணர் மொழிதலு மீன்றோ
அறத்தொடு நிற்றலிற் றமர்பின் சேறலுந்
தலைவி கண்டு தலைவற் குணர்த்தலுந்
தலைமக டன்னைத் தலைமகன் விடுத்தலுந்
தமருடன் செல்பவ ளவன்புற நோக்கிக்
கவன்றரற் றலுமென நுவன்ற வையாறும்
உடன்போக் கிடையீட்டு விரியா கும்மே.

இ - ள். நீங்குங் கிழத்தி பாங்கியர்தமக்குத் தன்செலவுணர்த்தி விடுத்தல் முதலிய ஆறும் உடன்போக்கிடையீட்டின்விரியாகும் ௭ - று.

இவற்றுள்ளே முன்னையன மூன்றும் போக்கறிவுறுத்தற்குரியன. பின்னையன மூன்றும் வரவறிவுறுத்தல் முதலாகிய மூன்றற்குந் தனித்தனி உரியனவாம்.

## தலைவிபாங்கியர்தமக்குத் தன்செலவுணர்த்திவிடுத்தல்.

[உடன்போகுந் தலைவி சுரத்திடை எதிர்ப்பட்டாரிடத்துத் தான் அவ்வாறுடன்போதலைத் தன்தோழியர்க் குணர்த்தும்படி சொல்லாநிற்றல்.]

வளவேய் மிடைந்த வழிப்படர் வீர்செங்கை வாணன்றஞ்சைத்
தளவேய் நகையென் றுணைவியர் பாற்சென்று சாற்றுமின்போர்க்
களவே ளனையவொர் காளைபின் போயினள் கான்பனிநீத்
திளவேனில் வல்லிபெற் றுங்கெவ்வ நீத்தெழி லெய்தியன்றே.

## தலைவிதன்செலவின்றட்குணர்த்திவிடுத்தல்.

[தன்செலவைப் பாங்கியர்க்குணர்த்தும்படி வேண்டிய தலைவி அதனைத் தன் நற்றாய்க்குணர்த்துமாறு வேண்டுதல்.]

வாயார நுங்களை வாழ்த்துகின் றேன்றஞ்சை வாணன்வெற்பிற்
சாயாத மாதவத் தாழ்சடை யீரன்பர் தம்மொடின்றியான்
போயாறு தேர்மிசைச் செல்வதெல் லாமெங்கள் சேரியிற்சென
றியாயா கியகொடி யாட்கினி தாக வியம்புமினே.

## நற்றாய்க்கந்தணர்மொழிதல்.

[தலைவியால் வேண்டப்பட்ட அந்தணர் அவளுடன் போக்கை நற்றாய்க்குரைத்தல்.]

மருள்கொண்ட சிந்தை மலைகிழ வோயதஞ்சை வாணன்வெ றபில், வெருள்கொண்ட மென்பிணை வென்றகண் ணாள்வெனறி வேல்வலங்கை, அருள்கொண்ட நெஞ்சினொ ரண்ணல்பின் னேய கன் றுளகல்வான், இருள்கொண்ட கொண்டல்செல் லாவரை சூழ மிருஞ்சுரத்தே.

## தமர்பின்சேறலைத்தலைவிதலைவற்குணர்த்தல்.

[உடன்போகாநின்றதலைவி தன்னைத் தேடித் தமர்பின வருதலைத் தலைவற் குரையாநிற்றல்.]

உவலைப் பதுக்கை முரம்புசெல் லாம லுலகமங்கை
தவலைத தவிர்த்த தமிழ்த்தஞ்சை வாணன் றரியலர்போம
கவலைக் கடத்துச் சிலைத்திரை கோலிக் கடும்பகழித்
துவலைப படைக்கட ரேன்றல்பொற் றேர்வங்கஞ் சூழ்கின்றதே.

## தலைவியைத்தலைவன்விடுத்தல்.

[தலைவிதமர் வந்து நெருங்குதலைக் கண்டு தலைவன் அவளை விடுத்தேகல்.]

ஆறலை வெஞ்சிலைக் கானவ ரேலென்கை யம்பொன்றினு
னூறலை யஞ்சல னுண்ணிடை யாய்நும ரேலவர்முன்
சேறலை யஞ்சுவல் செல்வல்பைம் பூகச் செழும்பழுக்காய்த்
தாறலை தண்டலை சூழ்தஞ்சை வாணன் றமிழ்வெற்பிலே.

## தலைவியவன்புறம்நோக்கிக்கவன்றரற்றல்.

[தமர்கைப்பட்ட தலைவி தலைவன் புறங்காட்டிப்போதலை
நோக்கிக் கவலைப்பட்டழுதல்.]

பமா னெனவஞ்சு மெற்காத் தலினவ் விரவிபொற்றேர்
வாமானின் வாழ்வன வாகயன் னூட்டஞ்சை வாணனென்னூர்
போமா னதரிடத் தென்னையர் தோன்றப் புறங்கொடுத்த
கோமான் மணிநெடுந் தேர்நுகம் பூண்ட குரகதமே. (உஅ)

[வேற்றுவரைவு]

கசுஅ. தன்னூர் வரைதலுந் தன்மனை வரைதலும் [ன்
என்னுமிவ் விரண்டொழித்தெவற்றினுங்கிழவோ
அந்தணர் சான்றோர் முன்னிட் டருங்கலந்
தந்து வரைத றகுதி யென்ப.

இ - ள். உடன்போயத் தன்னூரின்கண் வரைதலும், மீண்டு வந்து தன்மனைக்கண் வரைதலும் என்னும் இவையிரண்டுமல்லாத எவ்வரைவின்கண்ணும் தலைமகன் அந்தணரையும் சான்றோரையும் முனனிடடு அருங்கலம் கொடுத்து வரைதல் தகுதி என்று சொல்லுவா அறிஞர் எ - று.

அருங்கலம் - உயர்ந்த ஆபரணம்.

## இவ்வாறுவரைந்துகொண்டுழிக் கண்டோர்கூறுதல்.

[தலைவன் தலைவியை வதுவைசெயது கொண்டதைக்
கண்டோர் கூறுநிற்றல்.]

சேலார் புனல்வையை சூழ்தஞ்சை வாணன்றென் மாறையினம்
வேலா னெனப்பிறர் வேட்டவர் யார்மணம் வெண்டுகிலின்
பாலா ரமளியும் பாற்கட லானது பங்கயக்கண்
மாலா யினனிவ னுந்திரு வாயினண் மாதுமின்றே.

## இதுவுமது.

கயற்கண் ணாளையுங் காமனன் னானையும்
இயற்றி னார்மண மேத்தருந் தன்மையார்
மயற்கை யில்லவர் மன்றலின் மன்னிய
இடற்கை யன்புடை யாரியைந் தார்களே. **சீவகசிந்தாமணி.**

## வரைவியல் முற்றிற்று.

# கற்பியல்.



கற்பு என்னும் கைகோளின் இலக்கணம் கூறுதலால் இவ்வியல் கற்பியல் என்னும் பெயருடையதாயிற்று. கற்பாவது தன் கணவனைத் தெய்வம் என்றுணர்வதோர் கொள்கை. "அது கொண்டானிற் சிறந்த தெய்வம் இன்று எனவும், அவனை இன்னவாறே வழிபடுக எனவும், இருமுதுகுரவர் கற்பித்தலானும் அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும் ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும் ஒழுகும் ஒழுக்கம் தலைமகன் கற்பித்தலானும் கற்பாயிற்று" என்று நச்சினார்க்கினியர் கூறுவர்.

கக௯. பொற்பமை சிறப்பிற் கற்பெனப் படுவது
மகிழ்வு மூடலு மூட லுணர்த்தலும்
பிரிவும் பிறவு மருவிய தாகும்.

இ - ள். பொலிவமைந்த சிறப்பினையுடைய கற்பு என்று சொல்லப்படுவது உள்ளம் மகிழ்தலும், ஊடுதலும், ஊட லுணர்த்தலும், பிரிவும் பிறவும் பொருந்தியதாகும் எ - று.

பிற என்பதனாற் பிரிந்துழி வரும் விகற்பமெல்லாம் கொள்க.

[கற்பின்கிளவிகள்.]

உ00. இல்வாழ்க் கையே பரத்தையிற் பிரிவே
ஓதற் பிரிவே காவற் பிரிவே
தூதிற் பிரிவே துணைவயிற் பிரிவே
பொருள்வயிற் பிரிவெனப் பொருந்திய வேழும்
வளமலி கற்பின் கிளவித் தொகையே.

இ - ள். இல்வாழ்க்கை என்பது முதலாக இங்கே கூறப்பட்ட ஏழும் கற்பு என்னும் கைகோளின் கிளவித்தொகையாகும் எ - று.

[இல்வாழ்க்கை.]

உ0க. கிழவோன் மகிழ்ச்சி கிழத்தி மகிழ்ச்சி
பாங்கி மகிழ்ச்சி செவிலி மகிழ்ச்சியென்
றீங்கு நால்வகைத் தில்வாழ்க் கையே.

இ - ள். இல்வாழ்க்கை என்பது தலைவன் மகிழ்ச்சியும், தலைவிமகிழ்ச்சியும், பாங்கிமகிழ்ச்சியும், செவிலிமகிழ்ச்சியும் என நான்குவகையுடையதாகும் எ - று. (ந)

[இல்வாழ்க்கைவிரி.]

உ0உ. தலைவன் றலைவிமுன் பாங்கியைப் புகழ்தலும்
தலைவனைப் பாங்கி வாழ்த்தலுந் தலைவியை
வரையுநா ளளவும் வருந்தா திருந்தமை
உரையா யென்றலும பெருமக ளுரைத்தலும்
தலைவனைப் பாங்கி வரையுநா ளளவும்
நிலைபெற வாற்றிய நிலைமை வினுதலும்
மன்றன் மனைவரு செவிலிக் கிகுளை [லும்
அன்புற வுணர்த்தலும் வாழ்க்கைநன் றறைத
மணமனைச் சென்று வந்த செவிலி
பொற்றொடி கற்பிய னற்றாய்க் குணர்த்தலும்
நன்மனை வாழ்க்கைத் தன்மை யுணர்த்தலும்
அன்னவர் காத லறிவித் தலுமெனும்
இன்னவை பத்துமில் வாழ்க்கை விரியே.

இ - ள். தலைவன் தலைவிமுன்பாங்கியைப் புகழ்தல் முதலிய பத்தும் இல்வாழ்க்கையின் விரியாகும் எ - று.

இவற்றுள் தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தல் என்பது ஒன்றும் கிழவோன் மகிழ்ச்சிக்குரியது. தலைவனைப் பாங்கி வாழ்த்தல் முதலிய ஆறனுள்ளே பெருமகளுரைத்தல் என்பதொன்றும கிழத்திமகிழ்ச்சிக்குரியது. மற்றைய ஐந்தும் பாங்கிமகிழ்ச்சிக்குரியன. செவிலி நற்றாயச்குத் தலைமகள் கற்பியலுணர்த்தல் முதலிய மூன்றும் செவிலிமகிழச்சிக்குரியன.

## தலைவன் தலைவிமுன் பாங்கியைப்புகழ்தல்.

[நின் உதவியாலன்றோ இவளை அடையப்பெற்றேன்
என்று தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தல்]

நின்மே லடுத்த பசலையின் காரண நின்றுணைவி
என்மே லடுத்த வியல்பினன் றோபெற்ற தேழுலகுந்
தன்மே லடுத்த புகழ்த்தஞ்சை வாணன் றமிழ்க்கிரிநின்
பொன்மே லடுத்தன போற்சுணங் கீன்ற புணர்முலையே,

## தலைவனைப் பாங்கிவாழ்த்தல்.

[தன்னைப்புகழ்ந்த தலைவனை நீ பூவையைப்பிரியாது நெடுங் காலம் வாழ்க எனத் தோழி வாழ்த்தல்.]

தெரியா டகவிதழ்ப் பூங்கொன்றை வேணியுந் தேவியும்போற்
பிரியா துறையப் பெறுகதில் வான்பிறை மானுநெறறிப்
புரியாழ் நிகர்மொழிப் பூவையு நீயும் புணர்ந்தபல்கேழ்
வரியார் சிலையண்ண லேதஞ்சை வாணன்றென் மாறையிலே.

## வருந்தாதிருந்தமை பாங்கி தலைவியை வினாதல்.

[தலைவன் வரையுமளவும் ஏதிலார்கூறும் அலர்மொழியை எவ்வாறு பொறுத்திருந்தாய் என்று தோழி தலைவியை வினவாநிற்றல்.]

கோங்கநன் மாமுகைக் கொங்கைநல் லாய்மணங் கூடுமெல்லை
யாங்கன மாற்றி யிருந்தனை நீயிப மாசயிலந்
தாங்கன மாறத் தலம்புனை வாணன் றமிழ்த்தஞ்சைவாழ்
பூங்கன மார்குழ லாரலர் மாலைப் பொறைசுமந்தே.

## தலைமகள் காரணங்கூறல்.

[தலைவன் கொடுத்ததழையே புணையாகக்கொண்டு பொறுத்தேனென்று தலைமகள் கூறுநிற்றல்.]

மைதோய்ந் தலர்ந்த மலர்த்தடஞ் சூழ்தஞ்சை வாணனென்னார்
மெய்தோய்ந்த செந்நிற வேல்விழி யாய்துயர் வெள்ளம்வெறுபர்
கைதோய்ந் தளிப்ப வசோகத்த வாய்நிறங் கால்வனவாய
நெய்தோய்ந் தனதழை யேபுணை யாக்கொண்டு நீந்தினனே.

## பாங்கிதலைவனைநிலைபெறவாற்றியநிலைமைவினாதல்.

[தலைமகளாற்றியிருந்த காரணங்கேட்ட தோழி நீ எவ்வாறாற்றி இருந்தாயென்று தலைவனை வினவாநிற்றல்.]

அயிரை பரந்த வந்தண் பழனத்
தேந்தெழின் மலர தூம்புடைத் திரள்கால்
ஆம்பல் குறுநர் நீர்வேட் டாங்கிவள்
இளமுலைக் கிடந்து நடுங்க லானீர்
தொழுதுகாண் பிறையிற் றோன்றி யாநுமக்
கரியே மாகிய காலை
பெரிய நோன்றனீர் நோகோ யானே. குறுந்தொகை.

## பாங்கிசெவிலிக்கிருவரன்புமுரைத்தல்.

[மணமனைவந்த செவிலிக்குத் தோழி தலைமகன் தலைமகளது காதற் சிறப்புரைத்தல்.]

வளங்கொண்ட தஞ்சை வரோதயன் மாறன்றென் மாறையன்னாள்
இளங்கொங்கை கொண்டெழு தீரங்கொண் மார்பின்முத்தேற்பவித்தி
விளங்கொண் பிறைநுதல் வேர்தந்து போகம் விளைத்தன்புசேர்
உளங்கொண் டருத்துத லாலன்னை யூர னுவப்புறுமே.

## பாங்கி செவிலிக்கு வாழ்க்கைநலமுரைத்தல்.

[தலைவி இல்லறநடாத்துஞ் சிறப்பைத் தோழி செவிலிக் குரைத்தல்.]

சினவேய சுளியுங் களிற்றண்ணல் வாணனறென் மாறையினம்
மனவே யகலல்குல் வல்லியன் னுண்மறை யோர்முதலாஞ்
சனவே தனைகெடத் தானங்க ளீதலிற் சாலவுநன்
றெனவே நடக்கின்ற தாலன்னை நாடொறு மில்லறமே.

## தலைவிகற்பியல்செவிலிநற்றாய்க்குணர்த்தல்.

[மணமனைச்சென்று வந்த செவிலி நற்றாயக்குத் தலைவியது கற்பறிவியாநிற்றல்.]

ஒன்றோ நமக்குவந் தெய்திய நன்மை யுடனெதிர்ந்தார்
வனறோ லமரவென்ற வாட்படை வாணன்றென மாறையில்வாழ்
நனறோகை கறபி னிலைமையெண் ணுதெதிர் நின்றுவெநகிட்
டலறோ வடக்கிருந தாண்மடப் பாவை யருந்ததியே.

## செவிலிநற்றாய்க்கு நன்மனைவாழ்க்கைத்தன்மைகூறல்.

[கறபறிவித்த செவிலி தலைவியது வாழ்க்கைநலமுரைத்தல்.]

விணமே லமரர் விரும்பம ராவதி வெள்ளமுந்நீர்
மணமே லடைந்தன்ன வாழ்க்கைய தானது வாணன்றஞ்சைப
பணமே லளிமுரல் குங்குமத் தோளவர் பங்கயம்போற்
கணமே லருள்பெற்று வாழ்மட மாதர் கடிமனையே.

## செவிலிநற்றாய்க்கிருவர்காதலுமறிவித்தல்.

[வாழ்க்கை நலமுரைத்த செவிலி இருவர்காதலும் மருவுதல் கூறாநிற்றல்.]

நனையகத் தல்கிய நாண்மல ரோதி நயந்துறையும்
மனையகத் தல்லிடை வைகுத லாற்றஞ்சை வாணனென்னோர்

வினையகத் தல்குதல் செல்லுவ ரேனுமவ் வேந்தர் பொற்றேர்
முனையகத் தல்கல்செல் லாதொரு நாளு முகிழ்நகையே.

[பரத்தையிற்பிரிவு.]

**௨0௫. வாயில் வேண்டல் வாயின் மறுத்தல்
வாயினேர் வித்தல் வாயி னேர்தலென்
றூய பரத்தையி னகற்சிநால் வகைத்தே.**

இ - ள். பரத்தையிற்பிரிவு வாயில்வேண்டலும், வாயின்மறுத்தலும், வாயினேர்வித்தலும், வாயினேர்தலும் என நான்குவகையுடையதாகும் எ - று.

நேர்வித்தல் - உடன்படுவித்தல். நேர்தல் - உடன்படல். அகற்சி - பிரிவு. (௫)

[உணர்த்தவுணரூஉடல்.]

௨0௪ காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்
கேதுவீ தாமிவ் விறைவிக் கென்றலும
தனித்துழி யிறைவி துனித்தழு திரங்கலும்
ஈங்கிது வென்னெனப் பாங்கி வினாதலும்
இறைமகன் புறத்தொழுக் கிறைமக ளுணர்த்த
தலைவியைப பாங்கி கழறலுந் தலைவி [லும்
செவ்வணி யணிந்து சேடியை விடுப்புழி
அவ்வணி யுழையர்கண் * டழுங்கக் கூறலும்
பரத்தையர் கண்டு பழித்தலும் பரத்தையர்
உலகிய னோக்கி விடுத்தலிற் றலைவன்
வரவுகண் டுவந்து வாயில்கண் மொழிதலும்
வரவுணர் பாங்கி யரிவைக் குணர்த்தலும்
முதிரா விளமுலை யெதிர்கொண்டு பணிதலும்
புணர்ச்சியின் மகிழ்வுமென் றுரைத்தபன் னொன்
உணர்த்த வுணரு மூடற் குரிய. [றும்

இ - ள். காதலன் பிரிவுழிக்கண்டோர் புலவிக்கேதுவீதாமிவ்விறைவிக்கென்றல் முதலிய பதினொன்றும் உணர்த்த உணரும் ஊடற்குரியனவாகும் எ - று.

உணர்த்தவுணரூமூடலாவது தெளிவித்தலாலே தெளிவு பெறும் ஊடல்; தீர்க்கத்தீரும் ஊடல் என்றவாறு. உணர்த்தல் -

* அழுங்கிக் கூறல் என்று கொள்வாருமுளர்.

தெளிவித்தல். உணர்த்தல் என்பதற்கு ஊடல் தீர்த்தல் என நச்சி ஞர்க்கினியர் உரை கூறுவர். ஊடலாவது ஒருவரை ஒருவர் நணு காராகி உரைமறுத்திருத்தல்.

## காதலன்பிரிவுழிக்கண்டோர் இத்தலைவியின் புலவிக்கு ஏதுகாரணம் என்றுரைத்தல்.

[தலைவனைப் பரத்தையர் சேரிக்கட் கண்டோர் கூறல்.]

மாறையர் காவலன் வாணன்றென் றஞ்சையில் வாணுதறவிவ்
வாறடர் காரண மாகுமென் றேகொங்கை யானையுடன்
சாறயர் வீதி யரிபபறை யார்ப்பத தயங்குசுழற
குறையர் சூறைகொள் வான்வய லூரனைச் சூழநதனரே.

## தனித்துழியிறைவி துனித்தழிதிரங்கல்.

[தலைவன் பரத்தையிற்பிரியத் தனிமையடைந்த தலைவி துன்பமுற்று வருந்தல்]

வன்போ தணிதொங்கல் வாணனறென் மாறை மகிழ்நர் நம்மேல்
அனபோடு நனனெஞ் சறிவற போக வழலுள்வெந்த
பொன்போ னிறங்கொண் டிரவுங்கண் ணீரும் புலாவதுபாரத
தென்போ லெவ்வரிங்க னேயிலை யாம மிருபபவரே.

## ஏங்கிதுவென்னெனப்பாங்கிவினுதல்.

[நீ இவ்வாறு துன்பமுற்று வருந்துவதற்குக் காரணமென்ன எனத் தோழி தலைவியை வினாவல்]

ஏமமா திரமும் புரவலாத் தேடி யிரந்துழல்வோர
நமமா துயரந் தணித்தருள் வாணன் றமிழ்த்தஞ்சைவாழ்
நம்மாவி யன்னவர் நாடொறு நாடொறு நல்கவுநீ
விம்மா வருந்துவ தென்பிரிந் தாரின விளங்கிழையே.

## தலைவன்புறத்தொழுக்குத்தலைவியுணர்த்தல்.

[தான் துயருறுவதற்குத் தலைவன் பரத்தமை காரண மென்று தலைவி கூறுகிறதல். புறத்தொழுக்கு பரத்தையரிடஞ் செல்லுகை.]

தாராக நல்கினர் காரிகை யாயதஞ்சை வாணன்றன்னைச்
சேரா தவரென்னத் தீவினை யேனையச் செங்கண்வனகட்
காரான் கழனிக் கரும்பினஞ் சாயக் கதழ்ந்துசெந்நெல்
ஆரா தயலிற்பஞ் சாயாரு மூர ரயலவர்க்கே.

### தலைவியைப்பாங்கிகழறல்.

[அதுகேட்ட பாங்கி அவர் புறத்தொழுக்கைக் கூறல் நமக்குத் தகாது என்று தலைவியை இடித்துரைத்தல்.]

புனையலங் காரநங் கற்பியல் போற்றியும் போற்றருஞ்சீர்
மனையறம் பாலித்தும் வாழ்வதல் லாற்றஞ்சை வாணனன்று
டனையவண் டார்குழ லாரணங் கேநமக் கன்பரிநாள்
இனையரென் றுர்வமில் லாவுரை யாட லியல்பல்லவே.

### தலைவிசெவ்வணியணிந்துசேடியைவிடுப்புழி அவ்வணி உழையர்கண்டழுங்கக் கூறல்.

[பூப்பறிவுறுத்தற்குத் தலைவி செவ்வணி யணிந்து சேடியை விடுத்ததை உழையர் கண்டு அலர் தூற்றுவார் வருந்தக்கூறல். செவ்வணி - சிவந்தபூ முதலியன. உழையர் - அணுக்கர்.]

வேளாண் மரபு விளக்கிய வாணன்மின் னார்கழல்சூழ்
தாளான் வளங்கெழு தஞ்சையன் னீர்சங்கந் தந்தநன்னீர்
தோளா மணியன்ன தொல்குல வோடையிற் றோன்றியபூ
வாளா வலர்தொடுப் பார்க்கெங்ங னேவந்து வாயத்ததுவே.

### பரத்தையர்கண்டுபழித்தல்.

[பரத்தையர் செவ்வணியணிந்து சென்ற சேடியைக் கண்டு பழித்துரையாடாநிற்றல்.]

படியொன்று சாலி யனையவர் சேரிப் படர்பவளக்
கொடியொன்று நீல மலர்ந்தது காட்டக் கொடியவெமடோா
வடியொன்று கூரிலை வேல்வல்ல வாணன்றென் மாறையிறபொற
றொடியொன்று தோண்மட வார்சேரி வாயவந்து தோன்றியதே.

### தலைமகன்வரவுகண்டுவந்துவாயில்கண்மொழிதல்.

[செவ்வணி கண்ட தலைவன் பரத்தையர் சேரியினின்று தன் மனைக்கண் வருதலைக்கண்டு வாயிலவர் தம்முட் கூறுநிற்றல்.]

வாருந்து பச்சிள நீர்முலை யார்மதன் வாணன்றஞ்சை
யாருந் தொழத்தகு மெம்பெரு மாட்டித னேவலினுற்
சேரும் பரத்தையர் சேரியி லேசென்ற சேடியைக்கண்
டேருந் திரைப்புன லூரன்வந் தானின் றுலகியற்கே.

### பாங்கிதலைவிக்குத்தலைவன்வரவுணர்த்தல்.

[வாயிற்கண்வந்து நின்ற தலைவனது வரவைத்
தோழி தலைவிக்கறிவித்தல்.]

தள்ளா வளவயல் சூழ்தஞ்சை வாணன் றரியலர்போல்
உள்ளா துனைப்பண் டகன்றன ராயினு முள்ளியிப்போ
தெள்ளாது வந்துன் கடையினின் றூர்நம் மிறைவர்குற்றங்
கொள்ளா ததிர்கொள்வ தேகுண மாவது கோமளமே.

### தலைவனைத்தலைவியேதிர்கோண்டுபணிதல்.

[வாயிற்கண் வந்துநின்ற தலைவனைத் தலைவி தோழியாலேவப
பட்டு எதிர்கொண்டு வணங்கல்.]

மருவிற் பெருநல மன்னுவ தாந்தஞ்சை வாணன்வெற்பர்
ஒருவிற் பசலை யுருக்குவ தாநமக் கூடலெவ்வா
றிருவிற் புருவ விளங்கொடி யேயெய்து மெய்தலிலாத்
திருவிற் புனைநறுந் தார்வரை மார்பர் திருமுனின்றே.

### புணர்ச்சியின்மகிழ்தல்.

[ஊடறீர்ந்து தலைவனுந் தலைவியும் புணர்ச்சியெய்தி மகிழ்தல்.]

மன்னவர் காம நெடுங்கடல் வாணன்றென் மாறையன்னாள்
தொன்னலம் வார்முலை மத்தந் தழீஇத்தடந் தோளிணையாம்
பன்னக நாணிற் கடைந்திதழ் வார்திரைப் பட்டநன்னீர்
இன்னமிழ் தாரந்திமை யோரமை யாவின்ப மெயதினரே. (சு)

[உணர்த்தவுணராவூடல்.]

உ0ரு. வெள்ளணி யணிந்து விடுப்புழிப் புள்ளணி
மாலைவே லண்ணல் வாயில் வேண்டலும்
தலைவிநெய் யாடிய திருவை சாற்றலும்
தலைவன் றன்மனத் துவகை கூர்தலும்
தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றலும்
தலைவி யுணர்ந்து தலைவனொடு புலத்தலும்
பாணன் முதலாப் பாங்க னீறாப்
பேணிய வாயில்கள் பெரியோன் விடுத்துழி
மறுத்தலும் விருந்தொடுவந்துழிப்பொறுத்தல்கண்
டிறையோன் மகிழ்தலு மிறைமகள் விருந்துகண்
டொளித்த வூடல் வெளிப்பட னோக்கிச்

சீறே லென்றவள் சீறடி தொழுதலுமிஃ
தெங்கையர் காணி னன்றன் றென்றலும்
அங்கவர் யாரையு மறியே னென்றலும்
காமக் கிழத்தியைக் கண்டமை பகர்தலுந்
தாமக் குழலியைப் பாங்கி தணித்தலும்
தணியா ளாகத் தலைமக னூடலும்
அணிவளைப் பாங்கி யன்பிலை கொடியையென்
றிணர்த்தார் மார்பனை யிகழ்தலும் பிறவும்
உணர்த்த வுணரா வூடற் குரிய.

இ - ள். வெள்ளணியணிந்து விடுப்புழித் தலைவன் வாயில் வேண்டல் முதலிய பதினொன்றும் பிறவும் உணர்த்தவுணரா ஊடலுக்குரியனவாகும் எ - று.

உணர்த்தவுணராவூடலாவது தெளிவித்தலாலே தெளிவுபெறாத ஊடல்; தீர்க்கத்தீராவூடல் என்றவாறு. உணர்த்தல் - ஊடறீர்த்தல். வெள்ளணி - வெள்ளாடை முதலியன. புள் - வண்டு. நெய்யாடுதல் - புதல்வனைப் பயந்தபின் எண்ணெய் அப்பி முழுகுதல். பிற என்பதனால் பாணன் கூறல், பாணனைச் சொல்லல் முதலியனவும் வரும்.

## வெள்ளணியணிந்துவிடுப்புழித்தலைவன்வாயில்வேண்டல்.

[தலைவி புதல்வற்பயந்து வெள்ளணியணிந்து அதனைத்தலைவற் கறிவுறுத்தற்குச் சேடியை விடுப்ப அவன் தலைவி தன்னை மறுது ஏற்றுக்கொள்ளுதற்கு அவளை வாயிலாகுமாறு வேண்டுதல்.]

என்பாற் குறையை நினைந்து மறுதெதிர் கொள்ளவல்லே
தன்பாற் புலவி தணிசென்று நீதஞ்சை வாணன்வையம
அன்பாற் பரவும் புகழுடை யானரு ளேயனையாள்
உன்பாற புலவி யுருள்வண்ண வார்குழ லொண்ணுதலே.

## தலைவிநெய்யாடியதிதனைசாற்றல்.

[புதல்வனைப் பயந்து தலைவி நெய்யாடியதனைத் தோழி தலைவற்குரைத்தல்.]

மலர்புரையயோர்கொண்டவாட்கணெங்கோமங்கைவாணன்றஞ்சைப்
பலர்புகழ் பாலற் பயந்துநெய யாடினள் பாங்கெவர்க்கும்
அலர்புரை நீடொளி யாடியுட் பாவையன் னாட்குளநீர்
புலர்புன லூரவென் னேதிரு வுள்ளமிப் போதுனக்கே.

### தலைவன்தன்மனத்துவகைகூர்தல்.

[தலைவி நெய்யாடியது கேட்டுத் தன்மனத்துத் தோன்றிய உவகையைத் தலைவன் தோழிக்குரைத்தல்.]

மைபணி வேல்விழி வாணுதல் கூர்ந்தது வாணன்றஞ்சைக்
கொய்யணி நாண்மலர்க் கொம்பரன் னாள்குழ லிபயந்த
நெய்யணி மேனியி லையவி பூண்ட நிலையறிந்தே
சையணி வால்வளை யைக்கண்ட நாளினுங் காதன்மையே.

### பாங்கிதலைவிக்குத்தலைவன்வரல்சாற்றல்.

[புதல்வன பிறந்தமைகேட்டுத் தலைவன் விரைந்து வந்தமையைத் தோழி தலைவிக்குரைத்தல்.]

ஏரார் புதல்வன பிறந்தனன் வாழிய வென்னுமுன்னே
வாரார் வளமனை வந்துநின் றார்கங்குல் வாணன்றஞ்சை
நீராவி நில நெடுங்கண்மின னேநின்னை நீபடந்தலைமற
றோரா தொழிகுவ ரோபெரி யோர்தஞ் சிறுவனையே.

### தலைவியுணர்ந்துதலைவனொடுபுலத்தல்.

[தலைவன் வரவுணர்ந்த தலைவி அவன் கொடுமை நினைந்து புலந்து கூறுநிற்றல்]

வயங்கே முலகும் புரக்கின்ற வாணன்றென் மாறையன்ன
நயங்கேழ் பெருவள நல்குநல் லூர நயந்துநண்ணி
முயங்கேல் சிறுவற பயந்தவென் மேனியின் முத்துவடந்
தயங்கே ரகமுழு தும்பழு தாமது தானினக்கே.

### தலைவிதலைவன்விடுத்தவாயில்களைமறுத்தல்.

[வாயில் வேண்டிய பாணனோடு தலைவி வெகுண்டு கூறுநிற்றல்.]

தலையா யதன்மை யூரற்கு வாணன் றமிழ்த்தஞ்சைசூழ்
மலையா கியமதில் வையைநன் னாட்டெங்கை மான்படுக்குங்
கலைபாகு நின்னிசைக் கண்ணிகொண் டேதிரி கன்றுதின்னிப்
புலையா கடக்கவெம் மிற்போக போக புறங்கடையே.

### பாணன்கூறல்.

[தலைமகள் வெகுண்டுரையாநிற்ப வாயில்பெறாது பாணன் புலந்து கூறுநிற்றல்.]

நினக்கே தகுநின் னெடும்புன லூரனு நீயுமவன்
றனக்கே தகுவை தமிழ்த்தஞ்சை வாணன் றடங்கிரிசூழ்
புனக்கே கடமன்ன நின்னடி போற்றிப் புகன்றகன்றும்
எனக்கே தகுமிகை யாலெம் பிராட்டி யெறிந்தகல்லே.

### தலைவி விறலிவாயின் மறுத்தல்.

[பாணன் மறுக்கப்பட்டுப் போனபின் வாயில்வேண்டிவந்த விறலிக்குத் தலைவி வாயின் மறுத்தல்.]

வண்புன லூர்வையை சூழ்தஞ்சை வாணனை வாழ்த்தலர்போல்
கண்புன லூருமென் காதல்கண் டேநின் கடைத்தலைக்கே
தண்புன லூரன்வந் தானென்று சாற்றினை தானமுறப்
பண்புன லூர்களெல் லாம்பாடி யேற்றுண்ணும் பாண்மகளே.

### விருந்தோடுவந்துழித்தலைவிபொறுத்தல்கண்டு தலைவன் மகிழ்தல்.

[பலவாற்றானும் வாயின் மறுக்கப்பட்டு விருந்தொடு மனைக்கண் வந்தானைத் தலைவி கண் சிவப்பாறி எதிர்கொண்டமை நோக்கித் தலைவன் மகிழ்ந்து கூறல்.]

புரவே யெதிர்ந்த நமக்கு விருந்தின்று போலவென்றும்
வரவே புணர்த்தவெம் மாதவம் வாழிய வாணன்றஞ்சைக்
குரவேய கருமுகிற் கொந்தள பாரக் குரும்பைகொங்கை
அரவேய நுடங்கிடை யாள்விழி யூர்சிவப் பாற்றுதற்கே.

### ஊடல்வெளிப்படநோக்கிச்சிறேலென்றவள்சிறடிதொழல்.

[விருந்து கண்டொளித்த தலைவியது ஊடல் பள்ளியிடத்து வெளிப்படல்கண்டு என்பிழை பொறுத்தி என்று தலைவன் அவளடிபணிதல்.]

தெரியோர் பொருட்டன்று தேர்வின்றி யூடல் செயிர்த்தவர்க்குக்
கரியோர் தெளித்தென்ன காரணங் காட்டுவர் காணுண்டுதேன்
வரியோர் தொடைப்புயன் வாணன்றென் மாறை மலர்த்திருவே
பெரியோர் பொறுப்பரன் றேசிறி யோர்கள் பிழைத்தனவே.

### இஃதெங்கையர்காணினன்றன்றென்றல்.

[நீர் எனது அடிபணிதலை எமது தங்கையராகிய பரத்தைய காணின் என்னைய்முடியும் என்று தலைவி கூறல்.]

எண்போன நெஞ்சமு நீருமென் பாத மிறைஞ்சுதனுங்
கண்போலு மெங்கையர் காணினன் றேகயன் மாதிரத்துத்
திண்போ தகந்தொறுந் தீட்டிய வாணன் செழுந்தஞ்சைசூழ்
வண்போ தளவிய நீர்வையை நாட்டுறை மன்னவரே.

## அங்கவர்யாரையுமறியேனென்றல்.

[தலைவன் நீ குறிக்கும் பரத்தையரொருவரையும்
யான் அறியேன் என்று கூறல்.]

மன்னும் புலவியை மாறறியுந் தேறறியும் வல்லவண்ணம்
இன்னுந் தெளிந்திலை யென்னேயென் னேயெனசெய கேனிதற்கு
முன்னம் படிந்து முழுகுநன் னீர்க்கங்கை முன்னுறையும்
அன்னம் படியுங்கொ லோவுவ ராழியி லாரணங்கே.

### இதுவுமது.

பாவைநீ புலவியி னீடல் பாவியேற
காவியொன் றிரண்டுடம் பல்ல தூற்றுநீர்க்
கூவல்வாய் வெண்மணல் குறுகச் செல்லுமே
மேவிபபூங் கங்கையுள் விழைநத வன்னமே. சீவகசிந்தாமணி.

## தலைவிகாமக்கிழத்தியைக்கண்டமைபகர்தல்.

[நீ பொயகூறவேண்டா யான் நின் பரத்தையைக்
கண்டேன் என்று தலைவிகூறல்.]

போயே தெருவிற் றனிவிளை யாடும் புதல்வறபுல்ல
நீயே நிலையல்லை நின்மக னேயிவ னீயுமவன்
ருயே வருகெனச் சேயன்ன வாணன் றமிழ்த்தஞ்சைமான்
ஏயே யெனநிற்ற லானறிந தேன்றன்னை யெங்கையெனறே.

## பாங்கிதலைவியைப்புலவிதணித்தல்.

[காமக்கிழத்தியைக் கண்டமைகூறிப் புலந்த தலைவியைத்
தோழி ஊடறணிவித்தல்.]

மாவா ரணமன்ன வாணன்றென் மாறைநம் மன்னர்நின்னைப்
பாவாய பணியவும் பார்க்கிலை நீயிடப் பாகமங்கை
தாவாத சங்கரன் கங்கைதன் கொங்கை தழீஇயிதழிப்
பூவா சடைமுடி மேல்வைத்த போதும் பொறுத்தனளே.

## தலைவிபுலவிதணியாளாகத்தலைவனூடல்.

[பாங்கி தணிக்கத் தணியாது தலைமகள் மேன்மேலும் ஊடா
நிற்கத் தலைவன் புலந்துரைத்தல்.]

தழங்கார் புனல்வையை சூழ்தஞ்சை வாணன் றனதருள்போற்
பழங்காத லெண்ணலென் பேதைநெஞ்சேயிவள்பண்டுபைம்பொற்
கழங்கா டிடமுங் கடிமலர்க் காவுங் கடந்துபுள்ளும்
வழங்கா வழிநமக் கோர்துணை யாய்வந்த மானல்லளே.

### பாங்கிதலைவனையன்பிலகொடியையென்றிகழ்தல்.

[புலந்துரைத்த தலைவனைத் தோழி நீ அன்பில கொடியை என்று நெருங்கிக் கூறல்.]

மைந்நாண் மலர்த்தொடை வாணன்றென் மாறையெம் மன்னருவர்
தீந்நாண் முயங்கி யமிழ்தென வார்ந்தனி ரார்வமுற்றும்
முந்நாண் மதிநுதன் மென்முலை மாதை முனிந்து நஞ்சென
நிந்நாண் மிகவுவர்த் தீர்புல வாநிற்றி ரெங்களையே.

[இதுவுமது.]

உ0சு. ஆயிழை மைந்தனு மாற்று மையுமே
வாயி லாக வரவெதிர் கோடலும்
மணந்தவன் போயபின் வந்த பாங்கியோ
டிணங்கிய மைந்தனை யினிதிற் புகழ்தலும்
தலைவனைப் புகழ்தலுஞ் சிலைநுதற் பாங்கி
மனைவியைப் புகழ்தலு மினையவை பிறவும்
அனைவகை மொழிந்த வதன்பாற் படுமே.

இ-ள். மகனும் ஆற்றுமையும் வாயிலாகத் தலைமகனைத் தலைவி வரவெதிர்கோடல் முதலாகப் பாங்கி மனைவியைப் புகழ்தலீறாகச் சொல்லப்பட்டனவும் பிறவும் அவ்வாறு சொல்லப்பட்ட உணர்த்த உணரா ஊடற்கு உரியனவாகும் எ - று.

இவைகளை வேறுகூறியது மேலிரண்டு சூத்திரத்தும் கூறியவைபோலப் பயின்று வாராமை நோக்கி என்க.

### மகனுமாற்றுமையும்வாயிலாகத்தலைவிவரவெதிர்கோடல்.

[பின்னும் பரத்தைமாட்டுப் பிரிந்தானென்று கேட்டுப் புலந்து வாயின்மறுத்த தலைவி வழியிடைநின்று விளையாடுமெ புதல்வனை எடுத்தணைத்து அவனும் தன் ஆற்றுமையும் வாயிலாக மனைக்கண் வந்த தலைவனைப் புலவி தீர்ந்து எதிர்கொள்ளல்.]

வெள்ளம் பரந்தன்ன வேட்கைசென் றுலு மிகப்பெரியோர்
உள்ளஞ் சிறியவர் மேற்செல்வ ரோவொளிர் கோமளஞ்செய்
வள்ளங் கமல மலர்த்தஞ்சை வாணன்றென் மாறையன்னப்
புள்ளம் புனல்வய லூரபுன் காமம் புகல்வதன்றே.

### வந்தபாங்கியோடுமைந்தனைப்புகழ்தல்.

[தலைவன் ஊடறீர்த்துப் புணர்ந்துபோயபின் வந்த பாங்கி

போடு அவன் மனைக்கண் வருதற்குக் காரணமான
மைந்தனைத் தலைவி புகழ்தல்.]

இருமையி லேயும் பயன்களெல் லாந்தன்னை யீன்றநமக்
கொருமையி லேவந் துறத்தகைந் தானமைந் தனெஞ்சுடர்போல
வருமயி லேகொண்டு மாதஃதந் தானன்ன வாணன்றஞ்சைத்
திருமயி லேயனை யாயபுன லூரனைத் தேருடனே.

## தலைவிதலைவனைப்புகழ்தல்.

[மைந்தனைப் புகழ்ந்த தலைவி பின்னர்த்
தலைவனையும் புகழ்ந்துரைத்தல்.]

கொண்டாணிற் றுன்னிய கேளிர்மற றிலைக் குறிப்பினென்று
தண்டா தவர்சொன்ன சால்புகண் டேன்றல மேழுபுரக்கும்
வண்டார மலர்பபுயன் வாணன்றென் மாறை மகிழ்நர்முன்னுள
உண்டா கியபழங் கேண்மையிந் நாளு மொழிந்திலரே.

## பாங்கிதலைவியைப்புகழ்தல்.

[தலைவன் செய்த கொடுமைகளை மறந்து அவன் அன்பைப்
புகழ்ந்த தலைவியின் கற்பைத் தோழி புகழ்தல்.]

சிறந்தார் புகழ்தருந் தீம்புன லூரன்செய தீமையெல்லாம்
மறந்தார்வ மெய்தி வணங்குத லாலிவள் வாணன்றஞ்சை
நிறந்தா ரகையன்ன நித்திலம் போலு நெடுங்குலத்திற
பிறந்தார் நிறைந்தகற போர்வடி வேபெற்ற பெற்றியளே. (அ)

## [இதுவுமது.]

### உ0எ. மூன்று சூத்திரத்து மொழிந்தவை யெல்லாம் ஆன்ற பரத்தையி னகற்சியின் விரியே.

இ - ள். மேலே வந்த "காதலன் பிரிவுழி" என்பது முதலிய மூன்று சூத்திரத்திலும் சொல்லப்பட்டவைகள் யாவையும் பரத்தையிற்பிரிவின் விரியாம் எ - று.

மேற்கூறிய கிளவிகளெல்லாம் வாயில்வேண்டல் முதலிய வகைகள் நான்கிற்கும் ஏற்குமாறு அறிந்துகொள்க. (க)

## [பிரிவின்வகை.]

### உ0அ, பிரிவறி வுறுத்தல் பிரிவுடன் படாமை பிரிவுடன் படுத்தல் பிரிவுடன் படுதல்

பிரிவுழிக் கலங்கல் வன்புறை வன்பொறை
வருவழிக் கலங்கல் வந்துழி மகிழ்ச்சியென்
றொருமையிற் கூறிய வொன்பது வகைய
கல்வி முதலா வெல்லாப் பிரிவும்.

இ - ள். ஓதற்பிரிவு முதலிய பிரிவுகள் எல்லாம் பிரிவறிவுறுத்தல் முதலாக இங்கே சொல்லப்பட்ட வகைகள் ஒன்பதினையுமுடையனவாகும் எ - று.

ஒருமையிற்கூறல் - ஒருதன்மைபற்றிக்கூறுதல்.

[ஓ த ற் பி ரி வு.]

**பாங்கிதலைவிக்கு ஓதற்பிரிவுணர்த்தல்.**

[வரைந்துகொண்ட பின்னர்த் தலைவன் கல்விகாரணமாகப் பிரியலுற்றதைத் தோழி தலைவிக்குக் கூறுநிற்றல்.]

மல்வித் தகங்கொண்ட தோளுடை யான்றஞ்சை வாணன்றெல்சீர்
நல்வித் தகன்புவி நாவில்வைத் தோன்வையை நாடனையாய
கல்வித் தடங்கட னீந்திய காவலர் கற்றவர்முன்
சொல்வித்த வென்றழ லார்சுரம் போகத் துணிந்தனரே.

**பிரிந்துழித்தலைவி கார்கண்டுவருந்தல்.**

[தலைவன் ஓதுதற்குப் பிரிந்தபின்னர் அவன் குறித்த கார்ப்பருவம் வருதல்கண்டு தலைவி வருநதாநிற்றல்.]

யாணர்க் குழன்மொழியென்செய்குவேன்கல்வியெல்லையெல்லாம்
காணப் பிரிந்தவர் காண்கில ராற்கடன் மேயந்துதஞ்சை
வாணற் கெதிர்த்தவர் மங்கையர் போலுமென வல்லுயிரின்
ஊணற்ப மென்னவெண் ணுவரு மேக முருமுடனே.

**வருந்தியதலைவியைப் பாங்கியாற்றுவித்தல்.**

[கார்கண்டு வருந்திய தலைவியை இக்கார்ப்பருவம் தலைவன் வருதற்கு நிமித்தமென்று கூறித் தோழி ஆற்றுதல்.]

காதற் கயம்படிந் தூன்றொடு காமக் கனிநுகரா
தோதற் ககன்ற வுணர்வுடை யோருடை நீருலக
மாதர்க்க மைந்தருள் வாணன்றென் மாறை வரக்கடவார்
ஆதற் கணங்கனை யாய்புய லைது வறிந்தருளே.

[காவற்பிரிவு.]

## பாங்கிதலைவிக்குக்காவற்பிரிவுணர்த்தல்.

[தருமநூல் விதியால் தலைவன் நாடு காப்பான் பிரியா நின்றதைத் தோழி தலைவிக்கறிவியாநிற்றல்.]

விண்காவல் கொண்ட திலோத்தமை தான்முதன் மெல்லியலார்
சணகாவல் கொண்டருள் காரிகை காவலர் கார்க்கடல்சூழ்
மண்காவல் கொண்ட மனத்தின ராயினர் வாணன்றஞ்சைப்
பண்காவல் கொண்ட மொழிச்செய்ய வாயிதழ்ப் பைங்கிளியே.

## தலைவிகூதிர்கண்டு வருந்தல்.

[தலைவன் நாடுகாப்பான் பிரிந்தபின் தலைவி கூதிர்ப்பருவம் வருதல்கண்டு வருந்தாநிற்றல்]

மன்னுயிர் காவலன் வாணன்றென் மாறையில் வந்தளியாா
என்னுயிர் காவல ரேந்திழை யாயித டம்புலாத்திக்
கொன்னுயிர் வாடைக் கொடும்பனி நீரிற் குளிர்குழைத்துப்
பின்னுயி ராமலென் மேற்பூசு நாளுமென் பேசுவதே.

## வருந்தியதலைவியைத்தோழியாற்றுவித்தல்.

[அவ்வாறு வருந்திய தலைவியைக் கூதிர்ப்பருவங் கண்டு தலைவர் வந்தாரெனத் தோழி ஆற்றுவித்தல்.]

வரறகால மென்றென் றெனப்பல கூடல் வளைத்துதிரம்
விரறகால வினறு மெலியன்மின் னேசென்று மேதினிகாத்
துரறகால குஞ்சர மஞ்ச மஞ்சூர்நதுறை வீசுகின்ற
சரறகாலம் வநதடைந் தார்தஞ்சை வாணன் றமிழ்வெற்பரே.

[தூதிற்பிரிவு]

[மாறுபட்டுப் பொருதலுற்றார் இருவரரசரைத் தலைவன் சந்துசெய் தறகுப் பிரியாநின்றதைத் தோழி தலைமகட்குக் கூறாநிற்றல்.]

தூதாக வன்பர் செலத்துணிந் தாரென்றுஞ் சொற்புலவோர்
மாதாக வன்பசி தீர்த்தருள் வாணன்றென் மாறையிந்து
மீதாக வம்பு கிடந்தன போலுண்கண் மெல்லியலிப்
போதாக வம்புகல் வோரிக லார்தம் புரம்புகவே.

### பிரிந்துழித்தலைவிமுன்பனிகண்டுவருந்தல்.

[தலைவன் தூதிற் பிரிந்திருந்தபோது முன்பனிப்பருவம்
வருதல்கண்டு தலைவி வருந்தாநிற்றல்.]

மலிகின்ற வண்புகழ் வாணன்றென மாறையை வாழ்த்தலர்போல்
மெலிகின்ற சிந்தையு மேனியுங் கொண்டு விளர்ப்பெனும்போ
பொலிகின்ற கஞ்சுகம் போர்த்திருந் தேனைப் புரந்தருளார்
நலிகின்ற முன்பனி நாளினண் ணார்முனை நண்ணினரே.

### வருந்தியதலைவியைத் தோழியாற்றுவித்தல்.

[முன்பனிபபருவம் கண்டு வருநதிய தலைவியைத் தலைவன்
மீண்டுவந்தமை கூறித் தோழி ஆற்றாநிற்றல்.]

சுறறுங் குழலினை பிணிவிடுப் பானவந்து தோன்றினர்யார்
முற்றும் பொழிகின்ற முன்பனி நாண்முகி லுங்கடலும்
வறறும் பருவத்து மண்புரப் பான்றஞ்சை வாணனென்றார்
செற்றும் படையின்வெம் போர்தணிப பானன்று சென்றவரே.

### [துணைவயிற் பிரிவு.]

### தோழிதலைவிக்குத்துணைவயிற்பிரிவுணர்த்தல்.

[தனக்கு நட்பான அரசற்குற்ற துன்பந்தீர்த்தற்குத் தலைவன்
பிரியலுற்றதைத் தோழி தலைவிக்குணர்த்தாநிற்றல்.]

நண்பான மன்னர்க் கிடர்தணிப் பானெண்ணி நல்லுதவிய
பண்பான மன்னர் படர்தலுற் றாபனி நீர்பொழியுந்
தண்பான லநதொடை யம்புய வாணன் றமிழ்த்தஞ்சைவாழ்
வெண்பான லங்கொள்செவ் வாயன்ன மேயன்ன மென்னடையே.

### பிரிந்துழித்தலைவிபின்பனிகண்டுவருந்தல்.

[தலைவன் வேந்தற்குற்றுழிப் பிரிந்திருந்தபோது தலைவி
பின்பனிப்பருவங்கண்டு வருந்தாநிற்றல்.]

இன்னற் படுகின்ற வென்னையெண் ணார்தமக் கின்றுணையாம்
மன்னர்க் குதவி பிரிந்தநங் காதலர் வாணன்றஞ்சைக்
கன்னற் கடிகை யறிவதல் லாற்பகல் காண்பரிதாம்
பின்னற் கனையிருள் கூர்துன்ப மேவிய பின்பனியே.

### தலைவியுருவெளிகண்டுதலைவன்கூறல்.

[பொருண்முற்றிமீளுந் தலைமகன் தனது நினைவின் நீட்சியால் தலைவியது உருவு வெளிப்படுதல்கண்டு கூறுநிற்றல்.]

மைகருஞ் சுரிநிரை யாற்றஞ்சை வாணன் மருவலரைக்
கைக்குங் களங்கெழு பாசறை யூடு கயலும் வில்லும்
மொய்கருஞ் சுடரிள வம்புலி தானு முயங்கி யெல்லாத்
திசைசெய் தொழவரு மேசுரு ளோலைத் திருமுகமே.

### தலைவன்பாகனொடுசொல்லல்.

[தலைமகளை நினைந்து விரைந்து ஊர்வந்து சேர்ந்த தலைமகன் தேர் விரைந்தோட்டிய பாகனை வியந்து கூறுநிற்றல்.]

மால்கொண்ட வாரண வாணன்றஞ்சை மாறை வலவநண்ணார்
கால்கொண்ட வாளமா கையகல் பாசறைக் கைவயினமுட் [தேர்
கோல்கொண்ட வாறுநின் னேவல்கொண் டியானிக கொடிநெடுந்
மேல்கொண்ட வாறுநம் மூர்வந்த வாறும் வியப்பெனக்கே.

### தலைமகன்கார்ப்பருவங்கண்டுகூறல்.

[பணிவந்துசோர்ந்து தலைமகளையடைந்த தலைவன் காரைநோக்கிக் கூறுதல்.]

கொய்தகல் ரோதியங் கொம்பரன் னாள்பொங்கு கொங்கைவிட்ட
முத்தல ராக முயங்கினம் யாமுழு நீர்விழிபோன
மைத்தலர் நீல மலர்வயல் சூழ்தஞ்சை வாணனவண்மைக்
கைத்தல மான வினிப்பொழி வாழிய கார்ப்புயலே. (௫௦)

## கற்பியல் முற்றிற்று.



# ஒழிபியல்.



முன்னர்க் கூறப்படாமல் எஞ்சிநின்றவைகளைக் கூறலால் இவ்வியல் ஒழிபியல் என்னும் பெயருடையதாயிற்று. ஒழிபு - எஞ்சியது. இயல் - இலக்கணம்.

[ஒழிபு.]

உ0௯. ஒழிபெனப் படுவ தகப்பாட் டுறுப்பும்
வழுவு மமைதியுந் தழுவிய தாகும்.

இ - ள். ஒழிபு என்று சொல்லப்படுவது அகப்பாட்டுக்குரிய உறுப்பும் வழுவும் வழுவமைதியும் தழுவிச் சொல்லப்படுவதாகும் எ - று.

அகப்பாட்டு — அகப்பொருள் அமைத்துச் செய்யப்படும் பாட்டு. வழு — அகப்பொருட்கண் வரும் குற்றம். வழுவமைதி — வழுவாயினும் அமைக்கப்படுவது. (க)

[அகப்பாட்டுறுப்பு]

உக0. திணையே கைகோள் கூற்றே கேட்போர்
இடனே காலம் பயனே முன்னம
மெய்ப்பா டெச்சம் பொருள்வகை துறையென்
றப்பா லாறிரண் டகப்பாட் டுறுப்பே.

இ - ள். திணை முதலியனவாக இங்கே சொல்லப்பட்ட அப்பகுதி பன்னிரண்டும் அகப்பாட்டுக்குரிய உறுப்புக்களாம் எ-று.

[திணையுங்கைகோளும்]

உகக. அவற்றுள்,
முன்னவை யிரண்டுஞ் சொன்னவை யாகும்.

இ - ள். அவ்வுறுப்புக்கள் பன்னிரண்டினுள்ளே முன்னின்ற திணை, கைகோள் என்னும் இரண்டும் முன்னே சொல்லப்பட்டனவாகும் எ - று.

திணையும் கைகோளும் அகத்திணையியலிலே கூறப்பட்டமையின் "சொன்னவையாகும்" என்றார். இங்கே சொல்லப்படுவன கூற்று முதலிய பத்துமாம். (ங)

[களவிற் கூற்றுக்குரியர்.]

**உகஉ. தலைவன் றலைவி பார்ப்பான் * பாகன்**
**பாங்கி செவிலியென் றிங்கிவ் வறுவரும்**
**சாற்றிய களவிற் கூற்றிற் குரியர்.**

இ - ள். தலைவன் முதலாக இங்கே சொல்லப்பட்ட அறுவரும் களவென்னும் கைகோளின்கண்ணே கூற்றிற்குரியராவர் எ - று.

கூற்று - கூறுதல். இன்னார் கூறியது இப்பாட்டு என அறிவ தென்றவாறு. பார்ப்பான் நன்மை தீமைகளை ஆராய்ந்து உறுதி கூறும் உயர்குலத்தோழன். பாகன் தேர்ச்சாரதி. பாகன் கூற்றுஞ் செவிலிகூற்றும் சிறுவரவின என்க. (௪)

[கற்பிற் கூற்றுக்குரியர்.]

**உகங. நற்றாய் கண்டோர் பாணன் கூத்தர்**
**விறலி பரத்தைய ரறிவரென் றெழுவரும்**
**அறுவகை யவரு மாகிய வனைவரும்**
**குறைவறு கற்பிற் கூற்றிற் குரியர்.**

இ - ள். இங்கே சொல்லப்பட்ட நற்றாய் முதலிய எழுவரும் முற்சூத்திரத்திற் சொல்லப்பட்ட தலைவன் முதலிய அறுவருமாகிய பதின்மூவரும் கற்பென்னும் கைகோளின்கண்ணே கூற்றிற்கு உரியராவர் எ - று.

கண்டோர் உடன்போகற்கண் வழியிற்கண்டோர். விறலி - பாடுவிச்சி. அறிவர் - நற்பொருள் அறியுமியல்புடையோர். (௫)

[கூற்றுக்குரிமையில்லார்.]

**உகச. பயந்தோன் றன்னை யுயங்குநோ யறிவோர்**
**ஊரவ ரயலோர் சேரியோ ரென்றிவர்**
**முகத்துரை நிகழா வகப்பொரு ளகத்தே.**

இ - ள். அகப்பொருளினிடத்துப் பயந்தோன் முதலிய அறுவர் வாயினின்றும் கூற்று நிகழ்வதில்லை எ - று.

பயந்தோன் - தந்தை. தன்னை - தமையன். உயங்குநோயறிவோர் - வருந்துதற்குச் காரணமான நோயை அறிவோர். ஊரவர் - ஊரிலுள்ளார். அயலோர் - அயன்மனையிலுள்ளார். சேரி

---

* தொல்காப்பியர் பாகனை விலக்கிப் பாங்கனையே அறுவருள் ஒருவனாகக் கொண்டார்.

தென்றூழ் விடரகஞ் சிலம்பப்
புன்றலை மடப்பிடி புலம்பிய குரலே. நற்றிணை.

இங்கே பிரிவுணர்த்தப்பட்ட தலைமகள் தோழிக்கு "நினைக் கலு நினைதிரோ வைய வளாறு புன்றலை மடப்பிடி புலம்பிட குரலே" என்று சுரத்தின் இயல்பு சொல்லாமோ எனக் கூறிய வாறறிக. மற்றைய வந்துழிக் காண்க. (௮)

[நற்றாய்கூறாமை]

௨௧௭. தலைவன் றலைவியொடு நற்றாய் கூறாள்.

இ - ள். தலைவனோடும் தலைவியோடும் நற்றாய் கூறுதற்குரிய ளாகாள் எ - று.

இவ்விருவரோடும் நற்றாய் கூறல் வழு எனக. நற்றாய் - தலைவியினதாய். (௯)

[நற்றாய்கூற்று.]

௨௧௮. புணர்ந்துடன் போயது ணர்ந்த பின்னர்
அந்தணர் தெய்வ மயலோ ரறிஞர்
சிந்தைநோ யறிவோர் செவிலி பாங்கியொடு
கண்டோர்க் குரைக்கும் பண்புடை நற்றாய்.

இ - ள். தலைவி தலைவனோடு புணர்ந்து உடன்போன செய்தி தானறிந்தபின் அந்தணர்க்கும், தெய்வத்திற்கும், அயலோர்க்கும், அறிஞர்க்கும், மனத்துயரறிவோர்க்கும், செவிலிக்கும், பாங்கிக்கும்,கண்டோர்க்கும் நற்றாய் கூறுதற்கு உரியளாவள் எ - று. ()

[செவிலிகூற்று]

௨௧௯. தாயொடும் பாங்கி தான்முத லோரொடுஞ்
சேயிழைச் செவிலியுஞ் செப்பு மாங்கே.

இ - ள். செவிலித்தாயும் தலைவி புணர்ந்துடன் போனசெய்தி தானறிந்தபின் நற்றாயோடும் பாங்கி முதலியோரோடும் கூற்று நிகழ்த்துதற்குரியளாவள் எ - று.

நற்றாய் செவிலி என்னும் இருவர் கூற்றிற்கும் உதாரணம் உடன்போக்கினுள்ளே காண்க. (௧௧)

[கண்டோர்கூற்று.]

௨௨௦. தாயர் பாங்கியர் தலைவன் றலைவியோ
டேயு மென்ப கண்டோர் கூற்றே.

இ - ள். நற்றாய், செவிலித்தாய என்னும் இருவகைத் தாய்மார்களோடும், பாங்கியர்களோடும், ஒருங்கிருக்குந் தலைவனுந் தலைவியுமாகிய இருவரோடும், கண்டோர் கூறுதல் பொருந்தும் என்று சொல்லுவர் புலவர் எ - று.

பாங்கியர் என்றது செவிலியின் மகளாகிய உயிர்ப்பாங்கியையும் மற்றையரையும் என அறிக. (கஉ)

[பிறர்கூற்று]

உஉக. சாற்று வினைவருந் தலைவன் றலைவியோ
டேற்பன கூறுப விடந்தொறு மிடநதொறும்.

இ - ள். களவிலும் சற்பிலும் கூற்றிற்குரியர் எனக் கூறப்பட்ட பதின்மூவருள்ளே இங்கே யௌாது கூறப்படாதவர்களாகிய பார்ப்பான், பாகன், பாங்கி, பாணன், கூத்தர், விறலி, பரத்தை, அறிவர் என்னும் எண்மரும் தலைவனோடுந் தலைவியோடும் இடந்தோறும் இடநதோறும பொருந்துங் காரியங்களைக் கூறுதற்குரியராவர் எ - று. (கஈ)

[தலைவிகூற்றின்புறநடை.]

உஉஉ. நெஞ்சு நாணு நிறைசே ரறிவுஞ்
செஞ்சுடர்ப் பருதியுந் திங்களு மாலையும்
புள்ளு மாவும் புணரியுங் கானலும்
உள்ளுறுத் தியன்றவு மொழிந்தன பிறவுந்
தன்சொற் கேட்குந போலவுந் தனக்கவை
இன்சொற் சொல்லுந போலவு மேவல்
செய்குந போலவுந் தேற்றுந போலவும்
மொய்குழற் கிழத்தி மொழிந்தாங் கமையும்.

இ - ள். மனமும், நாணும், அறிவும், சூரியனும், சந்திரனும், மாலைக்காலமும், பறவையும், மிருகமும், கடலும், கானலும் உட்பட்டு நின்றனவும், இவையல்லாதபிறவும், தான் சொல்லுஞ் சொற்களைக் கேட்கும் இயல்புடையனபோலவும், அவை தனக்கு இன்சொற்கூறும் இயல்புடையனபோலவும், ஏவல் செய்வனபோலவும், தன்னைத் தேற்றுவனபோலவும் கொண்டு தலைவி சொல்லி ஆற்றுதற்கும் உரியளாவள் எ - று.

பிறவும் என்றது புல், புதல், மரம் முதலியவற்றை. உதாரணம் முன்னர்க் காட்டப்பட்டவைகளுள்ளும் பிறவற்றுள்ளும் கண்டு கொள்க. (கச)

[தம்மோடு தாமே கூறல்]

உஉ௩. எம்முறை யோரு மியாரொடு மின்றித்
தம்மொடு தாமே சாற்றிய மமைய.

இ - ள். தலைமகன் முதலிய யாவரும் கூறப்படுவார் யாவ ரோடும் கூறாது தம்மோடு தாமே கூறியும் அமைவர் எ - று.

'தலைவன்றலைவி' என்னும் சூத்திரந் தொடங்கி இதுவரையுங் கூறப்பட்டவை கூற்று என்னும் உறுப்பிற்குரியன. இனிக் கூறப்படுவன கேட்போர் முதலிய உறுப்புக்கள். (௧௫)

[கேட்போர்]

உஉ௪. கிழவோன் கூற்றுங் கிழத்தி கூற்றும்
பழமறை யோன்முதற் பதின்மருங் கேட்ப.

இ - ள். தலைவன் கூறுங் கூற்றினையும், தலைவி கூறுங் கூற்றினையும், பார்ப்பான், பாகன் முதலிய பதின்மரும் கேட்பார் எ - று.

பதின்மராவார் மேற்கூற்றுக்குரியராகக் கூறிய பதின்மருள் தலைவனும் தலைவியும் அவ்விருவரோடும் கூறுதற்குரியளல்லாத நற்றாயும் ஒழிந்தோர். (௧௧)

[இதுவுமது.]

உஉ௫. மறையோன் கூற்று மறிஞர் கூற்றும்
இறையோன் முதலா மெனைவருங் கேட்ப.

இ - ள். பார்ப்பான் கூறுங் கூற்றினையும் அறிஞர் கூறுங் கூற்றினையும் தலைவன் முதலாகவுள்ள யாவரும் கேட்பர் எ - று.

[இடம்.]

உஉ௬. நெறிப்படு கருமம் நிகழ்வுழி யிடமே.

இ - ள். நெறிப்பட்ட காரியம் நிகழும் களம் இடம் எனப்படும் எ - று.

கருமம் என்றது காமப்புணர்ச்சியை. இங்ஙனமன்றித் தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் இடம் என்பாருமுளர். (௧௮)

[காலம்]

உஉ௭. சென்றது நிகழ்வது மெதிர்வது மெனமுறை
நின்று பொருளுணர நிகழ்வது காலம்.

இ - ள். சென்றது என்றும், நிகழ்வது என்றும், எதிர்வது என்றும் முறையே நின்று பொருள்களை உணர்தற்குக் காரணமாக நிகழ்வது காலம் எனப்படும் எ - று. (௧௧)

[ப ய ன்.]

**உஉஅ. இப்பொருள் பயக்குமிஃ தென்பது பயனே.**

இ - ள். இஃது இப்பொருளினைப் பயக்கும் என்று சொல்லுவது பயனாகும் எ - று. (உ0)

[மு ன் ன ம்.]

**உஉகூ. இன்னோர்க் கின்னுழி யின்னது பயக்குமெனு**
**முன்னந் தருவது முன்ன மாகும்.**

இ - ள். இம்மொழி இவ்விடத்து இவர்க்குரியதாய்ப் பயன் படும் என்னும் குறிப்பினைப் பயப்பது முன்னம் என்னும் உறுப்பாகும் எ - று.

இது முன்னத்தால் உணரப்படுதலின் முன்னம் எனப்பட்டது. முன்னம் - குறிப்பு. இன்னது - இம்மொழி.

**உதாரணம்.**

*யாரிவ னெங்கூந்தற் கொள்வா னிதுவுமோர்*
*ஊராண்மைக் கொத்த படிறுடைத்து.* **கலித்தொகை.**

இங்கே சொல்பவள் தலைவி எனவும், சொல்லப்படுவோன் தலைவன் எனவும் முன்னத்தால் உணர்தல் பெறப்படும். (உக)

[மெய்ப்பாடு.]

**உ௩0. நகைமுத லாவிரு நான்குமெய்ப் பாடும்**
**நிகழ்பொருண் மெய்ப்பட நிற்பமெய்ப் பாடே.**

இ - ள். நிகழும் பொருள் வெளிப்படும்படி நகை முதலிய எண்வகை மெய்ப்பாடும் தோன்றி நிற்பது மெய்ப்பாடாகுமெ-று

நகை முதலிய மெய்ப்பாடுகளாவன: நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், உவகை, வெகுளி என்பன. நிகழ் பொருள்-சொல்லப்படும் பொருள். மெய்ப்பட-பிழம்புதோன்ற; இனிவே வெளிப்பட என்பது பெற்றும். வெளிப்படுதலாவது கவியாற் சொல்லப்படும் பொருள் கண்ணாற் கண்டதுபோல உணரும் படி தோன்றுதல். (உஉ)

[எ ச் ச ம்.]

**உ௩க. சொல்லே யாயினுங் குறிப்பே யாயினும்**
**சொல்லி முடித்தல் வேண்டுவ தெச்சம்.**

இ - ள். பாட்டின்கணில்லாத சொல்லேயாயினும் குறிப்பேயாயினும் வருவித்துப் பொருண்முடித்தலை வேண்டி நிற்கும் இயல்புடையது எச்சமாகும் எ - று.

எச்சமாவது எஞ்சிநிற்கும் பொருளுடையதோர் கிளவி. சொல்லெச்சம் — சொல்லினாலே முடிக்கப்படும் இலக்கணமுடையது. குறிப்பெச்சம் - குறிப்பினான் முடிக்கப்படும் இலக்கணமுடையது. (உரு)

[பொருள்வகை.]

உருஉ. ஒருதிணைக் குரிமை பூணா நிலைமை
பொருள்வகை யென்மனார் புலமை யோரே.

இ - ள். இஃது இத்திணைக்கு உரித்து என்னும் உரிமை பூணாது பொதுவாய் நிற்கும் நிலைமையைப் பொருள்வகை என்று சொல்லுவர் புலவர் எ - று.

பொதுவாய் நிற்கும் நிலைமை எல்லாத்திணைக்கும் பொதுவாய் நிற்குந் தன்மை. இங்ஙனமன்றி நிரனிறை முதலியனவாகச் சொல்லிலக்கணத்துட் கூறிய பொருள்கோள்களே பொருள்வகை என்பாருமுளர். (உச)

[து றை.]

உருரு. சொல்லிய வல்லன தோன்றினு மவற்றிறோ
டொல்லும் வகைதேர்ந் துணர்த்தியல் வழாமல்
உரைப்போர் கேட்போ ருண்மை யின்றி
உரைக்குங் கவியே யுரைப்பது துறையே.

இ - ள். அவ்வத்திணைக்குச் சொல்லப்பட்ட மக்கள், மா, புள் முதலாயினவன்றிச் சொல்லப்படாத பொருள்கள் தோன்றுமாயினும், அவை சொல்லப்பட்டனவாகிய பொருள்களோடு பொருந்தும் வகையை ஆராய்ந்து, விதியை அறிவிக்கும் இலக்கணம் வழுவாமல், சொல்வோரும் கேட்போரும் உளராதலின்றிக் கவி கூறும் புலவனாற் சொல்லப்படுவதோர் நெறி துறை எனப்படும் எ - று.

துறை யெனினும் மார்க்கமெனினும் ஒக்கும். உணர்த்தியல் — அவ்வந் நிலத்தின் பொருள்களைக் கூறும் இலக்கணம். உண்மை - உளராந்தன்மை.

கலித்தொகையிலே "ஊர்க்கானிவந்த பொதும்பருள்" என்னும் குறிஞ்சிக்கலியிலே "கொழுநிழன் ஞாழன் முதிரிணர்கொண்டு கழுமமுடித்துக் கண்கூடுகூழை" என்புழி நெய்தனிலத்திற்கு

ரிய ஞாழற் பூச்சூடுதல்பற்றித் தலைவியை நெய்தலுக்குரியாள் போலவும், "ஊர்க்காணிவந்த பொதும்பருள்" என்பதனால் அவளை மருதநிலத்துக்கண்டான் போலவும் கூறிப் பின்னர்க் குறிஞ்சிக்கு ரிய புணர்தல் என்னும் உரிப்பொருளான் முடித்த நெறிபோன்ற நெறியையே துறை என்று சொல்லுவர். இங்கே ஊர் என்பதும் ஞாழல் என்பதும் குறிஞ்சிக்குச் சொல்லப்படாத பொருள்கள்.

திணை, கைகோள் முதலிய உறுப்புக்கள் அகப்பொருட்பாட்டிலே வருமுறையை ஆங்காங்கு அறிந்து கொள்க.

வெடிக்கின்ற விப்பியு ணித்திலம் பைத்தலை வெம்பகுவாய்
துடிக்கின்ற திங்களிற் றேன்றுந் துறைவசெஞ் சொற்புலவர்
வடிக்கின்ற முத்தமிழ் வாணன்றென் மாறையென் மான்மருங்கை
ஒடிக்கின்ற கொங்கைகண் டாலெவ ரோநெஞ் சுகாதவரே.

இப்பாட்டிலே வருந் திணை முதலியன.

| | |
|---|---|
| திணை | நெய்தல். |
| கைகோள் | களவு. |
| கூற்று | தோழிகூற்று. |
| கேட்போன் | தலைவன். |
| இடம் | தனியிடம். |
| காலம் | எதிர்காலம். |
| பயன் | வரைவு. |
| முன்னம் | சொல்வாள்பாங்கியெனவறிதல். |
| மெய்ப்பாடு | மருட்சி. |
| எச்சம் | "வரைதல் வேண்டும்" என்னுஞ்சொல். |

இவ்வாறே மற்றையவற்றையும் அறிந்துகொள்க. (உரு)

உ௱சு. அவற்றுள்,
எச்ச மின்றியு மியலு மென்ப.

இ - ள். மேலே சொல்லப்பட்ட திணை, கைகோள் முதலிய உறுப்புக்களுள்ளே எச்சம் என்னும் உறுப்புப் பெறுமலும் அகப்பாட்டு நடக்கும் என்று சொல்லுவர் புலவர் எ - று.

## உதாரணம்.

சேலார் புனல்வையை சூழ்தஞ்சை வாணன்றென் மாறையினம்
வேலா னெனப்பிறர் வேட்டவர் யார்மணம் வெண்டுகிலின்
பாலா ரமளியம் பாற்கட லானது பங்கயக்கண்
மாலா யினனிவ னுந்திரு வாயினண் மாதருமே.

| | |
|---|---|
| திணை | முல்லை. |
| கைகோள் | கற்பு. |
| கூற்று | கண்டோர்கூற்று. |
| கேட்போர் | தாமே; பிறரில்லை. |
| இடம் | வதுவைமனை. |
| காலம் | நிகழ்காலம். |
| பயன் | காட்சி. |
| முன்னம் | தலைவி திரு என்றறிவது. |
| மெய்ப்பாடு | உவகை. |

இங்கே எச்சம் என்னும் உறுப்பில்லை. மற்றையவைகளையும் இங்ஙனம் அறிக. (உசு)

[அகப்பாட்டினுள்வரும்பொருள்.]

உகடு. உவமப் பொருளு மிறைச்சிப் பொருளும்
எனவிரு பொருளு மெய்தும் பாட்டினுள்.

இ - ள். உவமப்பொருளும் இறைச்சிப்பொருளும் என இரு வகைப்பொருளும் அகப்பாட்டினுள் வரும் எ - று. (உஎ)

[உவமவகை]

உகசு. உள்ளுறை யுவமம் வெளிப்படை யுவமமென
உள்ளுறை யுவம மிருவகை யுடைத்தே.

இ - ள். உள் உறை உவமம் - அகப்பாட்டினுள்ளே கிடக்கும் உவமம்,—உள்ளுறையுவமம் வெளிப்படையுவமம் என இருவகை யுடைத்தே - உள்ளுறையுவமமும் வெளிப்படையுவமமும் என இருவகையுடையதாகும் எ - று. (உஅ)

[உள்ளுறையுவமம்.]

உகஎ. அவற்றுள்,
உள்ளுறை யுவம முய்த்துணர் வகைத்தாய்ப்
புள்ளொடும் விலங்கொடும்பிறவொடும்புறப்படும்.

இ - ள். அவ்விருவகை உவமங்களுள்ளே உள்ளுறையுவமம் சொல்லிய சொல்லால் உணரப்படாது ஆராய்ந்துணரும் வகையுடையதாய்ப் புள்ளோடும் விலங்கோடும் பிறவற்றோடும் சேர்ந்து அவற்றை நிலைக்களமாகக் கொண்டு தோன்றும் எ — று.

உள்ளுறை - உள்ளே உறுவது.

## உதாரணம்.

வீங்குநீர் வீழ்நீலம் பகர்பவர் வயற்கொண்ட
ஞாங்கர் மலர்சூழ்தந் தூர்புகுந்த வரிவண்
டோங்குய ரெழில்யானைக் கனைகடாங் கமழ்நாற்றம்
ஆங்கவை விருந்தாற்றப் பகலல்கிக் கங்குலான்
வீங்கிறை வடுக்கொள வீழுநர்ப் புணர்ந்தவர்
தேங்கமழ் கதுப்பினு ளரும்பவிழ் நறுமுல்லைப்
பாய்ந்தூதிப் படர்தீர்ந்து பண்டுதா மரீஇய
பூம்பொய்கை மறந்துள்ளாப் புனலணி நல்லூர. கலி.

இங்கே வீங்குநீர் என்பது பரத்தையர் சேரியாகவும், அதன் கண் வீழ்ந்த நீலம் என்பது காமச்செவ்வி நிகழ்ந்த பரத்தையரா கவும், பகர்பவர் என்பது பரத்தையரைத் தேரேற்றிக் கொண்டு வரும் பாணர்முதலிய வாயில்களாகவும், வரிவண்டு என்பது தலை வனாகவும், யானையின் மதத்தினை ஆண்டுறைந்த வண்டுகள் வந்த வண்டிற்கு விருந்தாற்றுதல் பகற்பொழுது புணர்கின்ற சேரிப்பர த்தையர் தமது நலத்தை அத்தலைவனை நுகர்வித்தலாகவும், கங்கு லில் வண்டு முல்லையை ஊதுதல் இற்பரத்தையரோடிரவுதுயிலு தலாகவும், பண்டுமருவிய பொயகையை மறத்தல் தலைவியை மறத்தலாகவும் பொருள்பயந்து புலப்படக் கூறிய கருப்பொருள் களை புலப்படக் கூறாத மருதத்திணைப்பொருட்கு உள்ளுறையுவம மாயின.

இங்கே வண்டு புள்; யானை விலங்கு; மற்றைய பிற. (உ-க)

[வெளிப்படையுவமம்.]

**கரு௮. வெளிப்படை யுவமம் வினைபயன் மெய்யுரு
வெளிப்பட நின்று விளங்குவ தாகும்.**

இ - ள். வெளிப்படையுவமமாவது தொழில், பயன், வடிவு, நிறம் என்னும் நான்கும் சொல்லிய சொல்லானே புலப்படுமாறு வெளிநின்று விளங்குவதாகும் எ - று.

## உதாரணம்.

(க.) புலியன்னமறவன். இது பாயுந்தொழிலாற் புலியை ஒத்த மறவன் என விரிதலால் வினையுவமம்.

(உ.) மாரியன்னவண்கை. இது பெறும் பொருளாகிய பய னால் மாரியையொத்த வண்கை எனவிரிதலாற் பயனுவமம்.

(ங.) துடியிடை. இது வடிவத்தாலே துடியையொத்த இடை என விரிதலால் மெய்யுவமம். மெய் - வடிவு.

(ச.) பொன்மேனி. இது நிறத்தினாலே பொன்னையொத்த மேனி என விரிதலால் உருவுவமம். உரு - நிறம். (௩௦)

[இறைச்சிப்பொருள்.]

**கங௯. கருப்பொருட் பிறக்கு மிறைச்சிப் பொருளே.**

இ - ள். இறைச்சிப்பொருளாவது தெய்வம் முதலிய கருப்பொருள்களின்கண்ணே சொல்லும்பொருட்குப் புறத்ததாடித் தோன்றும் இயல்புடையதாகும் எ - று.

இறைச்சி - கருவிற்கு நேயமாயுள்ளது. எனவே கருவிற்குச் சார்பாய் வருவதென்பதாம. கருப்பொருளாற் பிறிதொன்று பயக்குமாறு மறைத்துக்கூறுவது எனினுமமையும்.

உதாரணம்.

இலங்கு மருவித் திலங்கு மருவித்து
வானி னிலங்கு மருவித்தே—தானுற்ற
சூள்பேணான் பொய்த்தான் மலை. கலித்தொகை

இங்கே சொல்லவேண்டும் பொருள் சூள்பொய்த்தான என்பது. அதன்புறத்தே இங்ஙனம் பொய்த்தான் மலையகத்து நீர்திகழ்வான, இஃதென்ன வியப்போ எனத் தோன்றுவது இறைச்சி.

[அகப்புறக்கைக்கிளை.]

**கசo. காமஞ் சாலா விளமை யோள்வயிற்**
**குறிப்பறி வுறாது குறுகியாங் கவளோ**
**டிறப்பக் கூறுவ தகப்புறக் கைக்கிளை.**

இ - ள். காமக்குறிப்பிற்கு அமைதலில்லாத இளமைப்பிராயமுடைய ஒரு தலைவிமாட்டுச் சென்று அவள் குறிப்பினை அறியாது 'இவள் எனக்கு மனைக்கிழத்தியாதல்வேண்டும்' எனக்கருதி ஒரு தலைவன் அவளோடு மேலும் மேலும் கூறுவது அகப்புறக் கைக்கிளையாகும் எ - று. (௩௨)

[இதுவுமது.]

**கசக. அதுவே,**
**இறைமையி லோர்க்கு மிழிகுலத் தோர்க்கும்**
**முறைமையி னுரித்தே முன்னுங் காலை.**

இ - ள். முற்சூத்திரத்திற் கூறப்பட்ட அகப்புறக்கைக்கிளை யானது ஆராயுங்கால் தலைமையில்லாதவர்களும் இழிகுலத்தோர்க்கும் முறைமையான் உரியதாகும் எ - று.

குறிஞ்சிக்கலியிலே வரும் "ஏஎ யிஃதொத்த ஞணிலன்" என்னும் கலியை இதற்கு உதாரணமாக்கி அறிக. (௩௩)

[அகப்பொருட்பெருந்திணை.]

௧௪௨. அகன்றுழிக் கலங்கலும் புகன்ற மடற்கூற்றும்
குறியிடை யீடுந் தெளிவிடை விலங்கலும்
வெறிகோள் வகையும் வேந்துடன் போக்கும்
பூப்பிய லுரைத்தலும் பொய்ச்சூ ளுரையும்
தீர்ப்பி லூடலும் போக்கழுங் கியல்பும்
பாசறைப் புலம்பலும் பருவமாறு படுதலும்
வன்புறை யெதிர்ந்து மொழிதலு மன்புறும்
மனைவியுந் தானும் வனமடைந்து நோற்றலும்
பிறவு மகப்பொருட் பெருந்திணைக் குரிய.

இ - ள். அகன்றுழிக்கலங்கல் முதல் மனைவியுந்தானும் வன மடைந்து நோற்றல் ஈறாக இங்கே சொல்லப்பட்டவைகளும் பிறவும் அகப்பொருட்பெருந்திணைக்குரியனவாகும் எ - று.

அகன்றுழிக்கலங்கல் - பிரிவின்கட்கலங்குதல். மடற்கூற்று - மடலேறுகையைக் கூறுதல். குறியிடையீடு — குறியிடத்திலே வருகைதவிர்தல். தெளிவிடைவிலங்கல் — தெளிவித்த தெளிவு இடையிலொழிதல். (௩௪)

[அகப்புறப்பெருந்திணை.]

௧௪௩. மடலே றுதலொடு விடைதழா அலென்று
குற்றிசை தன்னொடு குறுங்கலி யென்று
சுரநடை தன்னொடு முதுபாலை யென்று
தாபத நிலையொடு தபுதார நிலையெனப்
புகன்றவை யியற்பெயர் பொருந்தா வாயின்
அகன்ற வகப்புறப் பெருந்திணைக் காகும்.

இ - ள். மடலேறுதல், விடைதழாஅல், குற்றிசை, குறுங்கலி, சுரநடை, முதுபாலை, தாபதநிலை, தபுதாரநிலை என்று சொல்லப்பட்டவைகள் இயற்பெயர் பொருந்தாமல் வருமாயின் அகப்புறப்பெருந்திணைக்கு உரியனவாகும் எ - று.

மடலேறுதலாவது தன்குறை நிரம்பப்பெறாத தலைமகன் ஒருவன் காமம் மீதூர்ந்து பனைமடலினாற் குதிரை செய்துவைத்துத் தான் விரும்பிய தலைவியின் வடிவினையும் ஒருபடத்திலே சித்திரித்துப் பிடித்துக்கொண்டு உடம்பெங்கும் நீறு பூசி எருக்கம்பூ எலும்பு முதலியவற்றையுந் தன்மேனியிற்சூடி அக்குதிரையிலேறி அதனைத் தெருவிலே செலுத்துதல்.

விடைதழாஅலாவது கொல்லுந் திறலமைந்த ஓர் எருத்தினை வெல்லுந்திறமுடையான் ஒருவன் பிடித்துத் தழுவி அடக்குதல். விடை - எருது. தழாஅல் - தழுவுதல்.

குற்றிசையாவது தலைவியைத் தலைவன் முற்றத்துறந்து பற்றின்றி விடுவது.

குறுங்கலியாவது தன்னை முற்றத்துறந்து நீக்கிய தலைவனை முன்னின்று தலைவி பழிதூற்றுதல்.

சுரநடையாவது சுரத்தின்கண்ணே நாயகியை இழந்த நாயகன் வருந்தும் நிலை.

முதுபாலையாவது சுரத்தின்கண்ணே நாயகனை இழந்த நாயகி தனிநின்று அரற்றும் நிலை. இது பெரும்பிரிவாதல் பற்றி முதுபாலை எனப்பட்டது. பாலை - பிரிவு.

தாபதநிலையாவது நாயகன் இறந்தபின் நாயகி தவம்புரிந்தொழுகும் நிலை. தாபதம் - தவம்புரிபவர்தன்மை.

தபுதாரநிலையாவது நாயகி இறந்தபின் தனிமையாய் மனையின்கணிருக்கும் நாயகனிலை. இது தாரமிழந்த நிலை எனவும்படும். தபு - இறந்த; தாரம் - மனைவி.

மடலேறுதற்கும் விடைதழாஅலுக்கும் உதாரணம் கலித்தொகையிற் காண்க. குற்றிசை, குறுங்கலி முதலியவற்றிற்கு உதாரணம் வெண்பாமாலையிற் காண்க. முதுபாலை முதலியவற்றிற்கு உதாரணம் புறநானூற்றிலும் காணப்படும். (௩௫)

[அகப்பாட்டினுட்பாடப்படுவோர்.]

**கசுச. பாட்டுடைத் தலைவன் கிளவித் தலைவனெனப்
பாட்டினுட் பாடப் படுவோ ரிருவர்.**

இ - ள். அகப்பாட்டினுள்ளே பாடப்படுவோர் பாட்டுடைத் தலைவனும் கிளவித்தலைவனும் என இருவகைப்படுவர் எ - று. ()

[உயர்ந்தோன்.]

கசரு. அவருள்,
உயர்ந்தோன் பாட்டுடை யுரவோ னாகும்.

இ - ள். அகப்பாட்டிற் பாடப்படுவோர் இருவருள்ளும் பாட்டுடைத்தலைவனே உயர்ந்தோன் எனப்படுவன் எ - று. (ருஎ)

[இருவகைத்தலைவர்க்கும் கூறப்படும்பெயர்.]

நசசு. நிலப்பெயர் வினைப்பெயர் பண்புகொள் பெயரொடு
குலப்பெய ரியற்பெயர் கூறுப வவர்க்கே

இ - ள். பாட்டுடைத்தலைவன், கிளவித்தலைவன் என்னும் அவ்விருவர்க்கும் நிலப்பெயர் முதலாக இங்கே சொல்லப்பட்ட ஐவகைப்பெயர்களையும் கூறுவர் எ - று.

நிலப்பெயராவன மலைநாடன், சோணாடன், வெற்பன், சேர்ப்பன் என்பன போல இடம்பற்றி வரும்பெயர். வினைப்பெயராவன கடம்பெறிந்தான், தூங்கெயிலெறிந்தான், கோவலன், வேட்டுவன் என்பனபோலத் தொழில்பற்றி வரும் பெயர். கோவலன் என்பது பசுப்புரக்குந் தொழில்பற்றி வந்தது. வேட்டுவன் என்பது வேட்டுத் தொழில்பற்றி வந்தது. பண்புகொள் பெயராவன நெடுஞ்சேரலாதன், இளஞ்சேட்சென்னி என்பனபோலப் பண்படுத்து வரும்பெயர். குலப்பெயராவன சேரன் சோழன் என்பன போலக் குலம்பற்றி வரும்பெயர். இயற்பெயராவன குரவரால் இடப்பட்டபெயர். (ருஅ)

[இயற்பெயர்.]

கசஎ. அவற்றுள்,
இயற்பெயர் கிளவித் தலைவற் கிசையார்.

இ - ள். முற்சூத்திரத்திற் கூறப்பட்ட ஐவகைப் பெயர்களுள்ளே இயற்பெயரைக் கிளவித்தலைவனுக்குச் சொல்லிப் பாடமாட்டார் புலவர் எ - று. (ருகூ)

[இருவர்பெயருமவழங்குந்திறம்.]

கசஅ. இருவரு மொருங்கே வருதலுந் தனித்தனி
வருதலு மிருவரும் வாரா தொழிதலும்
உரிய வென்மனா ருணர்ந்திசி னோரே

இ - ள். அகப்பாட்டினுள்ளே பாட்டுடைத்தலைமகன் கிளவித்தலைமகன் என்னும் இருவர்பெயரும் ஒருங்கே வரு

ஒருங்குவாராமல் இருவர் பெயருந் தனித்தனி வருதற்கும், இருவர் பெயரும் வாராதொழிதற்கும் உரியன என்று சொல்லுவர் உணர்ந்தோர் எ - று.

உதாரணம்.

அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற விளைகனி
குண்டுநீ ரிலஞ்சிக் கெண்டை கதூஉந்
தண்டுறை யூரன் பெண்டினை யாயிற்
பலவா குகநின் னெஞ்சிற் படரே
ஓவா தீயு மாரி வண்கைக்
கடும்பகட் டியானை நெடுந்தே ரஞ்சிக்
கோன்முனை யிரவூர் போலச்
சிலவா குகநீ துஞ்சு நாளே. குறுந்தொகை.

இங்கே பாட்டுடைத்தலைமகன் கிளவித்தலைமகன் என்னும் இருவர் பெயரும் வந்தன. அஞ்சி என்பது பாட்டுடைத் தலைவன் பெயர். ஊரன் என்பது கிளவித்தலைவனைச் சுட்டிய பெயர். மற்றையன வந்துழிக்காண்க. (௪௦)

[அகப்புறப்பாட்டு.]

௧௪௯. அகப்புறப் பாட்டு மிகப்பில தவையே.

இ - ள். அகப்புறப்பாட்டும் முதற்கூறிய அகப்பாட்டுக்குரிய உறுப்புக்களைக் கடந்துவருதல் இல்லை எ - று.

எனவே அகப்பாட்டுக்குரிய உறுப்புக்களை அகப்புறப்பாட்டும் தழுவிவரும் என்பதாம். (௪௧)

[திணைமயக்கம்.]

௧௫௦. முத்திறப் பொருளுந் தத்தந் திணையொடு
மரபின் வாராது மயங்கலு முரிய.

இ - ள். முதல், கரு, உரி என்னும் மூவகைப்பொருள்களும் தத்தமக்குரிய திணையோடு கூடி இலக்கணமுறையான் வாராது பிறதிணையோடு கூடி மயங்கிவருதற்கு முரியனவாகும் எ - று.

உதாரணம்.

பல்கதிர் மண்டிலங் கல்சேர்பு மறைய
மான்கண மரமுதற் றெவிட்ட வான்கணம்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதர
ஏங்குவயி ரிசைய கொடுவா யன்றில்
ஓங்கிரும் பெண்ணை யகமட லகவப்

பாம்பு மணியுமிழப் பல்வயிற் கோவலர்
ஆம்பலந் தீங்குழற் றெள்விளி பயிற்ற

குறிஞ்சிப்பாட்டிலுள்ள இவ்வடிகளிலே முல்லைக்குரிய ஆன் கணம், கோவலர், ஆம்பற்குழல் என்னும் கருப்பொருள்களும், மாலை என்னும் முதற்பொருளும், நெய்தற்குரிய அன்றில், பனை என்னும் கருப்பொருள்களும் குறிஞ்சித்திணையினோடு மயங்கி வந்தன.

சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக்
கொலைவி லெயினர் தங்கைநின் முலைய
சுணங்கென நினைதி நீயே
அணங்கென நினையுமென் னுணங்குறு நெஞ்சே. ஐங்குறுநூறு.

இங்கே பாலைத்திணையுள்ளே குறிஞ்சித்திணைக்குரிய புணர்தல் என்னும் உரிப்பொருள் வந்து மயங்கிற்று.

வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழில்
முளைநிரை முறுவ லொருத்தியொடு நெருநற்
குறிநீ செய்தனை யென்ப வலரே
குரவ நீள்சினை யுறையும்
பருவ மாக்குயிற் கவ்வையிற் பெரிதே. ஐங்குறுநூறு.

இங்கே பாலைத்திணையுள் மருதத்திற்குரிய ஊடல் என்னும் உரிப்பொருள் வந்து மயங்கிற்று.

நாளு நாளு மாள்வினை யழுங்க
இல்லிருந்து மகிழ்வோற் கில்லையாற் புகழெனா
ஒண்பொருட் ககல்வர்நங் காதலர்
கண்பனி துடையினித் தோழி நீயே. சிற்றடக்கம்.

இங்கே பாலையுள் முல்லைக்குரிய இருத்தல் என்னும் உரிப்பொருள் வந்து மயங்கிற்று.

வெறுக்கைக்குச் சென்றார் விளங்கிழாய் தோன்றார்
பொறுக்கவென் றாற்பொறுக்க லாமோ—ஒறுக்கம்போற்
பொன்னூறு செம்பவளம் போன்ற புணர்முருக்கம்
என்னூறு நோய்பெரி தே. ஐந்திணை யெழுபது.

இங்கே பாலையுள் நெய்தற்குரிய இரங்கல் என்னும் உரிப்பொருள் வந்து மயங்கிற்று.

இகல்வேந்தன் சேனை யிறுத்த வாய்போல
* * * *
காஞ்சிக்கீழ்ச் செய்தேங் குறி. கலித்தொகை,

இங்கே முல்லையுள்ளே குறிஞ்சிக்குரிய புணர்தல் என்னும் உரிப்பொருள் வந்து மயங்கிற்று.

புறவணி நாடன் காதன் மடமகள்
ஒண்ணுதல் பசப்ப நீசெலிற் றெண்ணீர்ப்
போதவிழ் தாமரை யன்னநின்
காதலம் புதல்வ னழுமினி முலைக்கே. ஐங்குறுநூறு.

இங்கே முல்லையுள்ளே பாலைக்குரிய பிரிதல் என்னும் உரிப்பொருள் வந்து மயங்கிற்று.

பழனக் கம்புள் பயிர்ப்பெடை யகவும்
கழனி யூரநின் மொழிவ லென்றுந்
துஞ்சுமனை நெடுநகர் வருதி
அஞ்சா யோவிவ டந்தைகை வேலே. ஐங்குறுநூறு.

இங்கே மருதத்திணையிலே குறிஞ்சிக்குரிய புணர்தல் என்னும் உரிப்பொருள் வந்து மயங்கிற்று.

சுறவுப்பிற ழிருங்கழி நீந்தி யல்கல்
இரவுக்குறிக் கொண்கன் வந்தனன்
விரவுமணிக்கொடும்பூண்விளங்கிழையோயே. சிற்றட்டகம்.

இங்கே நெய்தற்றிணையிலே குறிஞ்சிக்குரிய புணர்தல் என்னும் உரிப்பொருள் வந்து மயங்கிற்று.

தண்கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற்
கடும்பகல் வருதி கையறு மாலை
கொடுங்கழி நெய்தலுங் கூம்பக்
காலை வரினுங் களைஞரோ விலரே. ஐங்குறுநூறு.

இங்கே நெய்தற்றிணையிலே முல்லைக்குரிய இருத்தல் என்னும் உரிப்பொருள் வந்து மயங்கிற்று.

கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
ஒள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே. ஐங்குறுநூறு.

இங்கே நெய்தற்றிணையிலே மருதத்திற்குரிய ஊடல் என்னும் உரிப்பொருள் வந்து மயங்கிற்று. மற்றவைகளை வந்துழிக் காண்க.

[புறநடை.]

கடுக. கூறிய வல்ல வேறுபிற தோன்றினுங்
கூறிய வற்றொடு கூட்டிக் குறிக்கொளக்
கூறி யுணர்த்தல் குணத்தோர்க் கியல்பே.

இ-ள். இங்கே கூறப்பட்டனவல்லாதனவாகிய வேறு பொருள்கள் பிறவாற்றானே தோன்றுமாயினும் இங்கே கூறப்பட்ட பொருள்களோடு சார்த்தி உண்மைகொள்ளுமாறு சொல்லிப் பிறருக்கு உணர்த்துதல் நற்குணமுடையாருக்கு இலச்சணமாகும் எ-று. (சரு)

ஒழிபியல் முற்றிற்று.

---

அகப்பொருள் முற்றுப்பெற்றது.

# சூத்திரமுதற்குறிப்பகராதி.

# சூத்திரமுதற்குறிப்பகராதி.

# சூத்திரமுதற்குறிப்பகராதி.



